

E-ISSN: 2581-7140







# தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

# INTERNATIONAL JOURNAL OF TAMIL LANGUAGE AND LITERARY STUDIES (Ijtlls)

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

மற்றும்

## மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

(ஆற்றல்சால் பல்கலைக்கழகம்)

தமிழியற்புலம்

## MADURAI KAMARAJ UNIVERSITY

*(University with Potential for Excellence)*

**School of Tamil Studies**

இணைந்து நடத்தும் மாபெரும்

பன்னாட்டுக் கருத்தரங்கம்

# உலகப் பண்பாட்டில் திருக்குறள்

# *Thirukkural* in World Culture

30 ஆகஸ்ட், 2019

இடம் : சேதுபதிக்கூடம், தமிழியற்புலம்

சிறப்பிதழ் 1 : ஆகஸ்ட் 2019

SPECIAL ISSUE I : August 2019



E-ISSN: 2581-7140








# தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

# INTERNATIONAL JOURNAL OF TAMIL LANGUAGE AND LITERARY STUDIES (Ijtlls)

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

மற்றும்

## மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

*(ஆற்றல்சால் பல்கலைக்கழகம்)*

தமிழியற்புலம்

## MADURAI KAMARAJ UNIVERSITY

***(University with Potential for Excellence)***

**School of Tamil Studies**

இணைந்து நடத்தும் மாபெரும்

**பன்னாட்டுக் கருத்தரங்கம்**

# உலகப் பண்பாட்டில் *திருக்குறள்*

# *Thirukkural* in World Culture

30 ஆகஸ்ட், 2019

இடம் : சேதுபதிக்கூடம், தமிழியற்புலம்

சிறப்பிதழ் 1 : ஆகஸ்ட் 2019

**SPECIAL ISSUE I : August 2019**

# PUBLISHER'S MESSAGE

## Aim & Objectives

**International Journal for Tamil Language and Tamil Studies** is an online Peer-Reviewed International Journal published twice in a year on July and January, which is published by **Maheswari Publishers,** patronized by **Pandian Educational Trust, Virudhunagar, Tamil Nadu, India**. It also publishes **Literary Druid, for English Language and Literature (Online)** to foster research in the domain areas**.**

**International Journal for Tamil Language and Tamil Studies** aims to bring down Academic Research to promote research support for the academicians and scholars in the field of Tamil Language and Literature. Research through this medium is motivating in all aspects of main and inter-disciplines by consequent projects and e-publication. Making Internationalization of the research works in the globalized world aid the scholarly community to develop scholarly profile in research through the quality of publications. The audacity and vision of academic research on internet could foster green printing and open access nature in research. All of these motivate best distribution of research that produces positive outcomes for the betterment of the world.

## Disclaimer

**International Journal for Tamil Language and Tamil Studies** is committed to research Ethics and consider plagiarism as a crime. The authors are advised to adhere academic ethics with respect to acknowledgment of quotations from other works. The Publisher & Editors will not be held responsible for any lapse of the provider regarding plagiarism in their manuscripts. The submissions ought to be original, must accompany the declaration form stating your research paper as an original work, and has not been published elsewhere for any research purpose. The contributor will be the sole responsibility for such lapses on any legal issues and publication ethics.

**Contact** ijtllsetamiljournal@gmail.com for submission and other information. See www.ijtlls.com for guidelines.

**D. Maheswari**
**Publisher and Director**

## Message from the Editor-in-Chief

**International Journal for Tamil Language and Tamil Studies** is an online Peer-reviewed International Journal of Tamil Language and Literature which is committed to academic research, welcomes scholars and students all over the world who to advance their status of academic career and society by their scholarly ideas. The journal welcomes publications of quality papers on the domain area.

Research ought to be active to create a major frontier in the academic world. It must augment the neo-theoretical frame that facilitates re-evaluation and augmentation of existing practices and thoughts. In due course, this will effect in a prime discovery and lean to the knowledge acquired. Research is to establish, substantiate facts, restate previous works ant to resolve issues. An active venture to endow cogent approach to these types for educational reformations through academic research has become the central intent of the journal.

**D. Maheswari**

# அணிந்துரை



**முனைவர் த.கண்ணன்**
**பேராசிரியர், தலைவர்**
**அரிய கையெழுத்துச் சுவடித் துறை**
**தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்**

*திருக்குறள்* உலகப் பொதுமறை. திருக்குறள் மட்டுமின்றித் தமிழ் இலக்கியங்கள் அனைத்திலும் உலகந்தழுவிய நோக்கைக் காணமுடிகிறது. “யாதும் ஊரே யாவருங் கேளீர்” என்ற உலகப் பார்வை தமிழ் இலக்கியத்தின் அடிப்படையாகும். உலகத் தாய்மொழியாகவும் முதற்றாய்மொழியாகவும் தமிழ் விளங்குவதால் அதனுள் உலகப்பார்வை இயல்பாகவே பொருந்துகிறது.

உலகப் பண்பாட்டில் திருக்குறள் என்னும் தலைப்பானது உலகப் பண்பாட்டில் திருக்குறள் பெறும் இடத்தை எடுத்துரைப்பதாக அமைக்கப்பட்டுள்ளது. அகிம்சை நெறியில் இந்தியத் திருநாட்டிற்கு விடுதலை பெற்றுத் தந்த காந்திமகானின் கருத்துகளில் லியோ டால்ஸ்டாயின் கருத்துகள் நிரம்பியிருந்தன. லியோ டால்ஸ்டாயின் எண்ணங்களில் திருக்குறள் நிரம்பியிருந்தன. இதன்வழியாகத் தமிழ் மண்ணில் தோன்றிய உலக இலக்கியமான திருக்குறள் உலகரங்கில் பயிலப்பட்டு அதன்விளைவாய் இந்தியத் திருநாட்டிற்கு விடுதலையைப் பெற்றுத் தந்துள்ளதை அறியமுடிகிறது.

வளர்ந்துவரும் தொழில்நுட்பங்கள் மனிதனை ஒருபுறம் வளர்த்துச் சென்றாலும் மறுபுறம் அவனின் வீழ்ச்சிக்கும் காரணமாய் அமைகின்றன. அறிவுப் பெருவூக்கம் ஆயுதக் கலாச்சாரமாய் அமைகிறது. உலகரங்கில் பிரிவினைகளும் போராட்டங்களும் நிகழ்கின்றன. அன்பு எனும் அருள்நெறி அடையாளமின்றிப் போகிறது. அறிவு நன்மைபயப்பனவாய் இருத்தல் வேண்டும் என்பதைக் குறள் “நன்றின்பால் உய்ப்பது அறிவு” என்று சுட்டுகிறது.

உலக மக்களின் மனங்களில் விதைக்கப்பட வேண்டியனவாகத் திருக்குறள் விளங்குகிறது. உலகப் பேரமைப்புகள் திருக்குறளை உலகத்து மொழிகள் அனைத்திலும் மொழிபெயர்த்து அதன்வழியாக உலகத்து மக்கள் அனைவருக்கும் குறள்நெறியைக் கொண்டு சேர்க்க வேண்டிய கடமையினை உணர்ந்துள்ளன. உலக மக்கள் குறள் பிடிக்கும் குடைநிழலில் வாழத்

தொடங்கும் போது எல்லா மக்களின் மனங்களும் இதமாகும். உலகம் அமைதிப் பூங்காவாக உருமாறும்.

பதின்மர் உரை பெற்ற திருக்குறள் இன்று அறிஞர் பலரின் உரைகளையும் பெற்றுச் சிறக்கின்றது. காலந்தோறும் உரைபெற்றுவரும் சிறப்பு இத்திருக்குறளுக்கு உண்டு. பயிலுந்தோறும் இதன் நயம் நன்கு விளங்குகிறது. குறள் எனும் இத்தொகுப்பு நல்கும் மாமருந்து இவ்வுலகத்து மக்களின் அனைத்து நோய்களையும் குணப்படுத்தும் ஆற்றலுடையது. குறள் நெறியை முன்னெடுக்கும் சமுதாயம் வரும் முன்னர் காக்கும் வழியறிந்த சமுதாயமாகப் பார்க்கப்படும்.

வாழ்வை வளப்படுத்தும் நெறிகள் எதுவென்றும் வாழ்விற்கான நோக்கும் போக்கும் எதுவென்றும் தெரியாமலே ஒவ்வொருநாளும் ஓடுகின்றன. ஒவ்வொருநாளிலும் மாந்தன் ஓடுகின்றான். வாழ்வைத் தொலைத்த ஓட்டத்திற்குத் திருக்குறளே நெறியாகும்.

எதிர்கால உலகம் எதிர்கொள்ள வேண்டிய இன்னல்கள் தூரமாய்த் தெரிகின்றன. வெப்பத்தின் மிகுதியால் இப்பூமிப்பந்து வெந்து சாம்பலாகும் காலங்கள் கருத்துக்குள் குத்தூசியாய்க் குத்துகின்றன. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே “நீரின்றி அமையாது உலகு” என்றார் வள்ளுவர். நீண்டுவரும் வறட்சிகள் உலகத்தின் நாவை உலர்த்தப் போகின்றன. பசி உயிரினங்களை உள்நின்று உடற்றப் போகின்றது. இந்நிலையில் உலகநீதியான இத்திருக்குறளை உலக மக்களின் உள்ளங்களில் நிறைக்க வேண்டிய கடமையாற்றுகிறது இந்நூல். உலக மக்கள் நலம்பெற எல்லாம் வல்ல வள்ளுவனை வாழ்த்தி வணங்குவாம்.

**நன்றி**

# பதிப்புரை



**முனைவர் வை. இராமராஜபாண்டியன்**
**பேராசிரியர் மற்றும் புலத்தலைவர்**
**தமிழியல்புலம்**
**மதுரை காமராசர் பல்கலைக்கழகம்**
**மதுரை - 21**

"உலகப் பண்பாட்டில் திருக்குறள்" எனும் பொருண்மையிலான கருத்தரங்கக் கட்டுரைகளின் தொகுப்பாக இந்நூல் அமைகிறது. ஆய்வாளர்களும் ஆய்வறிஞர்களும் எழுதிய அருங்கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன.

தமிழ்ப்போராளி சி.இலக்குவனார் 1968 ஆம் ஆண்டு இறுதியில் சில அறிவிப்புகளை வெளியிட்டார். அதில் கடிதம் எழுதும் முன்னர்த் திருக்குறளை எழுதித் தொடங்க வேண்டும் என்பது. அது முதல் அனைத்துக் கடிதங்களிலும் திருக்குறளை எழுதித் தொடங்கினார். இவரது மடல்களைப் படிக்கும் நண்பர்களும் உறவினர்களும் மறுமடல் எழுதும் பொழுது இவரைப் பின்பற்றித் திருக்குறளை எழுதினர் என்பர். இவை திருக்குறள் வாழ்வியலுடன் இரண்டறக்கலந்த பண்பைக் காணமுடிகிறது.

இலக்கியம் வாழ்வைக் கட்டமைக்கும் தன்மையினவாக அமைதல் வேண்டும். திருக்குறள் இனத்தால், மனத்தால் வேற்றுமையற்ற மாந்த சமுதாயத்தை உருவாக்கி அதற்கு வழிகாட்டும் தன்மையினதாகும். தமிழறிந்த யாவரும் அறிந்த ஒரு இலக்கியமாகத் திருக்குறள் மட்டுமே விளங்குகிறது.

வளர்ந்துள்ள அறிவியல் உலகம் நம் உடலினைப் பல நுண்ணிய பாகங்களாகப் பிரித்தாய்கிறது. எனினும் இன்றைய அறிவியலால் மனித உடலில் உயிர் எங்கு தங்கியுள்ளது என்பதைக் கண்டறிய இயலவில்லை. ஆனால் வள்ளுவர் இந்த உயிரின் இருப்பைக் கண்டறிந்து "அன்பின் வழியது உயிர்நிலை" என்று சுட்டுகிறார். இங்கு உயிருள்ள பொருளெல்லாம் அன்புள்ளனவாக இருத்தல் வேண்டும் என்பதையும் அன்பற்றவைகள் உயிரல்லாப் பொருளாகும் என்பதையும் நன்கு விளக்கியுரைக்கிறார்.

இந்நிலையில் வள்ளுவர் அன்பின் ஆழத்தை எடுத்துரைக்கும் நுட்பம் பிற எம்மொழிக்கும் வாய்த்திடாத நுட்பமாக அமைகிறது.

திருக்குறள் உரைக்கும் பண்பாடு வேற்றுமைகளற்றது, யாவருக்குமானது. எனவே இந்த உலகிற்காக வள்ளுவர் வழங்கியுள்ள பண்பாடுகளை இந்நூல் பல கட்டுரைகளின் வழியாக எடுத்துரைக்கிறது. வள்ளுவர் நெறியறியும் யாவருக்கும் இந்நூல் ஏற்புடைய நூலாக அமைகிறது. ஆய்வாளர்கள் உலகப் பார்வையில் திருக்குறளை நோக்குதற்குரிய ஆய்வுக் களமாய் அமைந்த இக்கருத்தரங்கின் கட்டுரைகள் ஆய்வாளர்கள், ஆய்வறிஞர்கள், ஆர்வலர்கள் என அனைவருக்கும் ஏற்றவகையில் உள்ளன. திருக்குறள் நெறியைப் பரப்பிடவும் குறள்காட்டும் வழியில் வாழ்ந்திடவும் இக்கட்டுரைகள் துணைநிற்கும் என்பதில் ஐயமில்லை. அனைவருக்குமான பயனாய் இந்நூல் இனிதே வெளியிடப்படுகிறது.

**நன்றி**

# நன்றியுரை



**திருமதி. த.மகேஸ்வரி,**
இயக்குநர் மற்றும் பதிப்பாசிரியர் - IJTLLS,
தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்,
விருதுநகர் - 626 001.

தமிழ்மொழி மற்றும் இலக்கியத்திற்காக எமது **தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ் (Ijtlls)** தம் இலக்கிய மற்றும் ஆராய்ச்சி அரும்பணியைச் செம்மையாக செய்து வருகின்றது.

**உலகப் பண்பாட்டில்** ***திருக்குறள்*** என்ற பொருண்மையில் பன்னாட்டுக் கருத்தரங்கம் நடத்தி அதை எமது ஆய்விதழ் வாயிலாக வெளிக்கொண்டுவர ஒப்புதல் அளித்த மதுரை காமராசர் பல்கலைக்கழக நிர்வாகம் மற்றும் தமிழ் துறைத் தலைவர்க்கு எமது நன்றியினை உரித்தாக்குகிறோம்.

இப்பன்னாட்டுக் கருத்தரங்கத்தின் ஓர் அங்கமாக **தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ் (IJTLLS)** செம்மையாய் செயல்பட்டு ஆய்வுக் கட்டுரைகளை இணையத்தில் பதிப்பு செய்து உள்ளது. எதிர்காலத்தில் தமிழ் ஆராய்ச்சிகளை உலக அரங்கத்திற்கு எடுத்துச் செல்ல ஓர் ஆய்வுக்களமாக எமது இதழ் முன்மாதிரியாகச் செயல்பட்டு வருகிறது. அதற்கு உறுதுணை அளித்த அனைவருக்கும் நன்றி.

பன்னாட்டுக் கருத்தரங்கில் தமது ஆய்வை செம்மை நிறுத்தி *திருக்குறள்* வழி தமிழ்மொழி, தமிழர் நாகரிகம், தமிழர் பண்பாடு மற்றும் கலாச்சாரம் போன்ற பொருண்மையில் கிடைத்த தரவுகளைக் கட்டுரைகளாக வழங்கி சிறப்பித்த தமிழ் பேராசிரியர்கள், ஏனைய அனைத்து துறைப் பேராசிரியர்கள், எழுத்தாளர்கள், தமிழ் ஆர்வலர்கள் மற்றும் ஆராய்ச்சி மாணவர்களை மனதார பாராட்டுகிறோம்.

**நன்றி**

# பொருளடக்கம்

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

# காமத்துப்பாலில் இடம்பெறும் குறிப்பு உரிச்சொற்கள்

## Adjectives Found in Kamathuppaal

**க.அருணா தேவி,** ஆய்வியல் நிறைஞர்,
அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரி (தன்னாட்சி), சிவகாசி

## Abstract

*The present aricle is a study on the types of adjectives found in the Kamathuppaal of the universal didactic work "Thirukkural". It comes under the "Pathinenkeelkanakku" Collection. It is chiefly dedicated to the four virtues of tamil tradition. They are Charity, Wealth, Happiness and Liberation. Under these virtues, this Diadactic work is segregated into three parts such as "Arathupaal", "Porutpaal" and "Kamathuppaal". This study focuses and investigates on the indicative adjectives as said by Thiruvalluvar in Kamathuppaal with comparision to Tholkappiar rules of adjectives and usage.*

**Keywords:** Adjectives, *Kamathuppaal*, *Thirukkural*, *Tholkappiam*

### முன்னுரை

*பதிணென்கீழ்க்கணக்கு* நூல்களில் ஒன்று *திருக்குறள்* ஆகும். இந்நூல் "உலகப் பொதுமறை" என்று போற்றப்படுகிறது. இந்நூல் அறம், பொருள், இன்பம், வீடுபேறு அடைதல் என்ற நான்கின் அடிப்படையிலும் மூன்று அதிகாரமாக அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்று அமைக்கப்பட்டுள்ளது. இதில் காமத்துப்பாலில் தொல்காப்பியர் கூறிய குறிப்பு உரிச்சொற்கள் பற்றி ஆய்வதாக இக்கட்டுரை அமைகிறது.

### உரிச்சொல் விளக்கம்

பெயருக்கும் வினைக்கும் அடிச்சொற்களாக அமைவது உரிச்சொற்கள் ஆகும். அவற்றின் இலக்கணத்தை எடுத்துரைப்பது உரியியல் ஆகும். இவ்வியலில் 128 உரிச்சொற்களுக்குப் பொருள் விளக்கம் அமைந்துள்ளது. நால்வகைச் சொற்களுக்கு மட்டும் உரிமைப் பூண்டு வரும் சொற்கள் உரிச்சொற்கள் ஆகும். குறிப்பு, இசை, பண்பு என்னும் பொருள் உணர்த்துவதற்குத் தாமே உரியன ஆதலின் உரிச்சொல் என்று பெயர் பெற்றது என்றும் கொள்ளலாம்.

### தொல்காப்பியர் கூறும் குறிப்பு உரிச்சொற்கள்

1. உறு, தவ, நனி, 2. உரு, 3. புரை, 4. செல்லல், இன்னல், 5. மல்லல், 6. ஏ, 7. உகப்பு, 8. உவப்பு, 9. பயப்பு, 10. அலமரல், தெருமரல், 11. மழ, குழ, 12. சீர்த்தி, 13.மாலை, 14. கூர்ப்பு, கழிவு, 15. கதழ்வு, துனைவு, 16. அதிர்வும், விதிர்ப்பும், 17. கெடவரல், பண்ணை, 18. தீர்தல், தீர்த்தல், 19. பழுது, 20. முழுது, 21.வம்பு, 22. காதல், 23. நம்பு, மேவும், 24. ஓய்தல், ஆய்தல், நிழத்தல், சாஅய், 25. புலம்பு, 26. துவன்று, 27. முரஞ்சன், 28. பொற்பு, 29. வறிது, 30. ஏற்றம், 31. பிணை, 32. பணை, 33. படர், 34. பையுள், சிறுமை, 35. எய்யாமை, 36. நன்று, 37. தா, 38. தெவு, 39. தெவ்வு, 40. விறப்பு, உறப்பு, வெறுப்பு, 41. விறப்பு, 42. அழுங்கல், 43. கழுமு, 44. கருவி, 45. விழுமம், 46. அரி, 47. கவவு, 48. இரங்கல், 49. இலம்பாடு, ஒற்கம், 50. ஞெமிர்தல், பாய்தல், 51. கவர்வு, சேர், வியல், 52.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

பேம், உரும், 53. கறுப்பு, சிவப்பு, 54. புனிறு, 55. நனவு, 56. மத, 57. வனப்பு, 58. யாணர், 59. அமர்தல், 60. யாண், 61. பரவு, பழிச்சு, 62. கடி, 63. ஐ, 64. முனைவு, 65. உயா, 66. உசா, 67, வயா என அறுபத்தியேழு குறிப்பு உரிசொற்களை தொல்காப்பியர் எடுத்தியம்பியுள்ளார்.

**காமத்துப்பாலில் இடம் பெறும் குறிப்பு உரிச்சொற்கள்**

திருக்குறளில் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்று மூன்று அதிகாரம் உள்ளது. இதில் இறுதியில் அமைந்துள்ள காமத்துப்பாலில் தொல்காப்பியர் கூறியுள்ள குறிப்பு உரிச்சொற்களான ஆய்தல், மாதர், பிணை, உறு, கருப்பு, ஏ, மாலை, பேம், தா, பசப்பு, பயப்பு, கடி, புலம்பு, நனவு, படர், தவ என்னும் பதினாறு குறிப்பு உரிச்சொற்கள் மட்டுமே குறிப்பிடப்படுகின்றன.

**ஆய்தல் என்னும் உரிச்சொல்**

ஆய்தல் என்னும் குறிப்பு உரிச்சொல் நுணுக்கம் என்ற பொருளை உணர்த்துகின்றன. இதனை,

**அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை**
**மாதர்கொல் மாலும் என்நெஞ்சு** (குறள் - 1081)

திருக்குறளில் வள்ளுவர் ஆய்தல் என்னும் சொல் நுணுக்கம் என்ற பொருளை உணர்த்துவதாக காமத்துப்பாலில் வள்ளுவர் கூறியுள்ளார் என்பதை அறிய முடிகிறது. ஆய்தல் என்னும் குறிப்பு உரிச்சொல் தொல்காப்பியர் கூறியுள்ள படியே வள்ளுவரும் திருக்குறளில் எடுத்தியம்பியுள்ளதை அறிய முடிகிறது.

**பிணை என்னும் உரிச்சொல்**

பிணை என்னும் குறிப்பு உரிச்சொல் பாதுகாத்தல் என்ற பொருளினை உணர்த்துகின்றன. இதனை,

**கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்**
**நோக்கம் இம்மூன்றும் உடைத்து** (குறள் - 1085)

வள்ளுவர் திருக்குறளில் பிணை என்னும் சொல் பெண் என்பதை உணர்த்துகின்றன. தொல்காப்பியர் பிணை என்பதை பாதுகாத்தல் என்று கூறியுள்ளதை வள்ளுவர் குறளில் பிணை என்பதற்கு பெண் என்பதை எடுத்துரைப்பதை அறிந்து கொள்ள முடிகிறது.

**மாதர் என்னும் உரிச்சொல்**

தொல்காப்பியர் மாதர் என்னும் குறிப்பு உரிச்சொல் காதல் என்னும் பொருளை உணர்த்துகின்றன. இதனை,

**கடாஅக் களிற்றின்மேல் கட்படாம் மாதர்**
**படாஅ முலைமேல் துகில்** (1087. குறள்)

வள்ளுவர் மாதர் என்னும் சொல்லினை பெண் என்று எடுத்தியம்பியுள்ளார். மாதர் என்ற சொல்லிற்கு ‘காதல்’ என்று தொல்காப்பியர் பொருள் கூறியுள்ளதையும், வள்ளுவர் ‘பெண்’ என்று எடுத்தியம்பியுள்ளதையும் அறியமுடிகின்றது.

**அரி என்னும் உரிச்சொல்**

தொல்காப்பியர் அரி என்னும் குறிப்பு உரிச்சொல்லிற்கு மென்மை என்ற பொருளினை கூறியுள்ளார். இதனை,

**தம்இல் இருந்து தமதுபாத்து உண்டாற்றல்**
**அம்மா அரிவை முயங்கு** (1107. குறள்)

வள்ளுவர் குறளில் அரி என்னும் சொல்லிற்கு பொருள் பெண் என்று எடுத்தியம்பியுள்ளார். தொல்காப்பியர் அரி என்னும் சொல்லினை மென்மை என்று கூறியுள்ளதை வள்ளுவர் குறளில் அரி என்ற சொல்லிற்கு பெண் என்று எடுத்தியம்பியுள்ளதையும் அறிய முடிகிறது.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**கரு என்னும் உரிச்சொல்**

தொல்காப்பியர் கரு என்னும் குறிப்புஉரிச்சொல் நிறத்தினை குறிப்பதாக எடுத்தியம்பியுள்ளார். இதனை,

**கருமணியிற் பாவாய்நீ போதாய் யாம்வீழும்**
**திருநுதற்கு இல்லை இடம்** (1123. குறள்)

வள்ளுவர் கரு என்னும் சொல் நிறத்தினை குறிப்பதாக எடுத்தியம்பியுள்ளார். தொல்காப்பியரும், வள்ளுவரும் கரு என்னும் சொல்லிற்கு நிறம் என்ற ஒரே பொருளினை எடுத்தியம்பியுள்ளனர்.

**ஏ என்னும் உரிச்சொல்**

தொல்காப்பியர் ஏ என்னும் குறிப்பு உரிச்சொல் பெற்று என்னும் பொருளினை எடுத்தியம்பியுள்ளார். இதனை,

**காமக் கடல்மன்னும் உண்டே அதுநீந்தும்**
**ஏமப் புணைமன்னும் இல்** (1164. குறள்)

வள்ளுவர் ஏ என்னும் சொல்லிற்கு பாதுகாப்பு என்னும் பொருளினை குறிப்பிட்டுள்ளார். தொல்காப்பியர் ஏ என்னும் பெற்று என்று கூறியுள்ளதை வள்ளுவர் ஏ என்னும் சொல்லிற்கு பொருள் பாதுகாப்பு என்ற சொல்லினை எடுத்தியம்பியுள்ளதை அறிய முடிகிறது.

**தா என்னும் உரிச்சொல்**

தொல்காப்பியர் தா என்னும் குறிப்பு உரிச்சொல் வலிமைவருத்தம் என்னும் பொருளினைக் குறிப்பிட்டுள்ளார். இதனை,

**ஓஒஇனிதே எமக்கு இந்நோய் செய்தகண்**
**தாஅம் இதன் பட்டது** (1176. குறள்)

வள்ளுவர் தா என்னும் சொல்லினை தாமும் தூங்காமல் அழுது கொண்டு இருப்பது என்ற பொருளினை குறிப்பிடுகிறார். தொல்காப்பியரும், வள்ளுவரும் தா என்னும் சொல்லிற்கு வருத்தம் என்னும் ஒரே பொருளினை தருவதாக எடுத்தியம்பியுள்ளதை அறியமுடிகிறது.

**நனவு என்னும் உரிச்சொல்**

தொல்காப்பியர் நனவு என்னும் குறிப்பு உரிச்சொல் அகலம் என்னும் பொருளினை தருவதாக எடுத்தியம்பியுள்ளார். இதனை,

**நனவுஎன ஒன்று இல்லைஆயின் கனவினால்**
**காதலர் நீங்கலர் மன்** (1216)

வள்ளுவர் நனவு என்னும் சொல்லிற்கு நினைப்பு என்னும் பொருளினை குறியள்ளார். தொல்காப்பியர் நனவு என்னும் சொல்லிற்கு அகலம் என்று எடுத்தியம்பியுள்ளதை வள்ளுவர் நனவு என்னும் சொல்லிற்கு நினைப்பு என்னும் பொருளினை குறிப்பிட்டுள்ளதை அறிய முடிகிறது.

**மாலை என்னும் உரிச்சொல்**

தொல்காப்பியர் மாலை என்னும் குறிப்பு உரிச்சொல்லினை இயல்பு என்னும் பொருளினை குறிப்பிடுகிறார். இதனை,

**தொடலைக் குறுந்தொடி தந்தாள் மடலொடு**
**மாலை உழக்கும் துயர்** (1135. குறள்)

வள்ளுவர் மாலை என்னும் சொல்லிற்கு மாலைப் பொழுதின் இயல்பினை குறிப்பிடுகிறார். தொல்காப்பியரும், வள்ளுவரும் மாலை என்னும் சொல்லிற்கு ஒரே பொருளினை குறிப்பிடுவதை அறிய முடிகிறது.

**பேம் என்னும் உரிச்சொல்**

தொல்காப்பியர் பேம் என்ற குறிப்பு உரிச்சொல்லிற்கு நாம் என்னும் பொருளினை குறிப்பிடுகிறார். இதனை,

**நெய்யால் எரிநுதுப்பேம் என்றற்றால் கௌவையால்**

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**காமம் நுதுப்பேம் எனல் (1148. குறள்)**

வள்ளுவர் பேம் என்ற சொல்லிற்கு அவித்துவிடுவோம் என்னும் பொருளினை குறிப்பிடுகிறார். தொல்காப்பியர் பேம் என்ற சொல்லிற்கு நாம் குறிப்பிடுவதை வள்ளுவர் பேம் என்ற சொல்லிற்கு அவித்துவிடுவோம் என்ற பொருளினை குறிப்பிடுவதையும் அறியமுடிகிறது.

**பயப்பு என்னும் உரிச்சொல்**

தொல்காப்பியர் பயப்பு என்ற குறிப்பு உரிச்சொல்லிற்கு பயன் என்னும் பொருளினை குறிப்பிடுகிறார். இதனை,

**வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு**
**வீழ்வார் அளிக்கும் அளி (1192. குறள்)**

வள்ளுவர் பயப்பு என்ற சொல்லினை மழைக் காலம் அறிந்து வந்து பெய்தல் என்னும் பொருளினை தருவதாக குறிப்பிடுகிறார். தொல்காப்பியரும், வள்ளுவரும் பயப்பு என்னும் சொல்லிற்கு பயன் என்னும் ஒரே பொருளினை தருவதாக எடுத்தியம்பியுள்ளதை அறிய முடிகிறது.

**கடி என்னும் உரிச்சொல்**

தொல்காப்பியர் கடி என்ற குறிப்பு உரிச்சொல்லிற்கு நீக்கதல், கூர்மை, காவல், புதுமை, வரைவுவிளக்கம், மிகுதி, சிறப்பு, அச்சம் என்னும் பல்வேறு பொருளினை தருவதாக குறிப்பிடுகிறார். இதனை,

**தம்நெஞ்சத்து எம்மைக் கடிகொண்டார் நாணார்கொல்**
**எம்நெஞ்சத்து ஒவா வரல் (1205. குறள்)**

வள்ளுவர் கடி என்ற சொல்லிற்கு காவல் என்னும் பொருளினை குறிப்பிட்டுள்ளார். தொல்காப்பியரும், வள்ளுவரும் கடி என்னும் சொல்லிற்கு ஒரே பொருளினை எடுத்தியம்பியுள்ளனர்.

**படர் என்னும் உரிச்சொல்**

தொல்காப்பியர் படர் என்ற குறிப்பு உரிச்சொல்லிற்கு செலவு என்னும் பொருளினை குறிப்பிடுகிறார். இதனை,

**பதிமருண்டு பைதல் உழக்கும் மதிமருண்டு**
**மாலை படர்தரும் போழ்து (1229. குறள்)**

வள்ளுவர் படர் என்னும் சொல்லிற்கு துன்பம் என்ற பொருளினை குறிப்பிடுகிறார். தொல்காப்பியர் படர் என்ற சொல்லினை செலவு என்று குறிப்பிடுவதை வள்ளுவர் படர் என்ற சொல்லிற்கு துன்பம் என்னும் பொருளினை எடுத்தியம்புவதை அறியமுடிகிறது.

**தவ என்னும் உரிச்சொல்**

தொல்காப்பியர் தவ என்ற குறிப்பு உரிச்சொல்லிற்கு மிகுதி என்னும் பொருளினை குறிப்பிடுகிறார். இதனை,

**உறாஅ தவர்க்கண்ட கண்ணும் அவரைச்**
**செறாஅர் எனச் சேறிஎன் நெஞ்சு (1292. குறள்)**

வள்ளுவர் தவ என்னும் சொல்லிற்கு மீகுதி என்ற பொருளினை குறிப்பிடுகிறார். தொல்காப்பியரும், வள்ளுவரும் தவ டின்னும் சொல்லிற்கு மிகுதி என்னும் ஒரே பொருளினை குறிப்பிடுவதை அறியமுடிகிறது.

**முடிவுரை**

தொல்காப்பியர் சொல்லதிகார உரியியலில் அறுபத்தியேழு குறிப்பு உரிச்சொற்களை எடுத்தியம்பியுள்ளார். தொல்காப்பியர் குறிப்பிடுவதை போன்று வள்ளுவர் அனைத்து உரிச்சொற்களையும் பின்பற்றவில்லை. வள்ளுவர் திருக்குறளில் பதினாறு உரிச்சொற்களை மட்டுமே பின்பற்றியுள்ளார். தொல்காப்பியரும், வள்ளுவரும் தா, ஆய்தல், கருப்பு, மாலை, உறு, பயப்பு, கடி, படர், தவ என்னும் சொல்லிற்கு ஒரே பொருளினை குறிப்பிடுவதை அறியமுடிகிறது. தொல்காப்பியர் மாதர், நனவு, பிணை, அரி, ஏ, பேம் சொற்களுக்கு

**E-ISSN: 2581-7140**
**Special Issue I, August-2019** **Available at: www.ijtlls.com**

வள்ளுவர் வேறொரு பொருளினை எடுத்தியம்புவதையும் அறியமுடிகிறது. தொல்காப்பியர் குறிப்பிடும் குறிப்பு உரிச்சொற்கள் பற்றி வள்ளுவரின் திருக்குறள் உணர்த்தும் காமத்துப்பால் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது.

**பயன்பட்ட நூல்கள்**

1. குன்றக்குடி அடிகளார், குறட்செல்வம்,
2. திருக்குறள் - க.ப. அறவாணன், தாயமாள் அறவாணன் அறக்கட்டளை, சென்னை.
3. தமிழண்ணல், தொல்காப்பியம், மீனாட்சி புத்தக நிலையம், மதுரை

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com


# திருக்குறளில் சங்கப் பொருண்மை

# The Genres of Sangam in *Thirukkural*

**முனைவர் ப. அன்பரசி,** உதவிப்பேராசிரியர்
இளங்கலைத் தமிழ்த்துறை, அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரி (தன்னாட்சி), சிவகாசி.

## Abstract

*The aricle is a study on the Sangam Genres as found in the Universal Treatise "Thirukkural". Sangam Literature is mainly full of life and its virtues. It tell us of the lives lived by the Sangam Tamil People and their societal life. "Thirukkural" is considered all over the world as Universal Moral Treatise which evinces ultimate truth whoever comes through it.for examples to justify the paper uses the sayings on king, wife, hospitality, trade, balanced nature, envy and other states and walks of life. Hence, this study investigates on the mode of identifying the similarities of ethical virtues and other life related values in it.*

**Keywords:** Genres of Sangam, *Thirukkural*

### முன்னுரை

உயர்ந்த கருத்துக்களைப் பதிவு செய்வனவாகக இலக்கியங்கள் அமைகின்றன. அவற்றில் பதிவு செய்யப்பட்டுள்ள அக்கருத்துக்கள் அதற்குப் பிந்தைய காலத்தில் மக்கள் சமுதாத்தாலும் அதற்குப் பின்பு தோன்றும் இலக்கியங்களாலும் மீண்டும் பயன்படுத்தப்படும். அவ்வகையில் சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்பட்ட கருத்துக்கள் அதற்குப் பின்பு தோன்றிய திருக்குறளில் இடம்பெறுள்ளமையை ஆராய்வதாக இவ் ஆய்வுக்கட்டுரை அமைகின்றது.

### பொருண்மை ஒப்புமை

சங்க இலக்கியம், நீதி இலக்கியம் இரண்டிற்கும் இடையே பொருண்மையில் பல ஒப்புமைகள் காணப்படுகின்றன. சங்க இலக்கியம், நீதி இலக்கியங்களுள் ஒன்றான திருக்குறள் இரண்டிற்கும் இடையே உள்ள பொருண்மை ஒப்புமை அதிகம். அவ்வொப்புமையை இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம். அவை.

1. சொற்பொருள் ஒப்புமை
2. பொருள் ஒப்புமை

### சொற்பொருள் ஒப்புமை

சொல்லும் அது தரும் பொருளும் பெரும்பாண்மை ஒன்றே போல் அமைவது சொற்பொருள் ஒப்புமை எனப்படும்.

அன்புடையவர்கள் விருப்பத்துடன் முன்னால் அமர்ந்து நஞ்சினைக் கொடுத்தாலும் அதனை விரும்பி வாங்கி உண்பதே நாகரிகம் உடையவர்களின் செயல் என்பதை நற்றிணை,

**"முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின்**
**நஞ்சும் உண்பர்நனி நாகரிகர்"** **(நற்றிணை, 355. 6-7)**

எனவும் திருக்குறள்,

**"பெயக்கண்டும் நஞ்சுஉண்டு அமைவர் நயத்தக்க**

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**நாகரிகம் வேண்டு பவர்" (திருக்குறள், 500)**

எனவும் பதிவு செய்துள்ளன.

**நீர் இல்லாமல் உலகம் இயங்காது என்பதை**

**"நீரின் றமையா உலகம்" (நற்றிணை, 1.6)**

என்ற அடியில் நற்றிணையும்,

**"நீரின் றமையா துலகு" (திருக்குறள், 20)**

என்ற அடியில் திருக்குறளும் விளக்கியுள்ளன. மேற்குறிப்பிட்ட அடிகளில் இடம்பெற்ற சொற்களில் பெரும்பான்மை சங்க இலக்கியம் திருக்குறள் இரண்டிலுமே ஒன்று போல் அமைந்துள்ளன. அது தரும் பொருளும் அவ்வாறே உள்ளன.

**பொருள் ஒப்புமை**

சொற்கள் வேறாக அமைந்து அச்சொற்கள் தரும் பொருள் ஒன்றுபோல் அமைவது பொருள ஒப்புமை எனப்படும். திருக்குறள் சங்க இலக்கியம் இரண்டிலும் பல்வேறு பொருட்கள் அவ்வாறு அமைந்துள்ளன.

அறம்

மனிதர்களின் வாழ்வில் அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கும் முக்கியம். அவற்றில் முதலாவது நிற்பது அறம். அத்தகைய அறம் மட்டுமே சிறப்பு, செல்வம் இரண்டையும் கொடுக்கும் என்பதை,

**"சிறப்பீனும் செல்வமும் ஈனும் அறத்தினூங்**

**காக்கம் எவனோ உயிர்க்கு" (திருக்குறள், 31)**

என்ற குறளில் திருக்குறளும்

**"சிறப்புடை மரபின் பொருளும் இன்பமும்**

**அறத்துவழிப்படூஉம் தோற்றம்" (புறநானூறு, 31.1-2)**

என்ற புறநானூற்றுப் பாடலும் விளக்ககின்றன.

**மனைவி**

மனைக்கு விளக்கம் மனைவி ஆவாள். அவளை கணவனைத் தெய்வமாகத் தொழுது வாழ வேண்டும். அவ்வாறு கணவனைத் தொழுது வாழும் பெண்கள் மழையைப் பெய் என்றால் பெய்யும் என்பர். அதனை,

**"தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்**

**பெய்யெனப் பெய்யும் மழை" (திருக்குறள், 55)**

என்ற குறளில் வள்ளுவர் விளக்கியுள்ளார். அதனையே கலித்தொகை பெண்கள் கணவனைத் தொழுவதால் பிழை செய்ய மாட்டாதவராக உள்ளனர் என்பதை,

**"…………………… குறவர் மடமகளிர்**

**தாம் பிழையார் கேள்வர்த் தொழுதுஎழலால்" (கலித்தொகை, 39.16-17)**

என்ற அடிகளில் விளக்கியுள்ளது.

**விருந்து**

பழங்கால மக்கள் தங்கள் இல்லறக் கடமைகளுள் இன்றியமையாக் கடமை விருந்தை எண்ணினர். அவ்வாறு விருந்தினர் இருக்கும்பொழுது சாவா மருந்தாகிய அமிழ்தம் கிடைப்பதானாலும் தனியாக உண்ணக் கூடாது என்பர். அதனை,

**"விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா**

**மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று" (திருக்குறள், 82)**

எனத் திருக்குறளும் அதனையே,

**"............................................... இந்திரர்**

**அமிழ்தம் இயைவதாயினும் இனிதெனத்**

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**தமியர் உண்டலும் இலரே" (புறநானூறு, 182.1-3)**

எனப் புறநானூறும் விளக்குகின்றன.

நன்றி

ஒருவர் நமக்குச் செய்த உதவியை என்றும் மறத்தல் கூடாது. ஆனால் நன்றல்லாததை உடனே மறத்தல் வேண்டும் என்பதை,

**"நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லது**
**அன்றே மறப்பது நன்று" (திருக்குறள், 108)**

எனத் திருக்குறளும்,

**"ஒற்கத்துள் உதவியார்க்கு உதவாதான் மற்றவன்**
**எச்சத்துளாயினும் அ∴து எறியாது விடாதேகாண்" (கலித்தொகை, 149.6-7)**

எனக் கலித்தொகையும் விளக்குகின்றன.

எதை மறந்தாலும் அவர்களுக்கு உய்வுண்டு. ஆனால், செய்ந்நன்றியை மறந்தவர்களுக்கு உய்வில்லை என்பதை,

**"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை**
**செய்ந்நன்றி கொன்ற மகற்கு" (திருக்குறள், 110)**

என்று திருக்குறளும்,

**"நிலம்புடை பெயர்வதாயினும் ஒருவன்**
**செய்திகொன் றார்க்குஉய்தி இல்லென**
**அறம்பா டிற்றே" (புறநானுறு, 34.5-7)**

எனப் புறநானூறும் சுட்டுகின்றன.

**நடுவுநிலைமை**

சான்றோர் தூலாக்கோல் போன்று நடுவுநிலைமையுடன் இருத்தல் வேண்டும். தன்னிடம் உள்ள பொருளை சமமாக இருந்து வரையறுக்கும் தூலாக்கோல் போல் சான்றோரும் ஒருதிறம் படாது இருத்தல் வேண்டும் என்பதை,

**"சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்தொருபால்**
**கோடாமை சான்றோர்க் கணி" (திருக்குறள், 118)**

எனத் திருக்குறளும்,

**"தெரிகோல் ஞமன் போல ஒருதிறம்**
**மற்றல் இலியரோ" (புறநானூறு, 6.9-10)**

எனப் புறநானூறும் புலப்படுத்தியுள்ளன.

**வணிகர்**

வணிகர் தம்பொருளையும் பிறர் பொருளையும் ஒன்றாகக் கருதி எடுக்கும் பொழுது மிகுதியாக எடுக்காமலும் பிறருக்குக் கொடுக்கும் பொழுது குறைவாகக் கொடுக்காமலும் இருந்து வாணிகம் செய்ய வேண்டும் என்பதை,

**"வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்**
**பிறவும் தம்போற் செயின்" (திருக்குறள், 120)**

எனத் திக்குறளும்,

**"தமவும் பிறவும் ஒப்ப நாடி**
**கொள்வதூஉம் மிகை கொளாது**
**கொடுப்பதூஉம் குறைகொடாது**
**பல்பண்டம் பகர்ந்து வீசும்" (பட்டினப்பாலை. 209 - 212)**

எனப் பட்டினப்பாலையும் தெளிவிக்கின்றன.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**பொறை**

பொறை கடலினும் பெரிது என்பர். தம்மை இகழ்ந்தவரைக் கூட வெறுக்காது பொறுமையாக இருத்தல் வேண்டும் என்பதை,

**"அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை**
**இகழ்வார்ப் பொறுத்தல் தலை" (திருக்குறள், 120)**

எனத் திருக்குறளும்,

**"பொறை எனப்படுவது போற்றாரைப் பெறுத்தல்" (புறநானூறு, 133.14)**

எனப் புறநானூறும் கூறுகின்றன.

**பிறர் துன்பம்**

பிறிதொரு உயிருக்கு உண்டாகும் நோயைத் தன் நோய் போல் நினைப்பது மனித இயல்புகளில் ஒன்றாகும். அவ்வாறு வருந்தமல் இருந்தால் அறிவுடையோராக இருந்தாலும் அதனால் எந்த ஒரு பயனும் உண்டாகாது என்பதை,

**"அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதினோய்**
**தன்நோய்போல் போற்றாக் கடை" (திருக்குறள், 315)**

என்று திருக்குறள் கூறுகின்றது. அதனையே கலித்தொகை சான்றோரின் கடமை எனக் கூறுகின்றது. அதனை,

**"பிறர்நோயும் தன்நோய்போல் போற்றி அறனறிதல்**
**சான்றவர்க் கெல்லாம் கடன்" (கலித்தொகை, 139.2-3)**

என்ற அடிகளால் அறியலாம்.

**பொதுமை எண்ணம்**

உலகில் உள்ள அனைத்து ஊரும் நமது ஊர்; அனைத்து மக்களும் நம்முடைய உறவினர் என்ற பொதுமை எண்ணத்தைப் புறநானூறு,

**"யாதும் ஊரே; யாவருங் கேளீர்" (புறநானூறு, 192.1)**

என்று கூறுகின்றது. அதே போன்று கற்றவர்களுக்கு ஊர், நாடு அனைத்தும் பொது என்பதைத் திருக்குறள்,

**"யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்**
**சாந்துணையும் கல்லாத வாறு" (திருக்குறள், 397)**

என்று கூறுகின்றது. திருக்குறள் கற்றவர்களுக்கு என்று கூறியதைப் புறநானூறு மக்கள் அனைவருக்கும் பொதுவாகக் குறிப்பிட்டுள்ளது.

**அரசன்**

மக்களைப் பொதுவாக வரிசையறிந்து அவர்தம் தகுதிக்கேற்ப நோக்கி அரசன் ஆட்சி நடத்துதல் வேண்டும். அவ்வாறு வாழும் அரசரைச் சார்ந்து அவனது சுற்றத்தார் பலர் வாழ்வர் என்பதை,

**"பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்**
**அதுநோக்கி வாழ்வார் பலர்" (திருக்குறள், 528)**

எனத் திருக்குறளும் அதனையே அறிவுரையாக,

**"ஒருதிசை ஒருவனை உள்ளி நாற்றிசைப்**
**பலரும் வருவர் பரிசில் மாக்கள்**
**வரிசை அறிதலோ அரிதே பெரிதும்**
**ஈதல் எளிதே மாவண் தோன்றல்**
**அதுநற் கறிந்தனை யாயின்**
**பொதுநோக் கொழுமதி புலவர் மாட்டே" (புறநானூறு, 121)**

எனப் புறநானூறும் சுட்டியுள்ளன.

**E-ISSN: 2581-7140**
**Special Issue I, August-2019** **Available at: www.ijtlls.com**

**முடிவுரை**

முற்காலத்தில் கூறப்பட்ட கருத்துக்கள் காலந்தோறும் வளர்வது செவ்வியல் பண்புகளுள் ஒன்றாகும். அவ்வகையில் சங்க இலக்கியங்களில் கூறப்பட்ட சமூகத்திற்கு என்றும் பயன் விளைவிக்கும் மனிதப்பண்பு, அறம், மனையாள் தன்மை, அரச இலக்கணம் ஆகியவை திருக்குறளில் உயர்வாகப் போற்றப்பட்டுள்ளன.

**பயன்பட்ட நூல்**

1. கு.வெ.பாலசுப்பிரமணியன், சங்க இலக்கியம் (தொகுதி) நியூ செஞ்சுரி புத்தக நிறுவனம், சென்னை.
2. பரிமேலழகர் உரை, திருக்குறள்.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

# திருக்குறளில் உழவு

## Agriculture in Thirukkural

**க.அனுராதா,** ஆய்வியல் நிறைஞர்,
அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரி (தன்னாட்சி), சிவகாசி.

### Abstract

*The aricle scrutinies on the importance of agriculture and its need as told in the edifying work "Thirukkural". Agriculture is a vital one for the living beings. Even these agricultural methods are foundby developed socities, Tamil people arte the ones who are an ancient agricultural society keeping the values of farming from the past to the present. Ancient faming methods are really a boon for us and very poignant to notice. It is really a helpful source to human life. The methods followed by the Tamil people at the times of Thiruvalluvar are depicted in "Thirukkural" Hence, this study investigates on the glimpses of the evidences based on the taken source and gives the details about it.*

**Keywords:** Agriculture, *Thirukkural*, Tamil Society

**முன்னுரை**

உலக மொழிகளில் முதன்மையான மொழி தமிழ் மொழியாகும். தமிழ் மொழி மிகத் தொன்மையான மொழி என்பர். இத்தொன்மையான மொழி இலக்கண, இலக்கியங்களை அடிப்படையாகக் கொண்டு சிறப்பிடம் பெற்றுள்ளது. இவற்றுள் பல்வேறு அறிஞர்களால் பன்முக நோக்கில் ஆராயப்படும் திருக்குறளும் ஒன்றாகும். மனிதனின் அடிப்படைத் தேவைகளுள் ஒன்று உணவு. உணவிற்கு அடிப்படையானது உழவுத் தொழில். ஆகையால் உழவர்கள் பற்றியும், உழவுத் தொழில் பற்றியும் ஆராய்வதாக இக்கட்டுரை அமைகிறது.

**உழவர்**

உலகிலேயே மிகச் சிறந்ததாக 'அறம்' கருதப்படுகிறது. அறத்தை முதன்மையாக வைத்து ஔவையாரும் ஆத்திச்சூடியில் 'அறம் செய விரும்பு' என்று பாடல் வரிகள் மூலம் மனிதன் அறச்செயலை செய்ய விரும்ப வேண்டும் என்று கூறியுள்ளார். இதனை,

> **"இரவார் இரப்பார்க்கொன்று ஈவர் கரவாதும்**
> **கைசெய்தூண் மாலை யவர்." (குறள் 1035)**

என்ற குறட்பா மூலம் உழவுத்தொழில் செய்யும் உழவர்கள் தம் கையால் உழுது அதன் மூலம் கிடைக்கும் உணவுப் பொருட்களை மற்றவர்களுக்கு உதவுவார்கள். மற்றவர்களிடம் இருந்து பொருள் எதுவும் கேட்டு வாங்க மாட்டார்கள். உழவர்கள் தங்களுடைய தொழிலை நேர்மையாகவும் அறத்தோடும் உழைப்பார்கள். இவர்கள் தாமாகவே உணவை உற்பத்தி செய்வதால் யாரிடமும் கையேந்தும் நிலை ஏற்படாது என்று நம்பிக்கையாக இருப்பார்கள். இவர்களிடம் உதவி என்று பிறர் வந்தால் எந்தவித பலனையும் எதிர்பாராமல் உதவி செய்வர். இப்படிப்பட்ட சிறப்பு பெற்றவர்கள் உழவர்கள்.

**உழவும் பயிரின் செழிப்பும்**

தமிழ் அகராதி உழவு என்பதற்கு 'கலப்பையால் மண்ணை கயிறுவிடும் செயல்'

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

என்று கூறுகின்றன. உழவுத் தொழில் செய்வது எளிமையான செயல் அல்ல. உழவுத்தொழிலில் ஆழ்ந்த அனுபவமும். திறமையும் இருக்க வேண்டும். ஆழ்ந்த அனுபவம் உடையவர்களையே உழவர்கள் என்று கூறுவர். பயிர் வளர்வதற்கு முதலில் உழத வேண்டும். உழவு என்பது மாட்டின் மீது கலப்பையை வைத்து மண்ணை ஒரே சீராக தோண்டிவிட வேண்டும். பயிர் வளர்வதற்கு உரத்தை பயன்படுத்துவார்கள். உரம் என்பது ஆடு மாட்டுக் கழிவுகள் மற்றும் முதலில் பயிரிட்டு முடித்த இலை மற்றும் செடிகள், தட்டைகள் போன்றவைகளை அப்படியே நிலத்தின் மீது போடுவர். உழுத பின் சில நாள்கள் காய விட வேண்டம். அப்படிக் காய விட்ட நிலத்தில் விளையும் பயிர்கள் செழித்து வளரும் என்பதை,

**“தொடிப்புழுதி க.்.சா உணக்கின், பிடித்தெருவும்**
**வேண்டாது சாலப் படும்.” (குறள் 1037)**

என்ற குறட்பா மூலம் அறிய முடிகிறது. உழவின் சிறப்பை உணர்த்துவதற்காக “அகல உழுவதை விட ஆழ உழுவதே மேல்” என்னும் பழமொழியும் உணர்த்துகிறது. ஆழ உழுவதால் மட்டுமே பயிர்கள் செழித்து வளரும் என்று புலப்படுகிறது.

**விதையும், வளர்ச்சி நிலையும்**

உழவுத்தொழிலில் அதிக விளைச்சலை அடைவதற்கு ‘விதை’ முக்கிய காரணமாகும். விதை தரமானதாக இருந்தால் மட்டுமே பயிர்கள் நன்கு விளையும். விதை தரமானதாக இல்லையென்றால் விளைச்சலும் அதிக அளவில் இருக்காது. விதையை நன்கு காய வைத்து பதப்படுத்தி அதன் பின்னரே விதைக்க வேண்டும். நிலத்தின் மண்ணிற்கு ஏற்ற விதையினை விதைத்தால் அதிக அளவில் பயிர்கள் நன்கு வளர்ச்சியடையும். விதைப்பதற்கு முன் காலம் மிக முக்கியமானவையாகும். பருவ காலத்தில் விதைத்தால் பயிர்கள் செழிப்பாக வளர்ச்சியடையும். “பருவத்தே பயிர் செய்”, “ஆடிப்பட்டம் தேடி விதை” என்ற பழமொழிக்கு ஏற்றவாறு உழவர்களும் இயற்கைச் சூழலோடு வாழ்கின்றன. இதனை வள்ளுவர்,

**“பருவத்தோடு ஒட்ட ஒழுகல் திருவினைத்**
**தீராமை ஆர்க்கும் கயிறு.” (குறள் 482 )**

என்ற குறட்பா மூலம் அறிய முடிகிறது. காலத்திற்கு ஏற்றவாறு விதைப்பதால் செல்வம் அதிகரிக்கும் என்று கூறுகின்றன.

**நீர் நிலைகளின் பயன்பாடு**

உலகில் உள்ள உயிர்கள் அனைத்திற்கும் நிர் மிகவும் இன்றியமையாததாகும். இதனை நீரின்றி உலக வாழ்க்கை அமையாது என்பார் வள்ளுவர். நீருக்கு மழை அவசியமாகிறது. உண்பார்க்கு வலிமை தருவதுடன் தாமே உணவாகவும் பயன்படுவது மழையே ஆகும். “நீரின் றமையா வுலகம்” என்று உலகினுக்கு நீரானது இன்றியமையாதது என்று கபிலரும் எடுத்துரைப்பார். பழந்தமிழ் மக்கள் தங்களது தேவைக்காகவும், வேளாண்மைக்காகவும் நீர் நிலைகளை உருவாக்கியுள்ளனர். பயிர்கள் நீரின்றி வாடும் போது ஆழமான நீர் நிலைகளிலிருந்து நீரை ஏற்றம் கொண்டு இறைத்து வாய்க்கால்கள் மூலமாக வயல்களுக்குப் பாய்ச்சி பயிர்களை பாதுகாத்துள்ளனர். மழை நீரைச் சேகரிக்க ஏரிகளையும் குளங்களையும் உருவாக்கியுள்ளனர். உபரி நீரின் சேமிப்பு நுணுக்கத்தை முதற் பாவலர் சிறப்புற விளக்கியுள்ளார்.

**உழவின் சிறப்பு**

உழவுத்தொழிலில் இருக்கும் ஒவ்வொரு வேலையும் மிகக் கடினமாக இருக்கும். வேளாண்மைத் தொழிலில் உழவர்கள் கடுமையான மழையாக இருந்தாலும், வெப்பமாக இருந்தாலும் அதை எதிர்கொண்டு கடுமையாக உழைப்பார்கள். உழவர்கள் உடல்வலியை போக்குவதற்கு நாட்டுப்புற பாடல்கள் பாடி தன் உடல் வலியை போக்கிக் கொள்வார்கள்.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

உழவுத் தொழில் உழவர்களுக்கு கடினமாக இருந்தாலும் உழவுத்தொழிலை முதன்மையாக வைத்து சிறப்பிப்பர். இதனை,

**"சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம் அதனால்**
**உழந்தும் உழவே தலை." (குறள் 1031)**

என்ற குறட்பா மூலம் அறிய முடிகிறது. உழவர்களின் உற்பத்தியால் மட்டுமே நாடு நல்லதொரு வளர்ச்சியை அடைய முடியும் என்பர். உணவு வாழ்க்கைக்கு தேவையான அடிப்படை ஆகும். உணவு உற்பத்தி செய்யவில்லையென்றால் நாட்டின் வளர்ச்சியும் குன்றிவிடும். உணவு உற்பத்தி பெருக்கத்தில் சிறப்பான உழவர் பெருமக்களைக் கொண்ட நாடு பல வேற்றரசரின் ஆளுகையின் கீழுள்ள நாடுகளையும் தம்முடைய மன்னரின் அரசாட்சியின் கீழ் காண்பர் என்பதை,

**"பலகுடை நீழலும் தங்குடைக்கீழ்க் காண்பர்**
**அலகுடை நீழ லவர்." (குறள் 1034)**

என்ற குறட்பா மூலம் அறிய முடிகிறது.

**உழவின் மகிமை**

உழவுத் தொழில் புரியும் உழவர்கள் தங்களுடைய தொழிலை விட்டுவிட்டால் நாடும் மனிதர்களும் மிகப் பெரிய வேதனையையும் இழப்பையையும் எதிர் கொள்ளுவார்கள். உழவுத் தொழில் செய்யாமல் இருப்பதால் பந்த பாசங்களையெல்லாம் விட்டுவிட்டு வாழ்கின்ற துறவிகளுக்கு கூட வாழ்வில்லாமல் போய்விடும் என்பதை,

**"உழவினார் கைம்மடங்கின் இல்லை விழைவதூஉம்**
**விட்டேம் என் பார்க்கும் நிலை." (குறள் 1036)**

என்ற குறட்பா மூலம் அறிய முடிகிறது. தொழிலிலே மிகச் சிறப்பான தொழில் உழவுத் தொழில் ஆகும். உழவுத் தொழில் செய்யவில்லையென்றால் மிகுந்த துன்பம் நேரிடலாம். உழவுத் தொழிலே மகிமையான தொழில் ஆகும்.

**நிலம் கவனிக்கப்படாததால் வரும் விளைவு**

உழவர்கள் நிலத்தை கவனிக்காவிட்டாலும், பராமரிக்காவிட்டாலும் அந்நிலத்தில் பயிர்கள் விளையாது. கவனிக்கப்படாத மனைவி போல அவனை வெறுத்து கோபம் கொள்ளும் அதாவது பயிர் விளையாது இதனை,

**"செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து**
**இல்லாளின் ஊடி விடும்." (குறள் 1039)**

என்ற குறட்பா மூலம் நிலத்தை கவனிக்கப்படாமல் விட்டால் ஏற்படும் செய்தியினை பற்றி அறிய முடிகிறது.

**முடிவுரை**

இயற்கை அளிக்கக் கூடிய கொடையைப் பயன்படுத்தி இயற்கையோடு இணைந்து செய்யப்படுவதே வேளாண்மை. வேளாண்மை செய்யக் கூடிய உழவர்கள் கடுமையான உழைப்பு, மன உறுதியோடு வேளாண்மையை மேற்கொள்வர். உழவர்கள் தன்னம்பிக்கையோடு தங்களுடைய உழைப்பை நல்குவார்கள். உழவர்கள் பல்வேறு சூழல்களில் பல்வேறு மாற்றங்களைக் கொண்டு சமுதாயத்தை மேம்பாடு அடையச் செய்வதில் முதன்மையானவர்கள். இவர்களின் திறமையால் தான் ஒரு நாடு அடையும் வளர்ச்சியும், வீழ்ச்சியும் அடங்கியுள்ளதைத் திருவள்ளுவர் தம் குறளில் கூறியுள்ளதை இங்கு எடுத்துரைக்கப்பட்டது.

**பயன்பட்ட நூல்கள்**

1. நீதிநூற்களஞ்சியம், பத்மதேவன், கொற்றவை பதிப்பகம், சென்னை, 1983.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

# திருக்குறளில் காணலாகும் அன்புநிலையும், இன்றையவாழ்வியலும்

## The State of Compassion as seen in *Thirukkural* and in Modern Life

**க.இளையராஜா,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரி, சிவகாசி.

### Abstract

*The aricle evinces on the state of love as portrayed in "Thirukkural" and of the modern times. The articles churns the details of the state of the one who is compassionate to all. The quality of love and the result of love are discussed to bring down the true virtues of love to be known by the people. The merits of love is the main thing that can boost a person to do things better in life. Without love, one may live like a boat without an oar that always wandering somewhere. These are stressed here to show the lack of love among people. Hence, this paper investigates on the values of love and the corrupted state of modern love with comparision to the love evinced in "Thirukkural".*

**Keywords:** State of Love, *Thirukkural*, Modern Life

**முன்னுரை**

தமிழில் நூல்களுள் முதன்மையானது திருக்குறள். சாதி, மத, சமய வேற்றுமை இல்லாமல் உலகமக்கள் அனைவரும் ஏற்றுக் கொள்ளத்தக்க பொதுவான நீதிகளை கூறுவது இந்நூல். **'ஆலும் வேலும் பல்லுக்குறுதிநாலும் இரண்டும் சொல்லுக்குறுதி'** என்ற பழமொழியானது இந்நூலின் பெருமையை விளக்குவதாகும். எல்லாப் பொருளும் இதன்பால் உள் இதன்பால் இல்லாத எப்பொருளும் இல்லையால் என்று பாரட்டப்படும் பெருமையுடையது. இங்கு அன்புடைமை என்னஎன்ன என்பதை உணர்த்தும் நோக்கத்தான் இக்கட்டுரை அமைந்துள்ளது. மேலும் இன்றைய சூழலில் அன்புசமூகத்தில் அத்தியாவசியமானது என்பதையும் இக்கட்டுரை விளக்குகிறது.

**அன்புடையார் நிலை**

அன்பு என்பது ஒரு உயிர் மற்றொரு உயிரிடத்தில் எவ்வித எதிர்ப்பார்ப்பும் இல்லாமல் உணர்வை வெளிப்படுத்தும் தன்மையே 'அன்பு' இதனையே வள்ளலார் 'வாடியபயிரை கண்ட போதெல்லாம் வாடினேன் குறிப்பிடுகிறார். சமுதாயத்திலும், குடும்பத்திலும் ஒருவர் மற்றவரிடம் கொண்டுள்ள அன்பைப் பிறர் அறியவண்ணம் மறைத்து வைத்தல் என்பது இயலாத ஒன்று தம்மால் அன்பு இரங்கி, அவ்வன்புடையாரின் கண்கள் பொழிகின்ற கண்ணீரே அவர் கொண்டுள்ள அன்பை வெளிப்படுத்திவிடும்.

**"அன்பிற்கும் உண்டோஅடைக்கும்தாழ் ஆர்வலர்**
**புன்கணீர் பூசல் தரும்"**

என்றகுறள் மூலம் தெளிவாகின்றது. வன்முறை செயல்கள் அதிகரித்து வரும் இக்காலக் கட்டத்தில், மனிதநேயம் எத்துணை இன்றியமையாதது என்பது மேற்கூறிய குறள் மூலம் தெளிவாகிறது.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**அன்புடையார் இயல்பு**

அன்பு இல்லாதவர் எல்லா பொருளையும் தமக்கே உரிமை ஆக்கிக் கொண்டு வாழும் தன்னலக்காரராய் வாழ்வர். அன்புடையவரோ தம் உடம்பையும் பிறர் நலத்துக்காகக் கொடுத்து வாழும் இயல்புள்ளவராய் வாழ்வார். இதற்குச் சான்றாகத் தம்மை அடைந்த அற்பப் புறாவினைக் காக்கத் தம் உடம்பையே பருந்துக்குத் தந்தார் சிபிச் சக்கரவர்த்தி, அன்னைதெரசா போன்றோர் அனைத்து உயிர்களிடத்தும் வற்றாத அன்பைப் பொழிந்து வந்தனர். இவர்கள் எல்லாம் **"அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கும்"**என்பதற்கு எடுத்துக்காட்டாய் வாழ்ந்தவர் ஆவார்.

**"அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்**
**என்றும் உரியர் பிறர்க்கு"**
**"நிலத்தினும் பெரிதேவானினும் உயர்ந்தன்று**
**நீரினும் ஆர்அளவு இன்றேசாரல்**
**கருங்கோள் குறிஞ்சிப்பூக் கொண்டு**
**பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே"**

தலைவி தலைவன் மீது கொண்ட அன்பு நிலத்தை விடப் பெரிது, வானை விட உயர்ந்தது கடல்நீரைவிட ஆழமானது என பாடல் அடி உணர்த்துகிறது.

**அன்பின் பயன்**

**"அன்புஈனும் ஆர்வம் உடைமைஅதுஈனும்**
**நண்பென்னும் நாடகச் சிறப்பு"**

உயிர் உடம்போடு சேர்ந்தால்யின்றி அன்பு செய்ய இயலாது. அன்பு செய்வதற்காகவே உயிருக்குஉடம்போடு தொடர்பு உண்டாயிற்று. அன்பானது பகைவர், அயலர் என்று இல்லாமல் அனைவரும் நண்பர் என்று சொல்லத்தக்க அளவில் சிறப்பினைத் தரும். நமது அண்டைய நாடு பாகிஸ்தானுடன் இந்தியா பகைமை பாராட்டமல் அன்புடன் பழகி வருகிறது. உலக நாடுகளிடையே ஐக்கியத்தையும், அன்பையும் வளர்க்கவே ஐக்கிய நாடுகளின் அமைப்பும் இயங்கி வருகிறது.

**அன்பின் சிறப்பும் துணையும்**

இல்லறத்தில் மனைவி மக்களோடும், உற்றார் உறவினரோடும் கூடி வாழ்ந்து தங்கள் செய்ய வேண்டிய கடமைகளைச் சரிவர ஒழுங்காய்ச் செய்து இன்பமாய் வாழ்ந்தவர்கள். இன்றைய சமுதாயத்தில் கணவனும், மனைவியும் ஒற்றுமையாய் அன்புடன் வாழ்ந்து வந்தால் விவாகரத்துக்கும் வழக்கறிஞர்களுக்கும் வேலையே இருக்காது.

**"அறத்திற்குஅன்புசார் பென்பஅறியார்**
**மறத்திற்கும் அதேதுணை"**

நம்மோடு பகைமை கொண்டுருந்தவனிடமும் அன்பு கொண்டு நட்பாய்க் கருதினோமேயானால் அப்பாவச் செயல் நீங்கிவிடும். ஆகவே அன்பானது மறத்திற்கும் துணையாகின்றது. சாதிசமயக் கலவரங்கள் பெருகிவிட்ட இக்காலகட்டத்தில் அன்பு ஒன்றுதான் அனைத்து பிரச்சினைகளுக்கும் தீர்வாக அமைகிறது. அன்பே மகிழ்ச்சிகான கதவைத் திறக்கும் முதன்மையான திறவுகோல். அன்பு ஒன்றே ஒருவனிடம் மறைந்திருக்கும் திறமையை வெளிக்கொண்டு வருகிறது இதனை கவிஞர் பா.விஜயின் 'அந்தக் காட்டில் எந்த மூங்கில் புல்லாங்குழல்' என்ற வரிகள் உணர்த்துகிறது.

**அன்பு இல்லதாவர்களின் நிலை**

வெயிலானது எங்கும் ஒரே தன்மையால் வெறுப்பு இல்லாமல் காய்கிறது. அதன் முன்னே எலும்பு இல்லாத புழு தன் இயல்பால் சென்று அழியும். அதுபோல எங்கும் ஒரேதன்மை வாய்ந்த அறத்திற்கு முன்னால் அன்பேயில்லாத உயிர்கள் தம் இயல்பாலே

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

சென்றுகெடும். வறண்டபாலை நிலத்தில் மரங்கள், நீர், நிலம் இன்றிக் காய்ந்துவிடும். தளிர்க்காது. அதுபோல அன்பு இல்லாதவர் இல்லறமானது செழுமையாக இராது.

**“அன்பகத்தில்லஉயிர் வாழ்க்கைவன்பாற்கண்**
**வற்றல் மரந்தளிர்த் தற்று”**

அன்பில்லாதவரின் நிலையைச் சுட்டிக்காட்டுகிறது. மேற்கண்ட குறள் நவீனகாலக் கட்டத்தில் “நான்” என்ற அகங்காரம் ஆண், பெண் இருவரிடத்திலும் மேலோங்கி உள்ளது. ஆதலால் இல்லறத்தில் கணவன், மனைவி இருவரிடத்திலும் அன்பு குறையும் ஆபத்து உள்ளது. இல்லறம் பாலைநிலமாக இல்லமால், சோலையாக அமைய அன்பு என்னும் நீர் கண்டிப்பாகத் தேவை. பண்பாடு மிக்க நமது இந்திய நாட்டில் அன்பு என்னும் அஸ்திவாரத்தைக் கொண்டே பல குடும்பங்கள் ஒற்றுமையாக அமைந்துள்ளன. பெற்றோரிடமும் அன்புடனும், பாசமுடனும் நன்மக்கள் நடந்துகொண்டால், முதியோர் இல்லங்களை இழுத்து மூடிவிடலாம். எல்லா உயிர்களிடத்தும் அன்பும், சகோதரத்துவமும் அடிப்படைத் தேவையாகஉள்ளது.

**“என்பில்லதனைவெயில்போலக்காயுமே**
**அன்பிலதனைஅறம்”**

எலும்பில்லாத புழுப்பூச்சிகளை வெயில்காய்ந்து வருத்துவது போல அன்பில்லாதவனை அறமானது காய்ந்து வருந்தச் செய்யும்.

**“கண்ணுக்குத் தெரிந்த**
**கண்ணகியேகருப்பையில்**
**என்னைச் சுமந்தாய்**
**கவிதைகளால்**
**உன்னைச் சுமக்கின்றேன்**

பூக்களுக்காக கண்ணீர் என்னும் கவிதைத் தொகுப்பில் மு.செல்லமுத்து அவர்கள் அன்பு இல்லாத நிலையை எடுத்துரைக்கிறார்.

**அன்பின்றி ஏற்படும் குற்றம்**

ஒருவர் இல்லறம் நடத்துவதற்குத் தேவையான புறத்துறப்புகள் இருந்தாலும், அங்கு அவரிடம் அன்பு இல்லையெனில் அவைகள் எந்த பயனையும் செய்யாது. அன்பில்லாதவரின் உடம்பு உயிரோடு இருந்தாலும், வெறும் எலும்பாலும், தோலாலும் மூடியுள்ள உயிரற்ற உடம்பாகும் என்கிறார்.

**“அன்பின் வழியதுஉயிர்நிலைஅதில்லார்க்கு**
**என்புதோல் போர்த்தஉடம்பு”**

அறிவியலும், தொழில்நுட்பமும் முன்னேறிய நவீனயுகத்தில் அன்பென்னும் உயிர் இல்லையெனில் வீடும், நாடும் நரகமாகிவிடும். ஒவ்வொரு உயிர்களிடத்தில் அன்பு செய்வதையே வலியுறுத்துகிறது. பகவத் கீதையும், பைபிளும், குரானும் அன்புஎன்னும் தராகமந்திரத்தையே போற்றுகிறது. இராமாயணமும், மகாபாரதமும் அன்பையே சுட்டிக்காட்டுகிறது. இராமாயணத்தில் ராமரும், சீதையும் ஒருவர் மீது ஒருவர் கொண்ட அன்பு அனைவரையும் ஈர்க்கிறது. எனவே அன்பு ஒன்றினாலேயே அனைத்தையும் சாதிக்க முடியும் என்பது திண்ணம். அனைவரும் உயிர்களிடத்து அன்புடன் இருந்தால், எதிலும் வெற்றி **அடைவது நிச்சயம்.**

மகாத்மாவின் அன்பும், அகிம்சையும் இந்தியா சுதந்திரம் அடைவதற்கு முக்கிய காரணமாகிறது. சுதந்திர இந்தியாவில் அனைத்து மக்களும் ஒருவருக்கொருவர் அன்புடன் இருந்தால் பலசாதனைகளைப் புரியமுடியும். வன்முறைகள் அறவே இல்லாமல் போய்விடும். இந்தியா வல்லரசு நாடகிவிடும்

**முடிவுரை**

உலகில் மக்கள் வாழ்வதற்கு, அன்பு என்பது மிக முக்கியமானதொன்றாகக்

E-ISSN: 2581-7140

Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

கருதப்படுகிறது. மகாபாரத்தில் பாண்டவர்கள் அன்பால் அப்பரமாத்மாவான கண்ணபிரானையே கட்டிவிட்டனர். இத்தகு அன்பின் சிறப்பினைவள்; அவர் தம் அன்புடைமை என்ற அதிகாரத்தின் மூலமாக எடுத்துக் காட்டியிருப்பது புலனாகிறது. சாதிமத இன வேறுபாடின்றி அன்புடன் அனைவரிடமும் அனைத்து செயல்களிலும் நடந்துகொள்வது அவசியமாகிறது. இராமாயணத்தில் ராமரும் அன்பின் சிறப்பினை வலியுறுத்துகிறார். குகனுடன் அவர் கொண்டஅன்பு அனைவரையும் ஈர்க்கிறது. "குகனோடு ஐவாரானோம்" என்ற அவரது சொல், மக்களிடையே அவர் கொண்ட அன்பினைப் புலப்படுத்துகிறது. உயர்திணை உயிர்கள் மட்டுமன்றி, அஃறிணை உயிர்களிடமும் நாம் அன்பு காட்டுவோமெனில் எத்துணைநன்மைகளும்,சிறப்புகளும் உண்டாகும். ஆக வள்ளுவர் தம் இரண்டிக் குறளிலே, நம்மால் காணமுடிகிறது. எனவே இன்றையச் சூழலில் அன்பு என்னும் தாரக மந்திரத்தைப் பின்பற்றி நாம் வழி நடப்போமாக!

**பயன்பட்ட நூல்கள்**

1. கு.வெ.பாலசுப்பிரமணியன், சங்க இலக்கியம், நியூ செஞ்சுரி புத்தக நிறுவனம், சென்னை.
2. குன்றக்குடி அடிகளார், வள்ளுவர் உலகம்,

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com


# வள்ளுவர் கூறும் போர்ப்படைகள்

# Armies Evinced by Valluvar

**முனைவர் வை. இராமராஜபாண்டியன்,** பேராசிரியர் மற்றும் புலத்தலைவர்,
தமிழியற்புலம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை – 21.

**க.கருப்பசாமி,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
இக்கால இலக்கியத்துறை, தமிழியற்புலம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை – 21.

## Abstract

*The aricle evinces on the types of armies in the Sangam Age. Armies are the inevitable strength of the kings of the Sangam Era. It shows the valour of the country. It is general for a king to keep the people safe and happy and to keep justice for the society by a strong army. The Triumvirs Chera, Chola and the Pandiyas are noted for the might of their armies and it is depicted in the Sangam Poetry. Valluvar also denotes the importance of armies and elucidates the types of army and the quality of a mighty king and a mighty army. The valour of a warrior and the chief traits of the warrior and the different types of armies are the theme of the paper. Hence, this paper traces the substantiations related to the warfare as found in "Thirukkural".*

**Keywords:** Types of Army, Valluvar, *Thirukkural*

### முன்னுரை

சங்ககாலச் சூழலில் படை என்பது அரசின் அடிப்படையில் ஓர் அங்கமாய் அமைகின்றது. எந்த மன்னர்களும் படை இல்லாமல் இருக்க முடியாது. படைபலம் ஒரு நாட்டின் வீரத்தினை நிலைநிறுத்திக் காட்டக் கூடியது. அரசன் உரிமையைக் காத்துக் கொள்ளவும், நாட்டு மக்களைக் காக்கவும் படைகள் பயன்படுவது பொதுவான ஒன்று. வேந்தர்களின் வீரத்தினை வெளிப்படுத்த போர் முறையானது இருந்தது. இவ்வேந்தர்கள் படை வைத்துப் போர் செய்தனர். தொல்காப்பியர் அரசருக்குரிய ஒன்பது பொருள்களுள் படையும் ஒன்று என்கிறார். வேந்தர்களிடம் உள்ள செல்வங்களுள் எல்லாம் தலையாயது படை. வேந்தர்களது வலிமையை உணர்த்துவது படை ஆகும். அப்படையின் வகைகளை வள்ளுவர் கூறும் கருத்துக்கள் மூலம் இக்கட்டுரை அமைகிறது.

### படைகள்

பண்டைய காலத்தில் நாட்டினைப் பாதுகாக்கப் போரினைத் தொடுக்க படைகள் பயன்பட்டது. 'மன்னர்கள் படையை வேந்தனின் திருமேனி' என்று சிலம்பு கூறுகிறது. வேந்தர்களுக்கு தங்களிடமுள்ள அனைத்துச் செல்வத்தையும் விட படைச் செல்வமே முதன்மையானது என்பதை,

**"உறுப்பமைந்து ஊறஞ்சரா வெல்படை வேந்தன்**
**வெறுங்கையுள் எல்லாம் தலை"** (குறள்.761)

என்ற குறள் மூலம் அறிந்து கொள்ளலாம்.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**படை வகைகள்**

வள்ளுவர் காலகட்டத்தில் மன்னர்களுக்கரிய ஆறு கூறுகளில் படையும் ஒன்றாக இருந்துள்ளது. இதனை,

**"படைகுடி கூழ்அமைச்சு நட்புஅரண் ஆறும்**
**உடையான் அரசருள் ஏறு" (குறள்.381)**

என்ற குறள் மூலம் உணர முடிகிறது. இதனைத் தமிழ் வேந்தர்கள் நன்கு அறிந்திருந்தனர். மன்னன் எவ்வழியோ மக்களும் அவ்வழியில் வாழந்து வந்தனர். மக்களின் பாதுகாப்பு கருதி மன்னர்கள் போர்ப்படைகளை வைத்திருந்தனர். மேலும், அன்றைய காலகட்டத்தில் அண்டை நாட்டு மன்னர்களிடமிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்ள மன்னர்களால் உருவாக்கப்பட்டதே 'படை' என்ற ஒன்று என்பதை அறிந்து கொள்ள முடிகிறது. தொல்காப்பிய புறத்திணையியலில் படைகளைப் பற்றியும், போர்களைப் பற்றியும் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன. படைகள் பல பிரிவுகளாகப் பிரிந்து, பல பெயர்களைப் பெற்றிருந்தது. அணி, உண்டை, ஒட்டு எனப்பல பெயர்கள் பெற்றன. முதல் வரிசைப் படைகள் ஆக்கம், தார், தூசி, நிரை என்றும், பின்வரிசைக் கூழை என்றும் பெயர்கள் பெற்றன.

**"படையும் கொடியும் குடையும் முரசும்**
**நடை நவில் புரவியும் களிறும் தேரும்**
**தாரும் முடியும் நேர்வன பிறவும்**
**தெரிவு கொள் செங்கோல் அரசர்க்கு உரிய" (தொல்.பொருள். மர.நூ.1571)**

என்றும் நூற்பாவின் மூலம் நால்வகைப் படைகளும் அக்கால வேந்தர்களால் உருவாக்கப்பட்டதை தெரிந்து கொள்ள முடிகிறது.

**படை வகைகள்**

அன்றைய காலகட்டத்தில் தேர்ப்படை, குதிரைப்படை, யானைப்படை, காலாட்படை என்ற நான்கு படைகளையும் எந்த மன்னன் கொண்டுள்ளானோ அந்த மன்னன் தான் மிகச் சிறந்த மன்னராக அங்கீகரிக்கப்பட்டதை,

**"உறுப்பமைந்து ஊறஞ்சா வெல்படை வேந்தன்**
**வெறுக்கையுள் எல்லாம் தலை" (குறள். 761)**

என்னும் குறள் மூலம் மன்னர்களின் சிறப்பினை தெரிந்து கொள்ள முடிகிறது. "தமிழ் மண்ணை ஆட்சி புரிந்த மன்னர்கள் மூலப்படை, கூலிப்படை, நாட்டுப்படை, காட்டுப்படை, துணைப்படை, பகைப்படை என ஆறு படைகளையும் கொண்டிருந்தனர்" என்று ரா.பி. சேதுப்பிள்ளை கூறுகிறார். படைத்தலைவர்களைத் 'தலைமக்கள்' என்றும், படைவீரர்களை 'நிலைமக்கள்' என்றும் கருதப்பட்டனர்.

**களிற்றுப்படை**

நால்வகைப் படைகளில் வலிமை மிக்கது யானைப்படை. போர்க்களத்தில் வீறுகொண்டு பகைவர்களையும், மதில் சுவர்களையும் தகர்ப்பது யானைப்படையே. யானைப்படை வீரர்கள் குஞ்சர மல்லர், அத்தி மல்லர், ஆனைப்பாகர் என்னும் பெயர்களால் அழைக்கப்பட்டனர். திருக்குறளில் களிற்றுப்படை இருந்ததை,

**"கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்**
**மெய்வேல் பறியா நகும்" (குறள்.774)**

என்பதன் மூலம் படை இருந்துள்ளதைக் காணமுடிகிறது. முயலைக் குறி தவறாமல் எய்த அம்பை கையில் பிடிபட்டதை, யானை மேல் எறிந்து தவறிய வேலைக் கையில் பிடித்தல் என்பது சிறந்தது என்று வள்ளுவர்,

**"உலைவிடத்து ஊறஞ்சா வன்கண் தொலைவிடத்துத்**
**தொல்படைக் கல்லால் அரிது" (குறள்.762)**

E-ISSN: 2581-7140

Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

இக்குறள் மூலம் கூறியுள்ளார். இதனால் யானையை எய்வதே வீரனுக்கு பெருமிதம் என்பது பெறப்பட்டது. கோழிப்போர், கௌதாரிப் போர், ஆட்டுக்கிடாய்ப் போர் என்பவை போல யானைப் போரும் பண்டைய காலத்தில் இருந்துள்ளது என்பதை,

**"குன்றேறி யானைப்போர் கண்டற்றால் தன்கைத்தொன்று**

**உண்டாகச் செய்வான் உண்டு" (குறள்.758)**

என்ற குறளடிகளால் அறிய முடிகிறது.

**குதிரைப்படை**

பண்டைய காலத்தில் குதிரைப்படைகள் இருந்துள்ளன. அப்படைக்குத் தலைவர் இருந்தனர். யானைப்படை வலிமை கருதிப் பயன்பட்டது போலக் குதிரைப்படை விரைவு கருதியும், ஆற்றல் கருதியும் போரில் பயன்படுத்தப்பட்டுள்ளன. அரசனுக்குரிய ஆட்சிமன்றக் குழுவினருள் குதிரைப்படைத் தலைவரும் பங்கு பெற்றனர். குதிரைகள் சிந்து, பாரசீகம், அரேபியா போன்ற நாடுகளிலிருந்து மிகப் பலவாகத் தமிழகத்தில் இறக்குமதி செய்யப்பட்டன. தீநட்பு என்னும் அதிகாரத்தில் குதிரைப்படை இருந்தமையை,

**"அமரகத் தாற்றறுக்கும் கல்லாமா அன்னார்**

**தமரின் தன்மை தலை" (குறள்.814)**

இக்குறள் கருத்தானது, போரில் ஈடுபடும் போது குதிரையானது வீரனை கீழே தள்ளிவிட்டு குதிரையானது தப்பித்துக் கொள்ளும். இக்குதிரையப் போன்று தீயவர்கள் சூழ்நிலைக்குத் தகுந்தார் போல் மற்றவர்களிடமிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்ளுவர்.

**காலாட்படை**

காலாட்படை என்பது கால்களால் சென்று போரிடும் படை ஆகும். இப்படை ஆற்றல்மிக்க ஆடவர் பலரைக் கொண்டதாகக் காணப்படும். போரில் ஈடுபடும் போது, எதிரியைத் தாக்க தயாராக இருக்கும் படைகளில் முன் வரிசையில் நிற்கும் படைவகைகளுள் தார்படையும் ஒன்று. இத்தார்ப்படையின் செயலானது, பகைநாட்டவரின் தரைப்படையானது தன்னைத் தாக்க வரும்போது, அப்படையினை எதிர்த்து நின்று தடுப்பதாகும். இக்கருத்தானது, பின்வரும் குறள் கருத்தோடு இணைந்து வந்துள்ளதை,

**"தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த**

**போர்தாங்குந் தன்மை யறிந்து" (குறள்.767)**

என்பதன் மூலம் கண்டறிய முடிகிறது. பரிமேலழகர் 'தார்' என்னும் சொல்லிற்கு காலட்படைகளுள் ஒன்றான தூசிப்படையைக் குறிப்பிடுகிறார்.

**தேர்ப்படை**

தேரனாது மிகச் சிறயதாக, வீரனும் பாகனும் இருப்பதற்கு ஏற்ற அளவில் வடிவமைக்கப்பட்டது. தேரில் மர வேலைப்பாடு மிகுதியாக இருக்கும். பல விதமான வண்ணங்கள் தீட்டப்பட்டிருக்கும். தேரினை குதிரைகள் இழுத்துச் சென்றன. இதைத் தேர்ப்பாகன் செலுத்தினான். தேர்ப்பாகனுக்கு 'தேர் ஊருநர்' என்று பெயர். தேர்ப்படை வீரர்கள் 'நல்தேர்க் குழுவினர்' என்று புறநானூற்றிலும், 'கடுந்தேர் ஊருநர்' என்று சிலப்பதிகாரத்திலும் குறிக்கப்படுகின்றனர். தேருக்குள் இருந்து கொண்டு வீரர்கள் அம்பு அல்லது பிற ஆயுதங்களால் தாக்கினர். வெற்றி பெற்ற பின்பு வேந்தர்கள், வீரர்கள் அனைவரும் சேர்ந்து தேருக்கு முன், பின் குரவைக் கூத்து ஆடுவர். இதனைத் தொல்காப்பியம் 'தேரோர் களவழி' என்று குறிப்பிடுகிறது. 'இடனறிதல்' என்னும் அதிகாரத்தில் 'தேர்' பற்றிய குறிப்பு உள்ளது என்பதை,

**"கடலோடா கால்வல் நெடுந்தேர் கடலோடும்**

**நாவாயு மோடா நிலத்து" (குறள்.496)**

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

என்னும் குறள் மூலம் 'நெடுந்தேர்' என்னும் சொல் உள்ளதன் மூலம் தேர்ப்படை இருந்துள்ளதை தெரிந்து கொள்ளமுடிகிறது. நால்வகைப் படையிலும் இருக்கும் படைவீரர்களை வழிநடத்திச் செல்லும் தலைவன் 'படைத்தலைவன்' என்று அழைக்கப்படுகின்றான். இப்படைத்தலைவன் வழிநடத்திச் செல்லவில்லை என்றால் போரில் வீரர்கள் களத்தில் வெற்றி காணமாட்டார்கள். எனவே, படைக்கு மிகப்பெரிய பலமாக இருக்கக் கூடியவர்கள் படைத்தலைவன் ஒருவனே.

**முடிவுரை**

ஒரு நாட்டினைப் பிறநாட்டினரிடமிருந்து பாதுகாத்தலின் பொருட்டுப் போர் ஏற்பட்டு, போர்ப் படைகள் உருவாக்கப்பட்டன. அப்படைகள் நிலப்படை, கடற்படை எனச் சங்ககாலத்தில் பெயரிட்டு வழங்கியுள்ளதை அறிய முடிகிறது. யானைப்படை, குதிரைப்படை, தேர்ப்படை, காலாட்படை என நான்கு இருந்துள்ளது. பண்டைக் கால வேந்தர்கள் நால்வகைப் படைகளைப் போரில் பயன்படுத்தியுள்ளதன் மூலம் அவர்களுடைய வீரம், பெருமிதம் வெளிப்பட்டுள்ளதை இக்கட்டுரையின் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது.

**பயன்பட்ட நூல்கள்**

1. ரா.பி. சேதுப்பிள்ளை, பண்டைத்தமிழர் பண்பாடு,
2. இராசமாணிக்கனார், தமிழக ஆட்சி, மெட்ரோபாலிடன் பிரிண்டர்ஸ், சென்னை.
3. தமிழண்ணல், தொல்காப்பியம் மூலமும் கருத்துரையும், மீனாட்சி புத்தக நிலையம், மதுரை.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

# வாழ்வியல் அறப்பண்பாட்டின் பயனும் வான்சிறப்பும்

## The Use of Life Oriented Ethics and 'Vaanchirappu'

**முனைவர் த.கண்ணன்,** பேராசிரியர் & தலைவர்,
அரிய கையெழுத்துச்சுவடித்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

**Abstract**

*The present paper brings out the life oriented ethical norms immanent use in leading a happy and harmonious life with comparision to the second chapter of the Universal diadactic Treatise "Thirukkural". It is entitled as "Vaanchirappu". The study delves deep on the invocation (Kadavul Vaalthu) and the second chapter (Glory of Rain); then it discusses on the importance of Rain and to keep the preserving methods of it. To valluvar ethical life codes are the symbol of prosperity and it will be bestowed as rain to us. By eliciting the virtues of life from the chapter it also points out the state of today's shattered life and the role of rain that plunges without any serenity as the life plunged by men in immoral ways. Consequently, this paper finds the substantiations related to ethical way of life and the glory of rain.*

**Keywords:** Use of Life Oriented Ethics, 'Vaanchiraphu', *Thirukkural*

**முன்னுரை**

உலகப் பொதுமறையாம் திருக்குறளில் 133 அதிகாரங்களில் 1330 குறட்பாக்கள் உள்ளன. இக்குறட்பாக்கள் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் எனும் முப்பால்களாக வகைமைப்பட்டுள்ளன. அவற்றுள் அறத்துப்பாலில் பாயிரவியல், இல்லறவியல், துறவறவியல், ஊழியல் என்ற நான்கு இயல்களும் பொருட்பாலில் அரசியல், அங்கவியல், ஒழிபியல் என்ற மூன்று இயல்களும் காமத்துப்பாலில் களவியல் கற்பியல் என்ற இரண்டியல்களும் உள்ளன.

அதிகாரங்களுக்குப் பத்துக்குறட்பாக்களால் அமைந்துள்ள திருக்குறளில் ஒரு அதிகாரத்தின் கீழ் அமைதற்குரிய குறட்பாக்கள் அந்த ஒரு அதிகாரத்தில் மட்டும் காணப்படுவதில்லை. ஒரு அதிகாரத்திற்கான செய்திகளைப் பிற அதிகாரங்களிலும் காணமுடிகிறது. அறம் உணர்த்தல் எனும் பொதுநோக்கில் திருக்குறள் நோக்கப்படுகிறது. எனினும் அவற்றுள் இடம்பெறும் முதன்மை அறம் எது என்பது ஆராய்வதற்குரியதாக உள்ளது. திருக்குறளின் ஒருமை நோக்கம் என்னவாக உள்ளது என்பது ஆராய்வதற்குரியதாக உள்ளது. இந்நிலையில் இக்கட்டுரை வாழ்வியலறப் பண்பாட்டு வாழ்வின் பயனாக வான்சிறப்பு அமைகிறது என்பதை வள்ளுவர்வழி எடுத்துரைக்கிறது.

**கடவுள் வாழ்த்தும் வான்சிறப்பும்**

இவ்வுலகின் முதல் ஆதிபகவன், அந்த வாலறிவனை வணங்குதலே கல்வியின் பயன். இந்நிலத்து நீடுவாழ்தற்கு மலர்மிசை ஏகினவனின் மாணடி சேர்வதும் ஐந்தவித்தானின் பொய்தீர் ஒழுக்கநெறி நிற்பதும் அவசியமாகிறது. பிறவியாகிய இப்பெருங்கடலைக் கடப்பதற்கும் வாழ்வியல் துன்பங்களில் இருந்து நீங்குதற்கும் இறைவனடி சேர்தலும் இறைவனது புகழ் விரும்புதலும் துணையாக அமையும் என்றுரைக்கிறார். இக்கடவுள்

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

வாழ்த்தின் வழியாக உலகவாழ்விற்கு கடவுள் துணையாவது எடுத்துரைக்கப்படுவது விளங்கும். வான்சிறப்பில் மழையின் வழியாகவே இவ்வுலக வாழ்வு அமைகிறது எனவே மழையானது அமிழ்தமாகும். மழையென்பது இல்லையெனில் உன்நின்று உடற்றும் பசி பசும் புல்லின் தலைகாண்பதும் அரிது நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும். எனவே நீரின்றி அமையாது உலகு என்றார். கடவுள் வழிபாட்டு நெறிகளுள் சிறப்பெனக் கருதப்படும் தானமும் தவமும் வானம் மழையென்பதை வழங்கவில்லையெனில் நடைபெறுதற்கில்லை வானோர்க்குரிய சிறப்பும் அவர்க்குரிய பூசையும் நிகழ்தற்கில்லை என்பதையும் சுட்டுகிறார். இதனால் கடவுள் வாழ்த்தில் கடவுளே இவ்வுலகின் முதல் என்று சுட்டிய வள்ளுவர் வான்சிறப்பில் மழையே இவ்வுலகின் முதலாக அமைவதைக் குறிப்பிடுகிறார். இந்நிலையில் வள்ளுவர் மழையே கடவுள் எனக் கருதினார் என்றுரைக்க முடியும்.

வான்சிறப்பும் நீத்தார் பெருமையும்

முற்றுந்துறந்த முனிவர் பெருமையை நீத்தார் பெருமை எடுத்துரைக்கிறது. நீத்தாரை இருமை வகைதெரிந்து அறம் பூண்டார் உரனென்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பார் ஐந்தவித்தார் செயற்கரிய செய்வார் ஐந்தின் வகைதெரிவார் நிறைமொழி மாந்தர் என்றெல்லாம் குறிக்கிறார். நீத்தாரின் பெருமை எண்ணியுரைத்தற்கரியது என்றுரைத்த வள்ளுவர் அவரை வித்துடன் ஒப்பிட்டு,

**“உரனென்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்**
**வரனென்னும் வைப்பிற்கோர் வித்து” (குறள் 24)**

என்றார். “திண்மை என்னும் தோட்டியால் பொறிகள் ஆகிய யானை ஐந்தனையும் தத்தம் புலன்கண் மேல் செல்லாமல் காப்பான் எல்லா நிலத்தினும் மிக்கது என்று சொல்லப்படும் வீட்டு நிலத்திற்கு ஒரு வித்து ஆம்” என்று விளக்குவர் பரிமேலழகர். இங்கு சுட்டப்படும் வித்து எனும் சொல் வான்சிறப்பை நினையத் தூண்டுகிறது. என்னிலத்து வித்தாக இருப்பினும் அது நிலம் துளைத்து முளைவிடுதற்கு மழை அவசியம் என்பது கூறாமலே உணரப்படும். இதனால் நீத்தார் பெருமையும் வான்தரும் மழையாகிய பெருமையின் பின்னதாக நிற்பது விளங்கும்.

**வான்சிறப்பும் அறன் வலியுறுத்தலும்**

அறத்தின் மேன்மை உரைத்து அதனை செய்தற்கு வலியுறுத்துகிறது இந்த அதிகாரம். மனத்துக்கண் மாசிலன் ஆகுதலும் அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச்சொல் எனும் நான்கினை நீக்குதலும் வலியுறுத்தப்படுகிது. காலத்தாலும் இடத்தாலும் கடத்தாது அறம் செய்தல் வேண்டும். அறத்தால் வருவதே இன்பம். ஆதாலால் செய்தற்குரியது அறம் என்றெல்லாம் அறத்தின் பெருமை கூறி அதனை வலியுறுத்தும் வள்ளுவர் இந்த அறத்தினை எல்லா உயிர்க்கும் பொதுமைப்படுத்தினார். இதனை,

**“சிறப்பீனும் செல்வமும் ஈனும் அறத்தினூஉங்கு**
**ஆக்கம் எவனோ உயிர்க்கு“ (குறள் 31)**

என்பதால் அறியலாம்.

எல்லா உயிருக்குமான அறத்தின் மேம்பட்ட ஆக்கம் இல்லை, அதே வேளையில் அதனை மறப்பதால் வரும் கேட்டைவிட மேம்பட்ட கேடும் வேறில்லை என்பதை,

**“அறத்தினூஉங் காக்கமும் இல்லை அதனை**
**மறத்தலின் ஊங்கில்லை கேடு“ (குறள் 32) என்றார்.**

இங்கு சுட்டப்படும் கேடு என்பது மேற்சுட்டிய உயிர் என்பதால் உணரப்படும். அதாவது எல்லாயவுயிருக்குமான கேடு இவ்வுலகத்திற்கான கேடு. அக்கேடு என்பது விண்இன்று பொய்த்தல் புயல்என்னும் வாரி வளங்குன்றுதல் விசும்பின் துளிவீழாதொழிதல் நெடுங்கடலும் தன்நீர்மை குன்றுதல் எழிலி தான் தடிந்து நல்காது நீங்கல் வானம் வறத்தல் வானம் வழங்காதொழிதல் என்று வான்சிறப்பில் அடுக்கடுக்காய்ச் சுட்டியுரைத்தார். எனவே இங்கு

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

அவற்றை நினைவூட்டிப் பொதுவாய்க் கேடு என்றுரைத்தார். இவற்றால் அறவாழ்வை மறத்தலால் விழையும் கேடாக மழைநீக்கம் சுட்டப்படுவது விளங்கும். இதனால் அறவாழ்வால் வான்சிறக்கும் என்பதும் வான்சிறத்தற்கு ஏதுவாகவே இவ்வறவாழ்வு அமைகிறது என்பதும் அறத்தின் பயன் வான்சிறப்பு என்பதும் உணர்தற் பொருண்மையாகிறது.

**இன்றைய சமூகமும் வான்சிறப்பும்**

இன்றோ மழை நம்மை எட்டாமல் எங்கோ சென்று தேய்ந்தொழியும் பொருட்டு அனைத்துவித இயற்கை மாற்றங்களும் நிகழந்து வருகின்றன. கல்வி சார்ந்த இந்தச் சமூகத்தில் கல்வியால் எல்லாம் முடியும் என்று கல்விக்கே முக்கியத்துவம் வழங்கப்படுகிறது. கல்விக்கு மட்டுமே முக்கியம் வழங்கப்படுகிறது. விவசாயம் வீழ்ந்து வருகிறது. விவசாயம் செய்ய முயடிாத சூழல் உருவாகியுள்ளது. பசும் புல் தலைகாண்பது இன்று அரிதாகவே உள்ளது. பணத்தைச் சேர்க்க முயற்சிக்கும் மனிதன் அதற்காக இந்தப் பூமியை என்ன வேண்டுமானாலும் செய்யத் தயாராக உள்ளான். நீர் நிலைகள் வற்றிவிட்டன. நீர் நிலைகள் இருந்த இடங்கள் முற்றிலுமாக அழிக்கப்பட்டுவிட்டன. ஆறு குளங்களில் உள்ள நீரை இன்று யாரும் கைகளில் அள்ளிக் குடிக்க முடியாது. நீர் மாசடைந்துவிட்டது. பணத்திற்காக மட்டுமே மனிதன் இந்தப் பூமியைப் பாழ்படுத்திவிட்டான்.

இனிமேல் அமில மழைகள் பெய்வதற்கு வாய்ப்புகள் உண்டே தவிர அமிழ்தமான மழை பெய்வதற்கான வாய்ப்புகள் அருகிவிட்டன. மக்கும் குப்பைகளும் மக்காத குப்பைகளும் நீர்நிலைகளில் குவிக்கப்பட்டுள்ளன. எனவே, பெய்யும் மழைநீரும் பயனற்று வீணாகி வருகிறது. காணுந் திசையெல்லாம் மழையைக்காண இயலா நிலையே நீடிக்கும் இந்நாளில் எங்கோ ஓரிடத்தில் பெய்யும் அதிக மழையும் வீணடிக்கப்படுகிறது. மழை நீரைச் சேமிக்க வேண்டும் என்ற விழிப்புணர்வு அற்றுவருகிறது. இவ்வாறான இவ்வுலகப் போக்கு கண்டிக்கத்தக்கது. தன் வாழ்வைக்கெடுத்துக்கொள்வதுடன் தனக்குத் துணையாகவும் இதனக்கு இணையாகவும் மதிக்கத்தக்க பல்லுயிரிகளையும் கெடுத்துவருகிறான். அறிவியல் எடுத்துரைக்கும் காரணங்கள் ஏற்புடையன. அறிவியல் சொல்லும் மாற்றங்கள் விரைவில் செயல்படுத்துவதற்குரியன. எனினும் அம்மாற்றங்கள் மனிதனின் மனதில் விதைக்கப்படும் அறத்தால் மட்டுமே சாத்தியமாகும். அதனாலே வள்ளுவர் வான்சிறப்பை எடுத்துரைத்து அறம் உரைத்தர் என்பது உணரப்படும்.

**முடிவுரை**

திருக்குறளில் 1330 குறட்பாக்கள் ஒன்பது இயல்களாக மூன்று பால்களாக உள்ளன. எனினும் இவற்றின் ஒருமைத்தன்மை ஒன்றாக அமைதல் வேண்டும். இவ்வொருமைத் தன்மை எனபது அறவாழ்வாக அமைகிறது. இல்லறத்தானின் அறவாழ்வு துறவறத்தானின் அறவாழ்வு காதல் மற்றும் கற்பு வாழ்விற்கான அறவாழ்வு என்றமைகிறது. இவ்வறவாழ்வு இல்லாச் சூழலில் மனிதன் தானும் கெட்டு இவ்வுலமையும் கெடுப்பான் என்பதும் அக்கெடுதல் வாரி வழங்குன்றி நிகழும் என்பதும் வள்ளுவரால் சுட்டப்படுவது விளங்கும்.

**நூற் பட்டியல்**

1. *திருக்குறள்*, பரிமேலழகர் உரை, சாரதா பதிப்பகம், சென்னை 14.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com



# பரிமேலழகர் உரையும் வள்ளுவர் அறமும்

## The Explanations of Parimelalagar and Valluvar's Ethics (Aram)

**முனைவர் மு.சு கண்மணி,** உதவிப் பேராசிரியர்,
தமிழ்த்துறை, ஸ்ரீசேவுகன் அண்ணாமலை கல்லூரி, தேவகோட்டை.

## Abstract

*The aricle is a decoding of the explanations of the Thirukkural scholar Parimelalagar and the concept of Ethics of Thiruvalluvar. Ethics are the living evidence of humanit. Without it no human charity and compassion cannot exist the true value of the ehics are largely ascribed by Valluvar. Parimelalagar was the one who wrote explanations to "Thirukkural". His concepts are the close aide to understand kurals efficiently by getting the vital core to the deep of ones soul. Hence, the study focuses and investigates on the manner of judgement and punishing methods as said by Thiruvalluvar in "Thirukkural"*

**Keywords:** Explanations of Parimelalagar, Valluvar's Ethics, *Thirukkural*

*திருக்குறள்* உலகம் போற்றும் நீதி இலக்கியமாக இருக்கிறது. இதனை முதன்முதலில் சுவடிப் பதிப்பு வடிவில் அச்சாக்கம் செய்தவர் எல்லீஸ். 1812இல் திருக்குறள் அறத்துப்பால் என்று வெளிவந்தது. இவரின் பெயர் பிரான்சிசு வைட் எல்லிசு. இவர் பிரித்தானிய அரசின்கீழ் பணியாற்றிய அதிகாரி ஆவார். திருக்குறளை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்ததுடன், அவற்றிற்கு விளக்கவுரையும் எழுதியுள்ளார்.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட திருக்குறளுக்கு கி.பி. 10ஆம் நூற்றாண்டு முதல் தற்பொழுது வரை பலர் உரை எழுதியுள்ளனர். திருக்குறளுக்கு உரையெழுதிய பழம்பெரும் உரையாசிரியர்கள் தருமர், மணக்குடவர், தாமத்தர்,நச்சர், பரிதி, திருமலையர், மல்லர், பரிப்பெருமாள், காலிங்கர், பரிமேலழகர் ஆகிய பத்துப்பேர்கள். அதில் மணக்குடவர், பருதி, பரிப்பெருமாள், காலிங்கர், பரிமேலழகர் ஆகிய ஐவர் உரையைத் தவிர பிற உரைகள் கிடைக்கப்பெறவில்லை. அதன்பின் கி.பி 18, 19, 20, 21 ஆம் நூற்றாண்டுகளில் மேலே குறிப்பிட்ட உரையாசிரியர்களின் உரைகளைத் தழுவி பல உரைகள் வெளிவந்துள்ளன.

பழம்பெரும் உரையாசிரியர்களில் சிறந்தவராகவும், திருக்குறள் உரைகளில் சிறப்புப் பெற்ற உரையாகவும் ஆய்வாளர்களால் கருதப்படுவது பரிமேலழகர் உரையே ஆகும்.

**"பாலெல்லாம் நல்லாவின் பாலாமோ: பாரிலுள்ள**
**நூலெல்லாம் வள்ளுவர் செய் நூலாமோ: நூலற்**
**பரித்தவுரையெல்லாம் பரிமே லழகர்**
**தெரித்தவுரை யாமோ தெளி"**

என்று பரிமேலழகரின் உரைச்சிறப்பை *தொண்டை மண்டல சதகம்* குறிப்பிடுகிறது. பன்னூல் புலமை பெற்ற பரிமேலழகரின் உரை கூறும் வகையிலிருந்து உணர்ந்து கொள்ளமுடிகிறது. இலக்கிய நயம் மிளிரப் பொருள் ஆழம் தோன்றக் காரண காரிய விளக்கம் ஒளிர, இலக்கண நுட்பம் தெளிவுபெற பல குறட்பாக்களுக்கு அதன் தன்மையுணர்ந்து கூறியிருக்கும் கருத்துக்கள், மிகவும் சிறப்புடையதாகும். பரிமேலழகர் உரைக்கு முன்னால் சில பல உரையாசிரியர்களின் உரைகள் நிற்க முடியாமல் போய்விட்டது. சிலவை காணாமலே

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

போய்விட்டன. இருப்பினும் அவரின் வடநூலாரின் கொள்கையைப் பின்பற்றலும், வைணவ சமயப் பற்றும், வர்ணாசரம கொள்கையும் கொண்ட உரைவிளக்கம், வள்ளுவ நெறிக்கு முற்றிலும் முரண்பாடாக உள்ளது. ஆகவே பரிமேலழகரின் உரைத்தன்மை சிலவற்றை இங்கு ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாக அமைந்துள்ளது.

**பரிமேலழகர்**

பரிமேலழகரின் காலம் 13ஆம் நூற்றாண்டாக இருக்கக் கூடும் என்று ஆய்வாளர்கள் நிறுவுகின்றனர். இவர் உரையின் தன்மையை கண்ணுறும் பொழுது வைணவச் சமயத்தவராக இருக்கக் கூடும் எனத் தெரிய வருகிறது. இதற்குச் சான்றாகத் திகழ்பவை காஞ்சிபுரம் வரதராசப் பெருமாள் கோவிலுள்ள கல்வெட்டும், திருக்குறள் உரையில் காணப்படும் வைணவப் பற்றும்.

திருக்குறள் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்னும் மூன்று பால்களை உள்ளடக்கியது என்பது அடிப்படை உண்மை. ஆனால் பரிமேலழகர் *திருக்குறள்* வீடு பேற்றை பேசுவதாகக் கூறுகிறார். வள்ளுவர் குறிப்பிடும் அறம், பொருள், காமம் என்பது வடநூலாரின் தருமம், அதர்மம், காமம், மோட்சம் தொடர்பானது என்று கூறுகிறார். வள்ளுவர் மனுநீதி என்னும் வருணாசர தர்மத்தைத் தான் தமிழில் தந்துள்ளார் என்றும் கூறுகிறார்.

பரிமேலழகர் தம் முன்னுரையிலேயே வருணாசிரம கொள்கையின் அடிப்படையில் எழுந்ததே திருக்குறள் என்பதை உணர்த்த முற்படுகிறார்.

**“அறமாவது, மனு முதலிய நூல்களில் உதித்தன**
**செய்தலும் விலக்கிய ஒழித்தலும் அம்”**

**மனுதர்மம்**

மனுநூல்களில் கூறியிருக்கும் கொள்கையாவது வர்ணாசரம தர்மமாகிய பிரம்மன் தலையிலிருந்து பிறந்தவன் பிராமணன், தோளிலிருந்து பிறந்தவன் சத்திரியன், தொடையிலிருந்து பிறந்தவன் வைஷியன், காலிலிருந்து பிறந்தவன் சூத்திரன் இந்த படிநிலைகள் எதுவும் அனைவருக்கும் கீழாய் இருப்பவள் பெண் என்ற கோட்பாட்டினைக் கொண்டதாக அமைந்துள்ளது.

இதில் மேல் வர்ணத்தாராகிய பிராமணன் பிறப்பிலேயே உயர்ந்தவன் ஆகிறான். அவனுக்கு கீழ் பிறந்த இத்துணை வருணத்தாரும் எப்படிப்பட்ட பெரும் சிறப்புகளைச் செய்தாலும் அவன் உயர்குடி மேன்மையைப் பெய இயலாது. ஆனால் மேல் பிராமணன் எவ்வளவு கீழ் நிலையில் செய்தாலும் அவனுக்கு கீழ்நிலையோ, தண்டனையோ பெற மாட்டான் என்பதை உணர்த்துவதே மனுதர்மத்தின் தலையாகிய கொள்கையாக உள்ளது.

**“சாதுர் வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம்!” (கீதை: அத்.4: சுலோகம்.13)**

“அந்தப் பிரம்மாவானவர் உலக விருத்தியின் பொருட்டு, தன்னுடைய முகம், புஜம், தொடை, கால் இவைகளினின்றும் பிராமணன், சத்திரியன், வைசியன், சூத்திரன் இவர்களைக் கிரமமாக உண்டு பண்ணினார். (மனு:அத்.1-31) என்று மனுதர்மமும் கூறுகிறது. அதனையே பகவத்கீதையும் வழி மொழிகிறது. மனு வர்ணங்களைப் பிரம்மா உண்டாக்கினார் என்கிறார். கிருஷ்ணனோ நான்கு வருணங்களையும் தானே படைத்ததாய்க் கூறுகிறார். கடவுள் பெயரில் மாறுபாடே ஒழிய, கடவுள் தான் வர்ணங்களை உருவாக்கியதாக இருநூல்களும் கூறுகின்றன.

பிராமணன் பிறவிச் சிறப்பாளன். தேவரும் மதிக்கத் தக்கவன். முனிதரில் உயர்ந்தவன். தேவமந்திரமே (வர்ணாசிரம தர்மம்) அவன் உயர்வுக்குக் காரணம். எனவே அவன் முடிவுப்படி நடக்க. (மனு:11:84) “அரசன் பிராமணர் அறிவுரை கேட்பது நன்று. அது ஆக்கம் தரும். அவர்களின் முடிவிற்கும் புறம்பாய் நீதி வழங்கிய அரசர்கள் இருந்தனர். (மனு.7:37)

“வைதீகமாயிருந்தாலும் லவுகீகமாயிருந்தாலும் அஜ்நியானது எப்படி மேலான தெய்வமாகவே இருக்கிறதோ, அப்படியே பிராமணன் நானியாயிருந்தாலும் அவனே மேலான தெய்வம்!” (மனு: 9:317). பத்து வயதுள்ள பிராமணனையும் நூறு வயதுள்ள சத்திரியனையும் தகப்பன்

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

பிள்ளையாக அறிய வேண்டியது. பிராமணன் தகப்பன் மரியாதையும் சத்திரியன் புத்திர மரியாதையும் வகிக்க வேண்டியது" (மனு.2: 135)

இவ்வாறு மனுதரும சாஸ்திரம் பிராமணன் என்பவன் தான் மனித குலத்திலேயே உயர்ந்தவன் என்ற கொள்கையை உடையதாக உள்ளது. ஆனால் திருக்குறளில் திருவள்ளுவரோ,

**"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா**
**செய்தொழில் வேற்றுமை யான்"** (98: 2)

பிறப்பு என்பது அனைவருக்கும் பொதுவானது. ஆவரவர் செய்யும் தொழிலால் ஏற்படும் சிறப்பு தன்மையினை இதனுடன் பொறுத்திப்பார்க்க இயலாது என்று கூறுகிறார். மேலும்,

**"மேல்இருந்தும் மேலல்லார் மேல்அல்லர் கீழ்இருந்தும்**
**கீழ் அல்லார் கீழல்லவர்"** (98: 3)

என்பது அறமாகாது என்ற கூற்றினை வள்ளுவர் முன் மொழிவதை தெளிவாக உணரமுடிகிறது.

**ஒழுக்கம்**

பரிமேலழகர் ஒழுக்கம் பற்றி கூறுமிடத்து "ஒழுக்கமாவது அந்தணர் முதலிய வருணத்தார் தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரமசாரியம் முதலிய நிலைகளினின்று, அவ்வவ்வற்றிற்கோதிய அறங்களின் வழுவாது ஒழுகுதல்" அதாவது வர்ணாசிரம தர்மத்தின்படி அவரவர் படிநிலைகளில் இருப்பதுவே ஒழுக்கமாகக் கொள்ளவேண்டும் என்று கூறுகிறார்.
ஒழுக்கம் என்பது பிறப்பினால் வருவது இல்லை அவரவர் செய்யும் செயலாக வரக்கூடியது என்று வள்ளுவர் கூறுகிறார்.

**"நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் தீயொழுக்கம்**
**என்றும் இடும்பைத் தரும்"** (14: 8)

அதைத்தவிர நற்பண்புகள் இருந்து வழுவி நடப்பதும் உலகம் கற்பித்த அல்லது நடைமுறையில் இருக்கும் பிறன் இல்விழையாமை, பொறையுடைமை, அழுக்காறாமை போன்ற நல்ல பண்புகளே ஒழுக்கம் என்று வள்ளுவர் கூறுகிறார்.

மனுதரும கூறுக்கள் கூறும் ஒழுக்கமானது பிராமணன் என்னும் உயாகுடி பிறந்தவன் என்று கருதத் தக்கவன் சொல்லினை கீழ் வருணத்தார்கள் கேட்டு நடக்க வேண்டும். பிராமணன் மனம் கோணாது நடப்பதும் அவனுக்குப் பணிவிடை செய்வதுமே ஏனைய கீழ் வருணத்தாரின் கடமையாக கூறுகிறது.

**தானம்**

**"பிராமணன் முதல் வருணத்தான் ஆனதாலும்**
**பிரமாவின் முகமாகிய உயர்ந்த இடத்தில்**
**பிறந்ததினாலும், எல்லா வருணத்தாருடைய**
**பொருள்களையும் தானம் வாங்கத் தலைவனாகிறார்."**

மனுதர்ம சாஸ்திரம் கூறும் தானம் குறித்த கருத்து அடிப்படை உலகநீதிக்கு எதிரான ஒன்றாக உள்ளது. இரவு அச்சம் என்பது ஒருவன் மானத்தை இழந்து இரப்பதற்கு அஞ்சுதல் எனப்படும்.

**"ஆவற்கு நீரென்று இருப்பினும் நாவிற்கு**
**இரவின் இளிவந்தது இல்"** (107: 6)

ஒரு மனிதன் தனக்கென்று இரப்பது இழிவு என்பதை விட ஒருபடி மேலே போய், தன்னிடம் உள்ள பசுவாகிய விலங்கிற்கு நாவறட்சிக்காக நீர் வேண்டும் என்று இரப்பது கூட நாவிற்கு இழிவைத் தரக்கூடியது என்கிறார். நாவறட்சிக்காக தனக்காகக் கூட இல்லை ஒரு

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

ஐந்தறிவுடைய விலங்கிற்காகக் கூட இரத்தல் என்பது கூட இழிவானதாகக் கருதும் கருத்தினை உடையவராக வள்ளுவர் இருக்கிறார்.

உலகில் இரக்கும் நிலையில் மனிதன் வாழ்க்கை இருப்பதே மிகவும் கொடுமையானது என்று கூறுமிடம் இரத்தல் நிலைப்பாட்டின் கொடுமையினை எடுத்து இயம்புவதாய் உள்ளது.

**"இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து**
**கெடுக உலகுஇயற்றி யான்"** (107:2)

ஒருவன் இரந்துதான் உயிர்வாழ வேண்டும் என்ற நிலை இருந்தால், இப்படிப்பட்ட நிலைக்குக் காரணமான உலகை இயற்றியவன் இரப்பவரைப் போல அலைந்து திரிந்து கெட்டுப் போவானாக என்று தன் சினத்தின் அறத்தினை வெளிப்படுத்துகிறார் வள்ளவர். வள்ளுவரின் அறத்திற்கு முன்னால் இறைவனாக இருந்தாலும் அவருக்கும் தண்டனை ஒன்றே. ஆகால் மனிதரும் கோட்படிட்டின் அடிப்படையில் பிராமணன் தொழில் வேதம் ஓதுதல், ஓதுவித்தல் மற்றும் இரத்தல் அவர்கள் கோட்பாட்டின் அடிப்படையில் இரத்தல் இழிவானதல்ல அடிப்படையானது.

**கல்வி**

கல்வி என்பது அனைத்து மனிதர்களுக்கும் பொதுவானதாகும். மனிதரும் குறிப்பிடவில்லை. மனுதருமத்தில் அடிப்படையில் மூன்று வருணத்தாருக்கு மட்டுமே கல்வி கற்கும் உரிமை பெற்றவராக உள்ளனர். அதுவும் மூவருக்கும் பொதுவான கல்வி இல்லை. முதல் வருணத்தார் என்று கருதப்படுபவர்களுக்கு வேதம், ஓதுதல், ஓதுவித்தல், தவம் செய்தல் அடுத்த நிலையில் இருப்பவர்க்கு வில், வேல் வித்தைகளைக் கற்றல், அதற்கு அடுத்த வர்ணத்தார் வணிகம் கற்றல், கீழ் வர்ணத்தார் கல்வி கற்கும் உரிமை கிடையாது. மேலுள்ள வர்ணத்தாருக்கு அடிமை வேலைப் பார்த்தல் என்றே கூறுகிறது. இதனை மீறுபவர்களுக்கு தண்டனையும் அளிக்கப்படுகிறது. அவர்களது புராண, இதிகாச கதைகளில் சம்புகள் வதம், ஏகலைவன் கட்டை விரல், சூர்ப்பணகை அங்கச் சிதைவு, கர்ணனின் உயர் என்று அத்தகைய கதாபாத்திரங்கய் வர்ணாசிரம கொள்கையை நிலைநிறுத்துவனவாகவே அமைந்துள்ளது.

"பிராமணர் இந்த மனுநூலைப் படிக்கலாம்: மற்ற வருணத்தார்க்கு ஓதுவிக்கக் கூடாது" (மனு.த.சா.அ.1 சு.103). "சூத்திரன் பக்கத்தில் இருக்கும் போது வேதம் ஓதக் கூடாது" (மனு.த.சா.அ.1 சு.99) வேதத்தைக் கேட்கிற சூத்திரனது காதுகளில் ஈயத்தையும், மெருகையும் உருக்கிட வேண்டும். வேதத்தைச் சொல்கிற சூத்திரனது நாக்கை அறுத்தறிய வேண்டும். இதுபோன்ற மனித விரோத கொள்கை உடையதாக மனுதர்மம் திகழ்கிறது.

ஆனால் வள்ளுவமோ கற்க வேண்டும். கசடறக் கற்க வேண்டும், எண் எழுத்து இவை இரண்டும் மனிதர்களுக்குக் கண் போன்றது. கற்றனைத்தூறும் அறிவு, கல்லாதவர் முகத்தில் இருப்பது கண்ணல்ல புண் என்று கல்வியின் அவசியத்தை வலியுறுத்துவதுடன் கல்லாதவன் நிலை குறித்து 'கல்லாமை' (41) என்ற அதிகாரத்தில் விளக்குகிறார். 'விலங்கொடு மக்கள் அனையர்' (41.10) என்று கல்லாதவர்களின் இழிநிலையைச் சுட்டுகிறார். கல்வி கற்றவராக இருந்தாலும் பண்பில் சிறந்தவர்களின் சொற்களைக் கேட்க வேண்டும் என்று கேள்வி (42) கல்வியின் சிறப்பு குறித்துக் கூறுகிறார்.

**"செவியின் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்**
**அவியினும் வாழினும் என்"** (42:10)

கேள்வி அறியாத மக்கள் வாயுணர்வின் மாக்கள் என்று விலங்குகளின் நிலைக்கு கீழ் தள்ளுகிறார் மனிதர்களை. கல்வியும், கேள்வியும் தான் ஒருவனை சிறப்பு தன்மையடையக் காரணம் என்று கூறுகிறார் வள்ளுவர்.

**தொழில்**

உலகில் மக்கள் வாழ்தலுக்கான தொழில்கள் உள்ளன. இருப்பினும் எல்லாவற்றிற்கும்

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

அடிப்படை உழவுத் தொழிலே. உணவு என்பது உயிரினத் தேவை. ஆறறிவும் படைத்த மனிதன் உணவிற்கான தேடுதலை விடுத்து நிலைத்த இருப்பிடத்தையும் உணவு தேவையை நிறைவு செய்யும் உழவுத் தொழிலையும் கண்டுிந்தான். உழவுத் தொழில் இல்லையேல் உலக இயக்கம் நின்றுவிடும் என்ற அடிப்படையை உணர்ந்த வள்ளுவர் உழவுத் தொழிலின் சிறப்பினை முதன்மைப் படுத்துகிறார்.

**“உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாம்**
**தொழுதுண்டு பின்செல் பவர்” (104: 3)**

என்று உணவுக்கான தேவையை நிறைவேற்றுபவர்களே வாழ்தல் என்ற நிலைப்பாட்டினை உடையவர்கள். மற்றவர்கள் அவர்களைப் பின்பற்றி அவர் தரும் உணவுப் பொருளை உண்டு வாழ்பவர்களே என்று கூறுகிறார். உலகம் உழவுத் தொழில் செய்பவரின் பின்னே தான் செல்கிறது என்று (104:1) அதன் அடிப்படையில் விளக்குகிறார்.

ஆனால் மனுவில்,

**“பயிர்தொழில் என்று நினைகிறார்கள்**
**அந்தத் தொழில் பெரியோர்களால் பெரிதும்**
**இகழப்பட்டதாகும்” (மனு.த.சா.அ.10சு.84)**

**இறைவன்**

திருவள்ளுவரின் குறிப்பிடப்படும் ‘இறைவன்’ என்ற சொல்லாடல் கடவுளை தமக்கு அப்பாற்பட்ட சக்தியை தம்மை ஆள்பவராக படைத்தவராகக் கருதிக் கொண்டிருக்கும் கடவுள் தன்மையைக் குறிப்பிடுவது இல்லை என்பதை அவரின் குறளின் வழியே காணமுடிகின்றது. ‘இறைவன்’ என்ற சொல்லாடல் பல்வேறு இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது. ‘இறை’, ‘இறைவன்’ ஆகிய சொற்கள் அரசன், தலைமை, தலைவன் என்ற பொருள்களிலேயே திருக்குறளில் பயன்படுத்தப்பட்டுள்ளன.

‘இறைமாட்சி’ (அதி.39) நாட்டின் ஆட்சித் தலைவனான அரசனின் மாட்சித் தன்மைகளை எடுத்துக் கூறுவதாக அமைத்துள்ளார்.

**“முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு**
**இறைஎன்று வைக்கப் படும்” (அதி.39: பா.8)**

**முயற்சியே வெற்றி**

மனித சமுதாயத்தின் நம்பிக்கை என்பது தன்னை மீறிய ஏதாவதொரு ஆற்றல்வுள்ளது என்பதே. ஆனால் வள்ளுவர் அதனை மறுக்கிறார்.

**“தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சிதன்**
**மெய்வருத்தக் கூலி தரும்” (அதி.62.குற.9)**

எந்தவொரு செயலும் அதனைத் தொடர்ந்த வெற்றியும் தெய்வத்தின் கையிலில்லை என்பதோடு முடிக்காமல், தெய்வத்தால் செய்ய முடியவில்லையென்றாலும் என்று கூறுகிறார். நம்மலால் முடியாத காரியம் தெய்வத்தால் முடியும் என்பதே மனித சமுதாயத்தின் நம்பிக்கை. ஆனால் தெய்வத்தால் இயலாத காரியத்தைக் கூட உன்னால் முடியும். இடைவிடாது மெய்வருத்திய முயற்சியின் காரணமாக என்று கூறுகிறார். இதனைக் கூறு ஒரு உள்ளத் துணிவு வேண்டும். அது வள்ளுவரிடம் இயல்பாகக் காணப்படுகிறது.

மேலே கூறப்பட்ட செய்திகளின் ஆய்வின்வழி கீழ்க்காணும் உண்மைகளைக் கண்டறிய முடிகின்றது. வள்ளுவர் கூறும் அறம் மனிதர்களுக்கானது. பரிமேலழகர் கூறும் அறம் மனுதர்மத்திற்கானது. வள்ளவரின் அறம் பிறவிபேதம் ஒழிப்பது. மனுதர்மத்தின் அறம் பிறவிபேதம் ஏற்படுத்துவது. கல்வியின் பொதுமை வள்ளுவர் கூறுவது. உயர்ந்தவர்க்கானதே கல்வி, மீறி கற்போரும், கேட்போரும் தண்டனைக்கு உரியவர்கள் என்கிறது மனுதர்மம். பிறப்பினால் உயர்ந்தவர், தாழ்ந்தவன் என்ற பாகுபாடு இல்லை. மனிதர்கள் சமமானவர்களே.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

அவர்கள் கல்வி கற்பதினாலும், சிறந்த பண்புகளுமே உயர்வு, தாழ்வுக்குக் காரணம் என்கிறது வள்ளுவம். பிறப்பினால் ஏற்படும் உயர்வானது. எக்காலமும் எச்செலினாலும் கீழ் வர்ணத்தார்க்குக் கிடையாது என்பதும், மனிதனைப் பாகுபடுத்தவும், தாழ்மைப்படுத்தவும் செய்கிறது மனுதர்மம். ஊழ், மேலுலகம், விதி போன்ற பல நம்பிக்கைகளைத் தகர்ப்பதாக வள்ளுவம் உள்ளது. தெய்வத்தால் இயலாத செயலைக் கூட மனிதன் தன் தொடர் முயற்சியால் அடைய முடியும் என்பதையம், அடுத்தவனிடம் இரந்து வாழும் சூழ்நிலை ஒரு மனிதனுக்கு வாய்க்குமானால், அந்நிலைக்குக் காரணமான உலக இயற்றியான். இந்த இரத்தாலாகிய இழிநிலையை அடைந்து, அலைந்து திரிந்து அழிந்து போகட்டும் என்றும் தன் மனிதநேயப் பற்றை வெளிப்படுத்துகிறார் வள்ளுவர். கடவுள் அச்சம் என்பது சிறிதும் அற்றவராக இருப்பதை அவரின் குறட்பாக்களின் வழி உணரமுடிகின்றது. ஆனால் மனுதர்மம் கடவுள் கொள்கையிலேயே நிலைப்பெற்று இருக்கிறது. மேலும் அந்த கடவுளும் வேதத்திற்குக் கட்டுப்பட்டதென்றும், வேதம் பார்ப்பனர்களுக்குக் கட்டுப்பட்டதென்றும், பார்ப்பனர்களே அதீத ஆற்றல் மிக்கவர்கள் என்று மனுதர்மம் கூறுகிறது. மனிதப் பொதுமையையும் மனிதநேயத்தையும் மறுக்கிறது. திருக்குறளும் கோட்பாடுகளும், மனுதர்மக் கோட்பாடுகளுட் முற்றிலும் முரணானவை. ஆனால் பரிமேலழகர் இரண்டு அறங்களும் ஒன்று என்று கூறுகிறார்.

பரிமேலழகர் தம் முன்னுரையினையும், அவரின் வடமொழி சனாதனக் கொள்கை வழி வந்த உரையினையும் மறுத்து நாவலர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் தன் திருக்குறள் உரையில் மறுத்து எழுதுகிறார். பரிமேலழகரின் கூற்றின் விளக்கவும் தந்தை பெரியார் அவர்கள் திருக்குறளும் மனுதர்மமும் வேறு நூல்கள்: இருவேறு பண்பாடு: இருவேறு நாகரிகம்! என்பதை விளக்கவும், பரிமேலழகரின் தந்திரத்தை விளக்கவும், 1949 ஆம் ஆண்டு வள்ளுவர் நெறி விளக்க மாநாடு நடத்தினார். இதனால் கற்றவர்களால் மட்டுமே சொந்தம் கொண்டாடப்பட்ட *திருக்குறள்* மக்களின் பயன்பாட்டுக்கு வந்தது. ஜி.யூ.போப், மருத்துவர் ஆல்பர்ட், ஸ்வெட்சர், வாசரஸ் போன்றோர் திருக்குறளின் பெருமையை உணர்ந்த அளவுக்கு நம் மக்கள் உணராத நிலையில் தந்தை பெரியாரின் பணி திருக்குறளை மக்களிடம் பொதுமையாக்கியது. திருக்குறள் குறித்து மனோன்மணியம் சுந்தானார் அவர்கள் எழுதிய வரிகள் கீழ்வருமாறு, “வள்ளுவர் செய் திருக்குறளை மறவற நன்குணர்ந்தோர் உள்ளுவரோ மனுவாதி ஒரு குலத்துக்கு ஒரு நீதி” என்பதை நாம் ஆராய்ந்து நோக்கர்க்குரியது.

**நிறைவுரை**

திராவிடப் பண்பாடு வேறு, ஆரியப் பண்பாடு வேறு. திராவிடப் பண்பாடு மனிதநேய மிக்கது, மனிதர்கள் சமநோக்கில் பார்க்கக் கூடியது. மனிதநேயமற்ற, மனிதனைப் பாகுபடுத்துகின்ற ஆரியப் பண்பாட்டின் அறம் *திருக்குறள்* கூறும் அறமல்ல என்பதே இவ்வாய்வின் மூலம் நாம் உணரமுடிகின்றது.

**துணைநின்ற நூல்கள்**

1. திருக்குறள் உரைக்கொத்து, (பரிமேலழகர், மணக்குடவர், பரிதியார், காலிங்கர்) , ஸ்ரீகாசிமடம் - திருப்பானந்தாள் - 1993.
2. மனுதரும சாஸ்திரம், கி. வீரமணி அவர்கள் ஆய்வுரையுடன், திராவிடர் கழக வெளியீடு - 1919.
3. இரா.நெடுஞ்செழியன், திருக்குறள் தெளிவுரை, நாவலர் நெடுஞ்செழியள் கல்வி அறக்கட்டளை, சென்னை. ஐந்தாம் பதிப்பு-2011.
4. திருக்குறள், மு.வ உரை.
5. திருக்குறள் ஜி.யூ.போப்.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

# வள்ளுவர் சாற்றும் முறைவழங்கல்

# Judgement Ascribed in Valluvam

**அ. கணேசன்,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
இக்கால இலக்கியத்துறை, தமிழியற்புலம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை - 21.

## Abstract

*The present aricle is a study on the types of judgement methods and punishment as portrayed in "Thirukkural". To be just without unjustness is a virtue according to Tamil people. Valluvar lived in the times of monarchy; he points the virtues of kings and his straight forwardness of his scepter by dicting judgement in the society. The role of punishment in the society, control of crimes and punishment to murder and assassination are discussed in the paper. Hence, the study focuses and investigates on the manner of judgement and punishing methods as said by Thiruvalluvar in "Thirukkural"*

**Keywords:** Judgement, Valluvam, *Thiruvalluvar*

திருவள்ளுவர் காலம் முடியாட்சிக் காலமாகையால் அரசனே முறை வேண்டினார்க்கும் குறை வேண்டினார்க்கும் நீதி வழங்கினான். வள்ளுவன் மன்னர் எவ்வாறு முறை வழங்க வேண்டும், முறை தவறினால் வரும் கேடுகள் என்னென்ன, குற்றம் செய்தவர்களை எவ்வாறு தண்டிக்க வேண்டும் என்றெல்லாம் கூறுகின்றார். அக்காலத்தில் இன்று உள்ளது போல் நீதி மன்றங்கள் இல்லை.

**முறை வேண்டுநர்க்கும் குறை வேண்டுநர்க்கும்**
**வேண்டும வேண்டுப வேண்டினார்க்கு அருளி**
**இடை தெரிந்து உணரும் இருள்நீர் காட்சிக்**
**கொடைக் கடன் இறுத்த கூம்பா உள்ளத்து**
**வரும்புஇல் சுற்றமொரு இருந்தோன்" (பெரும். 443 – 447)**

என்னும் *பெரும்பாணாற்றுப்படை* அடிகளும் அக்காலத்தில் நீதிநெறிமுறைகளை வேண்டி வந்தோர் யாராயினும், தங்கள் குறையைத் தீர்த்துக்கொள்ள விரும்பி வந்தோர் யாராயினும் அவர்களை வரவேற்று இன்சொற் கூறி அவர்கள் வேண்டுகின்றவைகளை வேண்டியபடியே கொடுத்து நடுவு நிலையில் இருந்து உண்மையைக் கண்டறிந்தான் என்று நமக்கு அறிவிக்கின்றன.

**தண்டனையின் நோக்கம்**

மனித சமுதாயத்தில் குற்றங்கள் பெருகாமல் குறைய வேண்டுமானால் குற்றவாளிகளுக்குக் கொடிய தண்டனைகள் கொடுத்தாக வேண்டும். சிலர் குற்றம் செய்வதால் குற்றம் செய்யாத பலர் தீமையடைகின்றனர். பலர் நன்மைக்காகச் சிலரைத் தண்ணடிப்பது நீதியும் நேர்மையுமாகும். குற்றம் புரிந்ததால் தப்பித்துக் கொள்ள முடியாது. கடுந் தண்டனைக்கு ஆளாகியே தீர வேண்டும். மக்கள் சமுாயத்திற்குத் தீங்கு செய்தால் உயிருக்கே ஆபத்துண்டாகும் என்கின்ற அச்சம் மனித சமுதாயத்தில் நிலவ வேண்டும். குற்றங்களுக்கேற்பக் கடுமையான தண்டனைகள் கொடுப்பதன் வாயிலாத்தான்

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

குற்றவாளிகளின் எண்ணிக்கையைக் குறைக்க முடியும். "தண்டம் செலுத்தப்படுவதின்றேல் அது மச்ச நியாயத்தை விளைவிப்பதாம், அரசன் தண்டத்தைச் செலுத்துவானல்லனேல் வலியவன் மெலியவனைத் துன்புறுத்துவான். அத்தண்டத்தால் காக்கப்படின் மெலியவனும் வலியனாவான்" என்று கௌடலியர் கூறியுள்ளார். "தண்டனையினால் அரசனது மேன்மை நிலை பெறுவதால், தண்டனையே அரசனாகவும், எல்லா உயிர்களையும் ஒடுக்கும் வலிமையுள்ளதால் ஆண்மையுடையதாகவும், ஒன்றைக் கட்டளையிடவும் அடக்கவும் வல்லதாகையினால் நான்கு ஆசிரமங்களுக்கும் அரணாகவும் இருக்கிறது.

தண்டனை நீதி நன்கு செலுத்தப்பட்டால் குடிகள் இன்புறுவர். கோல் சாய்ந்தால் யாவையும் அழிவுறும். உரியவர்களைத் தண்டிக்கச் சோம்பினால் சின்ன மீன்களைப் பெரிய மீன்கள் விழுங்குவது போல் வலியார் எளியார் பொருளைக் கவர்ந்து அவர்களைக் கொன்றுவிடுவர். தண்டனை உண்டென்றால் மட்டுமே உலகோர் நெறியில் நிற்பர். இயல்பிலேயே அவ்விதம் நடக்கமாட்டார். தண்டனைக்கு அஞ்சியே உலகம் இயங்குகிறது. ராஜதண்டனையில்லை என்றால் உலகில் சாதி மரியாதை, சாத்திர மரியாதைகளை மக்கள் கடந்துவிடுவர். "பிறர் மனைவியை அபகரித்தல், களவாடல், வன்செய்கை இவற்றால் ஒருவரையொருவர் பொருது நிற்பர்" என (மநுதர்ம சாஸ்திரம், பக். 174 -175, தமிழில் திருலோக சீதாராம்) குறிப்பிடுகிறார்.

அரசன் கொடியவர்களைக் கொலையால் ஒறுத்துத் தக்கோரைக் காத்தல் உழவன் களையைக் களைத்து பைங்கூழைக் காத்ததனோடு ஒக்கும் என்று வள்ளுவர் கூறுகிறார். பண்டைத் தமிழக வேந்தர்கள் பொது மக்கள் நலனையே குறிக்கோளாகக் கொண்டவர்களாதலால் அவர்கள் தவறு செய்வோர்க்குக் கடுமையான தண்டனைகளை வழங்கவில்லை. திருவள்ளுவர் முடியாட்சிக் காலத்தவராயினும் முடியாட்சியால் குடியாட்சியை விரும்பியவர். ஆகவே, அவர் கொலையால் கொடியவர்களை ஒறுத்துத் தக்கோரைக் காத்தல் உழவன் களையைக் களைந்த பைங்கூழைக் காத்ததனோடு ஒக்கும் என்று முக்காலத்துக்கும் பொருந்தும்படி உரைத்தார்.

**ஒறுக்கும் முறை**

குற்றம், செய்தவர்களை ஒறுப்பது ஒழுங்குமுறைதான். குடிகளைப் பிறர் நலியாமற் காத்துத் தானும் நலியாது பேணி அவர் மாட்டுக் குற்றம் நிகழின் அதனை ஒறுப்பான் ஒழித்தல் வேந்தனுக்குப் பழியன்று தொழிலாகும் என்கிறார் வள்ளுவர். அரசன் தன் கீழ் இருப்போர் குற்றம் செய்தால் நடுவுநிலையுடன் தண்டத்தை ஆராய்ந்து செய்வதே முறை என்கிறார்.

**"ஓர்ந்து கண்ணோடாது இறைபுரிந்து யார்மாட்டும்**
**தேர்ந்து செய்வ.்.தே முறை" (குறள் 59)**

என்பது குறள். குற்றம் செய்வதனை இவன் குற்றவாளிதானா என்று பலகாலும் தக்கபடி ஆராய்ந்து குற்றவாளி என்றே ஐயத்திற்கு இடமின்றி முடிவு கண்டால், செய்த குற்றத்தின் அளவிற்கு மேற்படாமலும், தண்டனைக்குப் பின்னர் மீண்டும் அக்குற்றவாளி அதே குற்றத்தைச் செய்யாதவர். தண்டிக்கப்பட்டவன் நன்னெறியில் நிற்குமாறும் தண்டனை வழங்குதல் வேண்டும். பாண்டின் ஆராயாது கோவலனைக் கொலை செய்த குற்றத்திற்காக அவன் மட்டும் அழியவில்லை. மதுரையும் அழிந்தது. ஆயிரம் குற்றவாளிகள் விடுதலை செய்யப்படலாம். ஆனால் ஒரு குற்றமற்றவன் தண்டிக்கப்படக் கூடாது. குற்றவாளி யாராயிருந்தாலும் சரி, நண்பன், உறவினர் அல்லது பகைவன் என்று கருதாமல் குற்றத்திற்குத் தக்கபடி தண்டிக்க வேண்டும் என்பதினைப் புறநானூற்றுப் பாடல் ஒன்று.

**"நீ மெய்கண்ட தீமை கானின்**
**ஒப்ப நாடி அத்தக ஒறுத்தி" (புறம். 10)**

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

என்கிறது அரசன் குற்றவாளியைக் கடுமையாகத் தண்டித்து விடுவது போலக் காட்டித் தண்டிக்கும்போது அளவோடு தண்டிக்கவேண்டும்.

**"கடி தோச்சி மெல்ல எறிக நெடிதாக்கம்**
**நீங்காமை வேண்டு வவர்"** (குறள் 57)

என்கிறார் வள்ளுவர். கடுமையான தண்டனைகள் உடனே பலன் விளைவிப்பன போலத் தோன்றலாம். ஆனால், அவை காலப்போக்கில் நெடிய ஆக்கத்தைத் தரக்கூடியன அல்ல. கடுமையான தண்டனைகள் ஓர் ஆட்சியைப் பயங்கரமான ஆட்சியாக மாற்றிவிட போதுமானவை என்று வள்ளுவர் எச்சிரிக்கிறார். மக்கள் பயப்படத்தக்க தண்டனை முறையைக் கையாளக் கூடாது என்பது அவரது கொள்கை. அளவுக்கு மீறி அநியாயமான முறையில் கொடுக்கப்படுகின்ற தண்டனைகளே அந்த அரசாங்கத்தை வீழ்த்துதற்குரிய எதிர்ச் சக்திகளை உருவாக்கப் போதுமானவையாக அமைந்துவிடுகின்றன என்பதை அன்னிமிஞிலியின் கதையால் அறியலாம். அவள் தந்தையின் ஆநிரைகள் அரசாங்கத்துக்குச் சொந்தமான நிலத்தில் புகுந்து மேய்ந்து பயிரைக் கெடுத்தற்காகத் கோசர்கள் அவன் கண்கள் இரண்டையும் பிடுங்கி விட்டனர். இதனால் ஆற்றொணாத் துயரம் அடைந்த அன்னிமிஞிலி ததியின் என்ற அரசனை அடைந்து கோசர்களைக் கொன்று அவர்கள் அரசனைக் கவிழ்க்க வேண்டும் என்ற தன் எண்ணத்தை எடுத்துக் கூறினாள். திதியனும் அவள் விருப்பத்திற்கிணங்கிக் கோசர்கள் மீது படையெடுத்து அவர்களைக் கொன்று வீழ்த்தினான். கோசர்கள் வீழ்த்தப்பட்டவுடன் ஊரார் உவந்தனர். அன்னிமிஞிலியின் நோக்கத்திற்கு மக்களிடையே பேராதரவு இருந்தது. இச்செய்தியை,

**"பாசிலை அமன்ற பயறு ஆ புக்கென**
**வாய்மொழித் தந்தையைக் கண்களைந்து அருளாது**
**ஊர் முது கோசர் நனுவத்த சிறுமையில்**
**கலத்தும் உண்ணுள் வாலிதும் உடாஅன்**
**சினத்திற் கொண்ட படிவம் மாறாள்**
**மறங்கெடுதானைக் கொற்றக் குறும்பியன்**
**செறுவில் நன்மான் திதியற்கு உரைத்தவர்**
**இன்னுயிர் செருப்பக் கண்டு சினம் மாறிய**
**அன்னிமிஞிலி போல மெய்ம் மலிந்து**
**ஆனா உவகையம் ஆயினெம்" (அகம். 262)**

என்று பரணர் அகநானூற்றில் குறித்துள்ளார். கையிகந்த கடுந்தண்டம் ஒன்றே ஒவ்வொரு ஏழைச் சிறுமியையும் அன்னிமிஞிலி ஆக்கி ஏதோ ஒரு வழியில் அரசாங்கத்தைக் கவிழ்த்துவிடப் போதுமானதாகிவிடலாம் என்ற எச்சரிக்கை இதன் மூலம் கிடைக்கிறது. இது போன்றே ஒரு மாம்பழத்திற்காக ஒரு பெண்ணுக்கு மரண தண்டனை விதித்தான் நன்னன். அவனைப் பெண் கொலை புரிந்த நன்னன் என்று
புலவர்கள் கடிந்துரைத்திருக்கின்றனர்.

**"கடுமொழியும் கையிகந்த தண்டமும் வேந்தன்**
**அடுமுரண் தேய்க்கும் படை" (திருக்குறள். 57-7)**

**கொலைத் தண்டனை**

தற்காலத்தில் கொலைத் தண்டனை கூடாது என்று வாதிடுவோரும் உண்டு. கொலையாளிகள் உயிர்வாழ இடங்கொடுத்தால் மேலும், மேலும் கொலைக் குற்றங்கள் பெருகிக்கொண்டே போகும். கொலைத்தண்டனை இருக்க வேண்டும் என்பதைத்தான் ஆன்றவிந் தடங்கிய கொள்கைச் சான்றோர்களது கருத்து. பழந்தமிழர் அரசியலிலே கொலைத் தண்டனை கையாளப்பட்டு வந்தது. நாட்டு மக்களின் நல்வாழ்வுக்காக அரசாங்கங்கள்,

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

கடுங்குற்றம் புரிந்தோர்க்குக் கொலைத்தண்டனை கொடுக்கப் பின் வாங்கவில்லை. திருவள்ளுவரும் கொலைத் தண்டனைக்கு உடன்படுகிறார் என்ற உண்மையை,

**“கொலைகிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்**
**களை கட்டதனொடு நேர்” (குறள். 55 : 10)**

என்ற குறளாலும் அதற்கு “அரசன் கொடியவர்களைக் கொளையால் ஒறுத்துத் தக்கோரைக் காத்தல் உழவன் களையைக் களைந்து பைங்கூழை காத்தனோடு ஒக்கும் என்று பரிமேலழகர் கூறிய உரையாலும் அறியாலாம். கொடியார் என்பதற்குப் பரிமேலழகர் “தீக் கொளுவுவார் நஞ்சிடுவார் கருவில் கொல்வர், கள்வர் ஆறலைப்பார் கறை கொள்வார், பிறள் இல் விழைவார்” என்றிவர்களைக் குறிப்பிட்டு இவர்களுக்கெல்லாம் கொலைத்தண்டனை விதிக்க வேண்டும் என்பது வள்ளுவர் கருத்தென்று கூறுகிறார்.

**துணை நூல்**

1. திருக்குறள் உரைக்கொத்து, (பரிமேலழகர், மணக்குடவர், பரிதியார், காலிங்கர்) , ஸ்ரீகாசிமடம் - திருப்பானந்தாள் - 1993.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

# திருக்குறளில் இல்லறவியல் காட்டும் மானுட விழுமியங்கள்

## Human Virtues as Demonstrated in *Thirukkural's* Prologue (Domestic Life)

**இரா.கலாராணி,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரி (தன்னாட்சி), சிவகாசி.

**Abstract**

*The paper brings out the human virtues as demonstrated in the chapter Domestic Life of the Prologue of "Thirukkural". Life is a one to be achieved through a harmonious blend of virtues and situations of life. Valluvar speaks of the life oriented virtues in the chapter 'Domestic Life' that is inseperably vital to an individual to get a peaceful life. He elicits individual discipline, thankfulness, domestic lifehood, identifying moral codes and appreciation of thankfulness in the treatise. It favours the society with rich moral codes to lead a happy life. Therefore, this paper finds the corroboration related to ethical way of life and human virtues to lead a peaceful and successful life.*

**Keywords:** Human Virtues, *Thirukkural's* Prologue (Domestic Life)

**முன்னுரை**

மனிதன் மனிதனாக வாழ்வதற்கும் மதத்திற்கு அப்பாற்பட்ட கருத்துக்களை தன்னகக்குள் பொதிந்து வைத்துள்ளது திருக்குறள். இது மனிதன் மனிதனாக வாழ்வதற்கு ஒரு வழிகாட்டியாக செயல்படுகின்றது. இந்நூல் 80க்கு மேற்பட்ட மொழிகளில் மொழிபெயர்ப்பு செய்யப்பட்டுள்ளது. மனித வாழ்வின் அனைத்து தேவைகளையும் தனிமனித ஒழுக்கம், சமூக ஒழுக்கம், இல்லறநெறி போன்ற பொதுவுடமைக் கருத்துக்களை உள்ளடக்கியது. தனிமனிதனின் ஒழுக்கம் சமூக ஒழுக்கம் என்ற நிலையில் மனிதனுக்கும் அவனைச் சார்ந்த சமூகத்திற்கும் அறிவுரைகளை உலக மக்களுக்கெல்லாம் அறிவுறுத்தும் வகையில் பேசுகின்றது. இத்தகைய சிறப்புடைய திருக்குறலில் காணப்படும் இல்லறவியல் அறியலாகம் மானிட விழுமியங்களைப் பற்றி ஆராய்வதே இவ்ஆய்வுக்கட்டுரையின் நோக்கமாகும்.

**தனிமனித ஒழுக்கம்**

மனிதன் எப்பொழுதும் நடுநிலையில் நின்று செயல்படவேண்டும். தன்மனசாட்சிக்கு கட்டுப்பட்டு உண்மையாகவும், நேர்மை உடையவனாகவும், பாரபட்சம் பார்க்காமல் பொதுநிலையில் நின்று செயல்படுதல் வேண்டும். வள்ளுவர் இவை அனைத்தும் மனிதனக்குள் இருக்கவேண்டிய பண்புகள் என்கிறார். மனிதன் மனம்போன போக்கில் வாழக்கூடாது அவன் தராசுகோல்போல் நடுநிலைத்தன்மையுடன் இருக்கவேண்டும் என்பதை,

**"சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்ததொருபால்**
**கோடாமை சான்றோர்க்கு அணி" (குறள்.118)**

என்ற குறள் மனிதன் தராசுகோல் போல் நடுநிலையில் நின்று செயல்படவேண்டும். மனிதன் மனசாட்சிக்கப் பயப்படாமல் விரோதமாக நேர்மையற்றவனாக நடந்தால் அவன் இவ்வுலகில் வாழ்வதற்க தகுதியற்றவன். அவ்வாறு இல்லாமல் வறுமையான சூழ்நிலையானாலும் செல்வவளம் உள்ள சூழல்களிலும் அந்தந்த காலத்திற்கு தகுந்தாற்போல் மனசாட்சிக்கும்

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

சமுதாயத்திற்கும் பயந்து நேர்மையாக இருந்தால் அவன் சான்றோன் எனப் புகழப்படுவான் என்பதை,

**“கேடும் பெருக்கமும் இல்லல் நெஞ்சத்து**
**கோடாமை சான்றோர்க்க அணி” (குறள். 115)**

என்ற குறள் புலப்படுத்துவதைக் காணலாம். ஒரு மனிதனிடம் நடுநிலைத்தன்மை காணப்படவில்லையென்றால் அது அவனுடைய சந்ததியையும் அந்த சமுதாயத்தையும் அழித்து விடும் என்கிறார் வள்ளுவர். செல்வம் நிலையற்றது அச்செல்வத்தை நேர்மையான முறையில் சேர்க்கவேண்டும் அவ்வாறு சேர்க்கவில்லையென்றால் வந்த வழியே செல்வம் சென்ற விடும் என்பதை,

**“செப்பம் உடையவன் ஆக்கம் சிதைவின்றி**
**எச்சத்திற்கு ஏமாப்பு உடைத்து” (குறள்.112)**

என்ற குறள் உணர்த்துகின்றது. செல்வம் நேர்மையினால் சேமிக்க வேண்டும். அவ்வாறு சேமிக்கும் செல்வம் தன் சந்ததியையே வாழவைக்கும் என்ற கருத்தை பதிவு செய்கின்றார். ஒரு மனிதனின் உயர்வுக்கும் தாழ்வுக்கும் அவனது ஒழுக்கமே சிறந்த பண்பாகும். அப்பண்பு அவன் நடந்து கொள்ளும் முறையைப் பொறுத்து வெளிப்படும். ஒழுக்கம் இல்லையென்றால் அவனை இழிவாக கருதுவர். எனவே, அவன் உயர்வுக்கும் தாழ்வுக்கும் சமுதாயம் அடிப்படையாகாது அவன் நடந்துகொள்ளும் நடத்தையை காரணம் என்பதை,

**“ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்**
**உயிரினம் ஓம்பப் படும்” (குறள்.131)**

என்ற குறள் தனிமனித ஒழுக்கம் பற்றிக் குறிப்பிடுகின்றது. மனிதன் தன் ஒழுக்கத்தை உயிரைவிட பெரிதாக கருதவேண்டும். அவ்ஒழுக்கம் இல்லாதவனிடம் செல்வம் நிலையாக இருப்பதில்லை. ஏனென்றால் அச்செல்வத்தைப் பாதுகாக்கும் தன்மை அவனிடம் இருப்பதில்லை. செல்வம் இருந்தாலும் அச்செல்வம் விரைவில் மறைந்து போகும். இதனை,

**“அழுக்காறு உடையான்கண் ஆக்கம்போன்று இல்லை**
**ஒழுக்கம் இலாண்கண் உயர்வு” (குறள்.135)**

என்ற கருத்தை பதிவுசெய்கின்றார். ஆகவே ஒழுக்கம் என்பது பண்பாட்டுடன் தொடர்புபடுத்தி பேசுவர். அவை படிப்பினால் பெறுவது அன்று. ஒருவன் படிந்திருந்தாலும் அவனிடம் நல்ல பண்புகள் இல்லையென்றால் அவன் தீயவனாக கருதுவான். நல்ல பண்புள்ள மனிதன் உலக மக்களுடன் இன்ப, துன்பங்களில் பங்கெடுத்துக் கொண்டு வாழவேண்டும். அவ்வாறு வாழவில்லையென்றால் எவ்வளவு கல்வி கற்றாலும் அவன் கற்ற கல்விக்கு பயனில்லை என்பதை,

**“உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்**
**கல்லாத அறிவிலா தார்” (குறள்.140)**

என்ற குறளின் வழி தமக்கு அறிவுறுத்துகின்றார். எனவே ஒழுக்கமே ஒரு மனிதனக்கு சிறந்த பண்பையும் நல்ல குணங்களையும் மற்றவர்களை மதித்து வழி நடத்தி செல்லும் பண்பை வழர்க்கின்றது. உண்மையாகவும், நேர்மையாகவும் இருந்தால் இந்த சமுதாயத்தில் நல்வண்ணம் வாழலாம் என்பதை அறிவுறுத்துகின்றார் ஆசிரியர்.

**நன்றி**

மனிதன் ஒருவொருக்கொருவர் உதவி செய்து வாழவேண்டும். தனக்கு என்று கருதாது தன்னிடம் இருக்கின்ற சிறிய பொருளாக இருந்தாலும் மற்றவர்களுக்கு பகிர்ந்து கொடுத்து வாழவேண்டும். மனிதம் படைப்பின் காரணம் ஒருவரை ஒருவர் சார்ந்து வாழ்வதற்கே. இது மனித இயல்பு என்பதை நாம் உணரவேண்டும். பிறர் தனக்கு உதவி செய்தாலும் மற்றவர்களுக்கு நாம் உதவி செய்தாலும் அதனை மறப்பது நல்லதல்ல. இதனை,

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**"நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லது**
**அன்றே மறப்பது நன்று" (குறள்.108)**

என்ற நற்பண்புகள் மனிதனிடம் இருக்கவேண்டியவை. ஒருவர் நமக்கு தீமையை செய்தாலும் அவர் தனக்கு என்றோ செய்த நன்றியை நாம் நினைவில் கொள்ளவேண்டும். ஒருவர் செய்த நன்றியை எப்பொழுதும் மறக்காமல் காக்க வேண்டும். இதனை,

**"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை**
**செய்நன்றி கொன்ற மகற்கு" (குறள்.110)**

என்ற குறள் விளக்கம் தருகின்றது. இக்குறளின் மூலம் நன்றி மறந்து செயல்படுபவர்களை வன்மையாக கண்டிக்கிறார். ஒருவர் செய்த நன்றி சிரியாதக இருந்தாலும் அவர் தக்க தருணத்தில் செய்த உதவியை நாம் நினைவில் வைத்துக்கொள்ளவேண்டும் அப்போது தான் அவர் செய்த நன்றி நமக்கு நன்மையைத் தரும் என்பதை,

**"காலத்தினால் செய்த நன்றிசிறிது எனினும்**
**ஞானத்தின் மாணப் பெரிது" (குறள்.102)**

என்ற குறட்பாவின் வழி ஒருவர் செய்த உதவி பெரியதாக இருந்தாலும் அவர் செய்த உதவியை சிறியதாக நினைப்பவர்கள் அற்பகுணங்கள் உடையவர். அது அவர்களின் இயல்பான குணத்திலேயே அமைந்திருக்கும். ஆனால், தக்கதருணத்தில் செய்த உதவியை பெற்ற நற்குணம் உடையவர்கள் அவை சிறியாதாக இருந்தாலும் அதனை பெரியதாக எண்ணி போற்றுவர். இது அவர்களின் நற்பண்பேயாகும். ஒருவர் தமக்கு தீமையைச் செய்தாலும் அவர் ஒருகாலத்தில் செய்த நன்மையை நினைத்துப்பார்க்கும் நம்மிடம் இருக்கவேண்டும் என்கிறார். இவ்வாறு மனிதனுக்கு தேவையான ஒழுக்கத்தை பற்றி வள்ளுவர் குறிப்பிடுகின்றார்.

**இல்லற பாண்பு**

மனிதன் தன்னையும் தன்னைச் சார்ந்தவர்களையும் பேணிகாக்க வேண்டும். அவனிடம் இருப்பதைக் கொடுத்து தானம் உண்டு வாழ்தல் வேண்டும். பண்டைய நூல்கள் அறநூல்கள் சமயநூல்கள் அனைத்தும் ஈதல் ஒழுக்கத்தைப் பேசுகின்றன. காதல் இன்பத்தைவிட ஈதல் இன்பமே பெரிது என்பது தமிழர்களின் கருத்து. நல்ல மனம் படைத்தவர்கள் ஈதல் இன்பத்தையை பெரிதாக கருதுவர் அதற்கான தக்க வாய்பை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருப்பார். சங்க இலக்கியமான குறுந்தொகையில் தலைவன் பொருள்தேடச் செல்கின்றான் அவன் செல்லும்போது குறித்த காலத்தில் வருவதாக கூறிச்செல்கின்றான். அவ்வாறு சால்லிச் சென்ற காலத்தில் வரமுடியாத நிலையில் அவன்,

**"இரவலர் வாரா வைகல் பலவாகுக யான் செலவுறுதனவே" (குறுந். பா.137)**

என்று குறிப்பிடுகின்றான். அதாவது கொடுத்து உவந்து வாழாத வாழ்க்கை கொடிய துன்பம் தரக்கூடியது என்பதை இதன் கருத்தாக அமைகின்றது. வள்ளுவர் இல்லறப் பண்பு கொண்டவனிடத்தில் அன்பு வேண்டும் என்கிறார். அன்பு இல்லாதவனிடத்தில் இல்லறப்பண்பு இருப்பதில்லை என்கிறார். இதனை,

**"விருந்து இலோருக்கு இல்லை பொருந்திய ஒழுக்கம்" (கொ.83)**

என்று *கொன்றை வேந்தன்* குறிப்பிடுகின்றது. அதாவது விருந்தை உபசரிக்கம் பண்பு இல்லாதவனிடம் பொருத்தமான இல்லற ஒழுக்கம் இருப்பதில்லை என்கிறார் வள்ளுவர். அன்பு உள்ளம் கொண்டவனே வீட்டிற்கு வரும் விருந்தினரை இன்முகத்துடன் வரவேற்று உபசரிப்பான். அன்பு இல்லாவன் உடல் எலும்பில் தோல் மட்டும் போர்த்திக்கொண்டு இருப்பான் என்பதை,

**"அன்பின் வழியது உயர்நிலை அஃதில்லார்க்கு**
**என்பதோல் போர்த்த உடம்பு" (குறள்.80)**

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

என்ற கருத்தை பதிவுசெய்கிறார். நமது வீட்டிற்க வரும் விருந்தினரை அகம், முகம் மலர வரவேற்று உபசரிக்கவேண்டும். விருந்து எதிர் கொள்ளும் முறையை வள்ளுவர்,

**"இருந்தோம்பி இல்வாழ்வாது எல்லாம் விருந்தோம்பி**
**வேளாண்மை செய்தற் பொருட்டு" (குறள். 81)**

என்ற குறள் விளக்குவதைக்காணலாம். விருந்தோமபல் செய்வதது வேளாண்மை செய்வதற்கு ஒப்பாகும் என்கிறார். வள்ளுவர் விருந்தினர் என்பவர் சான்றோர், பெரியவர்கள் என வகைப்படுத்துகின்றார். இன்று விருந்தினர் என்பவர் தம்முடைய சுற்றத்தாரைக் குறிக்க பயன்படுகின்றது. விருந்து என்ற அதிகாரத்தில் விருந்து செய்வதால் ஏற்படும் பயன்களை பட்டியலிடுகின்றார். விருந்தை பேணிக்காப்பவன் மிகப்பெரிய செல்வவளத்தை உடையவன். அவன் விருந்தை எதிர்கொள்ளும் பொழுது அகமும் முகமும் மலர்ந்து விருந்தை பேணுவான் என்பதை,

**"அகனமர்ந்து செய்யாள் உறையும் முகனமர்ந்து**
**நல்விருந்து ஓம்புவான் இல்" (குறள். 84)**

என்ற குறள் புலப்படுத்துவதைக் காணலாம். வசதிகள் பல இருந்தும் பிறருக்கு உதவி செய்யாமல் வறுமையில் உள்ளவனைப் போல் வாழ்பவன் 'உடைமையுள் இன்மை' (குறள்.89) எனக் குறிப்பிடுகின்றார். எனவே விருந்தை இன்முகத்துடன் போற்றிகாக்க வேண்டும் நமது முகம் மலர்ச்சியுடன் விருந்தை ஏற்றுக்கொள்ள வேண்டும். முகமலர்ச்சி இல்லையென்றால் அவர்கள் முகம் வாடிவிடும் என்பதை,

**"மோப்பக் குழையம் அனிச்சம் முகம் திரிந்து**
**நோக்கக் கழையம் விருந்து" (குறள்.90)**

என்ற குறள் வழி விளக்குதைக் காணலாம். இங்கு விருந்தினரை அனிச்ச மலருக்க ஒப்பாககுறிப்பிடுவார். இத்தகைய விருந்துப் பற்றி சங்க இலக்கியங்கள் பேசுகின்றன. விருத்தை உபசரிப்பது இல்லரத்தாரின் கடமைகளில் ஒன்றாகும். கணவனோடு இருந்து விருந்தை எதிர்கொள்ளவேண்டும் என்ற மரபை எடுத்துரைக்கின்றது. அதற்காக தலைவன் பொருள் தேடச்செல்வதையும் நாம் காணமுடிகின்றது. விருந்தைப்பற்றி கொன்றைவேந்தன்,

**"மருந்தே யாயினும் விருந்தோடு உண்" (கொ.70)**

என்ற கருத்தை பதிவு செய்கிறது. தன் இல்லத்திற்க வந்த விருந்தினருக்கு தன்னிடம் இருக்கின்ற சிறிய அளவினாதாக உள்ள உணவாக இருந்தலும் பகிர்ந்து கொடுத்து உண்ண வேண்டும். பசித்து வந்தவர்களுக்கு அவர்கள் மனம் குளிரச் செய்து வாழவைப்பதே மனிதர்களின் கடமையாகும்.

**நன்றி அறிதல்**

நன்றி என்பது ஒருவனிடம் காணப்படும் இறைமைப்பண்பாகும் நற்குணங்களில் மிகச்சிறந்தகுணம் நன்றி அறிதல். இவை எல்லா கடமைகளுக்கும் முழுமுதற் காரணமாக விளங்குகின்றது. அதாவது ஒருவர் செய்த நன்றியை நினைவில் கொண்டு வாழ்தல் வேண்டும் இவை பிறர் சொல்லி வரக்கூடியது அன்று. அது இயல்பாகவே வரக்கூடியது. மனிதன் அதனைப் பின்பற்றி வாழுதல் வேண்டும் என்கிறார். திருவள்ளுவர் இதனை செய்நன்றி அறிதல் என்ற அதிகாரத்தில் குறிப்பிட்டுள்ளார். மாணிக்கவாசகர் தமது செய்யுளில் நாயினைப் பற்றி குறிப்பிடுகின்றார். நாய் நன்றி காட்டும் உணர்ச்சி உண்டு. அவ்வுணர்ச்சி தனக்கு இல்லையே என வருத்தமுறுகின்றார். நன்றி காட்டுதலினால் இறைவனை அடையமுடியும் என்றும் கருணையுள்ளம், நன்றிகாட்டும் பண்பு உள்ளவர்களிடம் மட்டுமே இறைவன் இருப்பான் என்ற கருத்தை பதிவு செய்கின்றார். இதனை,

**"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை**
**செய்நன்றி கொன்ற மகற்கு" (குறள்.110)**

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

என்ற குறட்பாவின் பயனை அறியலாம். ஒருவன் செய்த உதவி மறவாது காத்து ஒழுக வேண்டும். நாம் நன்றியறிந்து பிறருக்கு உதவி செய்து வாழவேண்டும். கலித்தொகை ஒருவன் துன்பப்படும்போது உதவியவர்களுக்கு அவருக்குத் தேவைப்படும் காலத்தில் உதவாமல் போனால் அத்துன்பம் நம்மைவந்து வருத்தும் என்பதை,

**"கற்பித்தான் நெஞ்சழுங்கப் பகர்ந்துண்ணூன் விச்சைக்கட்**
**டப்பித்தான் பொருளே போற்றமியவே தேயமா**
**ஒற்கத்துள் உதவியார்க் கதவாதான் மற்றவன்**
**எச்சத்துள் ஆயினம் அஃது எறியாது விடாதே காண்" (கலி.பா.149: 4-7)**

என்ற பாடல் வழி பிறர் தமக்கு தக்க தருணத்தில் உதவி செய்தபோது அவர் துன்பப்படும் காலங்களில் நாமும் உதவி செய்து வாழவேண்டும் என்று குறிப்பிடுகின்றது. எனவே நன்றியும் தனிமனித ஒழுக்கத்தில் முக்கியப்பங்காற்றுகின்றது என்பதை அறியலாம்.

**தொகுப்புரை**

வள்ளுவர் தனிமனித ஒழுக்கம் அவன் வாழும் சமுதாயத்தையை பிரதிபழிக்கச் செய்யும். அவன் மற்றவர்களிடம் பழகும் விதம், அவனது செயல்பாடுகள் அனைத்தும் அவனுடைய ஒழுக்கத்தை போற்றிகாக்கும். மனிதன் அறப்பண்புளில் சிறந்து தனிமனித ஒழுக்கம் என்பது இல்லறம், ஈதல், நன்றியறிதல் பொதுவுடமை, கல்வி, அன்புடமை போன்ற அனைத்து நிலைகளில் சிறந்தவனாக திகழவேண்டும் அப்பொழுதான் தான் சிறந்த மனிதனாக கருதப்படுவான். இத்தகைய சிறப்பு மிக்க கருத்துக்களை வள்ளுவர் தமது நூலில் பதிவு செய்கின்றார். இவை அனைத்தும் உலக மக்களுக்கு எல்லாம் பயன்படக்கூடிய ஒன்றாகும். அதனால்தான் இந்நூலை உலகப்பொதுமறை என்று குறிப்பிடுகின்றனர். எனவே இம்மறைநூலில் மனிதனுக்கு தேவையான அனைத்து வகையான கேள்விகளும் பதில் தரும்வகையில் இயற்றியுள்ளார். இத்தகைய சிறப்புமிக்க நூலில் இல்லறவியலில் காணப்படும் ஒரு சில மானுட விழுமியங்களைப் பற்றி ஆராயப்பட்டுள்ளது.

**நூற்பட்டியல்**

1. குன்றக்குடி அடிகளார், *குறட்செல்வம்,*
2. குன்றக்குடி அடிகளார், *வள்ளுவர் உலகம்,*
3. மு.வ. *திருக்குறள்,* மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1985.
4. *நீதிநூற்களஞ்சியம்,* பத்மதேவன், கொற்றவை பதிப்பகம், சென்னை, 1983.
5. கு.வெ.பாலசுப்பிரமணியன், *குறுந்தெகை,* NCBH, சென்னை, 2004.
6. *நீதிநெறிக்களஞ்சியம்,*

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

# வள்ளுவம் பிரதிபலிக்கும் உறவுநிலைகள்

## Relationship reflected in Valluvam

**த. கவிதா,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
எஸ். எ.்.ப். ஆர். மகளிர் கல்லூரி, சிவகாசி.

### Abstract

*The article brings out the portrayal of relationship depicted in "Thirukkural". Keeping good relationship is a fundamental one to get strong moral support. It elaborates on the meaning of the term 'relationship' and then explains on the immortal relationship to be with God for ones eternity. It scrolls down to unfold the ethics of relationship between the life partners, parents and children and friendship. As a result, this paper finds the rationale related to the ethical way of life in keeping the virtues of relationship to lead a serene and flourishing life.*

**Keywords:** Relationship, Words of Valluvar, *Thirukkural*

**முன்னுரை**

உலகம் உய்வுபெற வேண்டும் என்ற உயர்ந்த உறுதிப்பாட்டை உளம் கொண்டவர் வள்ளுவப் பெருந்தகை. தம்முடைய உயர்ந்த உறுதிப்பாட்டின் மூலம் ஆயிரத்து முந்நூற்று முப்பது அருங்குறட்பாக்களைப் படைத்தவர். ஒவ்வொரு குறட்பாவும் நீண்ட ஆய்வை நிகழ்த்தும் அளவிற்கு ஆழமானதாகவும் திட்பநுட்பத்துடனும் படைக்கப்பட்டுள்ளது. ஆகையால் திருக்குறளுக்கு இன்றளவும் ஆய்வுநூற்களும் உரைநூற்களும் வெளிவந்த வண்ணம் உள்ளன. அத்தகைய வகையில் உறவுநிலைகள் குறித்து வள்ளுவர் பதிவு செய்திருக்கும் குறிப்புக்கள் மிகச் சிறப்பானவையாகும். தாய்-தந்தை, குழந்தை, நட்பு, பெரியவர்களின் துணை, காதல் நிலைப்பாடு போன்ற உறவுநிலைகளின் இயல்புகளை வள்ளுவர் மிக எளிமையான முறையில் எடுத்தியம்புகின்றார். மேற்சொன்ன உறவுநிலைகள் குறித்த கருத்துக்களை, குறிப்பிட்ட சில அதிகாரங்களின் வாயிலாக ஆய்ந்துரைக்கும் நோக்கத்தோடு இக்கட்டுரை படைப்பாக்கம் பெறுகின்றது.

**உறவு – சொற்பொருள்**

உலகில் பிறந்த அனைவருக்கும் உறவுநிலைப்பாடுகள் காணப்படுவது இயல்பாகும். உறவு என்ற சொல்லின் பொருளைத் தெரிந்துகொள்வது பின்வரும் உறவுநிலைகள் பற்றிய கருத்தாக்கங்களை புரிந்து கொள்வதற்கு ஏதுவாக அமையும். அத்தகைய வகையில் உறவு என்ற சொல்லிற்கு க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி,

**"பிறந்த குடும்பத்தின் மூலமாகவோ திருமணத்தின் மூலமாகவோ ஏற்படும் சொந்தம்" "தனிநபர்கள், இனங்கள் போன்றவற்றுக்கு இடையே நிலவும் உணர்வுப்பூர்வமான நெருக்கம்" "ஏதேனும் ஒரு பொதுத்தன்மையின் அடிப்படையில் ஏற்படும் பிணைப்பு" (ப.221)** என்பன போன்ற பல விளக்கங்களைத் தருகின்றது. மேலும் உறவு என்ற சொல்லிற்கு தமிழ்ச்சொல் அகராதி, **"உற்றசமயம், ஒற்றுமை, சம்பந்தம், சிநேகம், சுற்றம், பொருந்துகை" (ப.603)** என்னும் பொருள்களைத் தருகின்றது.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**இறைவனுடன் உறவு**

வள்ளுவரின் வழியில் நின்று நாம் 'உறவு' என்ற சொல்லிற்குப் பொருள் காணுவோமேயானால், இவ்வினாவிற்கு 'உலகம் ஒரு குலம்' என்ற உயர்ந்த தத்துவமே விடையாகக் கிடைக்கும். அத்தகைய வகையில் உயர்ந்த குறிக்கோளை முன்னிறுத்தி உலகத்தில் உள்ள மக்கள் அனைவரையும் ஒரே கண்ணாடியின் வழியே பார்த்தவர் வள்ளுவர். அம்மக்கள் தங்களின் பிறவி என்னும் பெருங்கடலைக் கடப்பதற்கான ஆதாரம் (ஆயுதம்) இறைவன் திருவடி சேர்வது மட்டுமே என்கிறார். இக்கருத்தினை,

**"பிறவிப் பெருங்கடல் நீந்துவார் நீந்தார்**
**இறைவன் அடிசேரா தார்" (குறள் - 10)**

என்ற குறளின் வழி வெளிப்படுத்துகின்றார். இறைவனோடு மக்கள் அனைவரும் மிக நெருங்கிய தூய உறவுடன் இருத்தல் வேண்டும் என்று, இறைவனுடன் மனிதனுக்குள்ள உறவை மிகத்தெளிவான முறையில் வள்ளுவர் பதிவு செய்திருக்கின்றார். சங்ககாலம் தொடங்கி இக்காலம் வரை மக்கள் இறைவனோடு பாராட்டும் உறவுக்கு எண்ணிலடங்கா எடுத்துக்காட்டுகளை நினைவு கூறலாம். சங்க நூலான திருமுருகாற்றுப்படை என்ற நூல் முழுமையும் இறைவனைப் புகழ்ந்து பாட வேண்டும் என்பதற்காகவே படைக்கப்பட்டுள்ளது. பொருநராற்றுப்படையில்,

**"காடுஉறை கடவுட்கடன் கழிப்பிய பின்றை" (பொருந.வரி.52)**

என்ற வரி இடம்பெற்றுள்ளது. பொருநர்கள் முதலில் தங்களுக்குரிய தெய்வத்தை வணங்கிய பின்னரே பிற வேலைகளைத் தொடங்குகின்ற செய்தி, அவர்கள் இறைவனோடு எத்தகைய ஈடுபாட்டுடன் இருந்திருக்கின்றனர் என்பதைச் சுட்டிக்காட்டுகின்றது. வள்ளுவப்பெருந்தகை பிறவிக் கடலைக் கடக்க இறைவன் துணை வேண்டும் என்று வலியுறுத்துவதை ஏற்கும் விதமாக, மக்கள் இறைவழிபாட்டோடு ஒன்றிணைவது இறைவனுக்கும் மக்களுக்கும் உள்ள உறவுநிலையின் வெளிப்பாடகவே இவ்விடம் பார்க்கப்படுகிறது.

**கணவன்-மனைவி உறவுநிலை**

பொய்யாமொழிப் புலவரின் வாய்ச்சொல்லும் பொய்க்காது என்ற வாக்கினை மெய்ப்பிக்கும் கருத்துக்களுள் கணவன்-மனைவி உறவுநிலையும் எண்ணுதற்குரியதாகும். கணவன்-மனைவிக்கு இடையே இருக்கும் அன்பும், பாசப்பிணைப்பும், அறநெறிப்படி ஒழுகும் மேம்பட்ட சிந்தனையுமே இல்லற உறவின் தலையாயப் பயனாகும் என்று வள்ளுவர்,

**"அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**
**பண்பும் பயனும் அது" (குறள்-45)**

என்னும் குறட்பாவின் மூலம் கோடிட்டுக் காட்டுகின்றார். மனைவி என்ற சொல்லினை வள்ளுவர் 'வாழ்க்கைத் துணைநலம்' என்று குறிப்பிடுவதோடு,

**"தெய்வந் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்**
**பெய்யெனப் பெய்யும் மழை" (குறள்-55)**

என்னும் குறளின் மூலம் மழை பெய் என்று சொன்னவுடன் மழை பெய்யும் என்ற அளவில் மனைவி மிகச்சிறப்புடையவளாகத் திகழும் தன்மையை மேற்சொன்ன குறள் தெளிவுபடுத்தகின்றது. தன் கணவனைத் தொழுதபின்பே இறைவனைத் தொழக்கூடிய பண்பானது மனைவி கணவன் மீது கொண்ட மதிப்புமிக்க உறவுநிலையை அடையாளப்படுத்துகின்றது.

கணவன்-மனைவி நெகிழ்ச்சியான உறவுக்கு எடுத்துக்காட்டாக,

**"முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்**
**கழுவுறு கலிங்கம் கழாஅ துடீஇக்**
**குவளை யுன்கண் குய்ப்புகை கமழ**

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**தான்துழந் தட்ட தீம்புளிப் பாகர்**
**இனிதெனக் கணவன் உண்டலின்**
**நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே" (குறுந்-167)**

என்னும் குருந்தொகைப் பாடல் வரிகளும் சான்று பகர்கின்றன. கணவன் தன் மனைவி சமைத்த மோர்க்குழம்பு மிகப் புளிப்புச்சுவையுடன் இருப்பினும் 'இனிது இனிது' என்று கூறி உண்பது, அவர்கள் இருவருக்கும் உள்ள உண்மையான உறவை வெளிப்படுத்துகின்றது. விருந்தோம்பல் செய்வதென்பது இல்வாழ்க்கையின் தலையாயப் பண்பாகும். இதனை வள்ளுவர்,

**"செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான்**
**நல்விருந்து வானத் தவர்க்கு" (குறள்-86)**

என்ற குறளின் மூலம் தெளிவுபடுத்துகின்றார். விருந்து என்ற சொல்லுக்கு புதுஉறவு பொருளும் கொள்ளலாம். வந்த விருந்தினரை உபசரித்துவிட்டு, இனிவரும் விருந்தினரை உபசரிக்கக் காத்திருப்பவன் தேவர்களுக்கு நல்ல விருந்தினன் என்று வள்ளுவர் குறிப்பிடுகின்றார். இல்லறம், விருந்து என்ற சொற்களுக்குள்ளும் உறவு என்ற சொல்லின் பொருண்மை பொதிந்து கிடப்பதனை காண முடிகின்றது.

**பெற்றோர்-புதல்வர் உறவுநிலை**

மனிதர்களுக்குக் கிடைத்திருக்கக்கூடிய உறவுகளுலெல்லாம் மிகச்சிறப்பான உறவுவாகக் கருதப்படுவது தாய்-தந்தை – குழந்தை உறவைக் குறிப்பிடலாம். பெற்றோர்-குழந்தை உறவுநிலைகள் குறித்து வள்ளுவர் உலகம் போற்றும் உன்னதமான கருத்துக்களைச் சுட்டிச் சென்றிருக்கிறார். இக்கருத்தினை பின்வரும் குறட்பாக்களின் மூலம் தெளியலாம்.

**"பெறுமவற்றுள் யாமறிவது இல்லை அறிவறிந்த**
**மக்கட்பேறு அல்ல பிற" (குறள்-61)**

என்கிற குறளின் மூலம் ஒருவன் அடையக்கூடியவற்றுள், அறிய வேண்டியவற்றை அறியவல்ல மக்களைப் பெறுவதை விடச் சிறந்ததொன்று இருப்பதாக யாம் அறியவில்லை என்று கூறுகிறார். ஆகவே குழந்தை என்ற உறவு உலகில் உள்ள ஒவ்வொருவரும் விரும்பக்கூடிய உறவாக இருப்பதனை இவ்விடம் அறிய இயலுகின்றது. தந்தை என்ற உறவை முழுதாய் ஏற்றுக்கொண்ட ஒருவன் தன் மகனை சான்றோர்கள் சபையில் முதன்மைப்படுத்த வேண்டும் என்பதை,

**"தந்தை மகற்குஆற்றும் நன்றி அவையத்து**
**முந்தி யிருப்பச் செயல்" (குறள்-67)**

என்ற குறளின் மூலம் வள்ளுவர் எடுத்தோதுகின்றார். மேலும் சங்க நூலான புறநானூறு,

**"சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே" (புறம். பா.312)**

என்று குறிப்பிடுகின்றது. ஆக இந்தக் குறிப்புகள் எல்லாம் தந்தைக்கும் மகனுக்கும் இருக்கக்கூடிய உறவுநிலைகளின் மேம்பாட்டை திறம்பட எடுத்தியம்புகின்றன. தந்தை தன் மகனைத் தன் சிந்தையில் சுமக்கிறான். ஆனால் தாயோ தன் வயிற்றில் சுமப்பதோடு ஒவ்வொரு நிலையிலும் அக்குழந்தையைப் பாதுகாத்து, அக்குழந்தையின் வளர்ச்சி நிலையைக் கண்டு ஒவ்வொரு நொடியும் பூரிப்படைபவள் தாய். இக்கருத்தினை வள்ளுவர்,

**"ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்**
**சான்றோன் எனக்கேட்ட தாய்" (குறள்-69)**

என்ற குறளின் வழியாக தாய்-மகன் உறவுநிலையையும் பாசப்பிணைப்பையும் சுட்டிக்காட்டுகின்றார். தாய் தன் குழந்தையைப் பெற்றபொழுதைக் காட்டிலும் மிகவும் மகிழ்ச்சி அடையக்கூடிய தருணம் உண்டு என்று வள்ளுவர் மேற்சொன்ன குறளின் மூலம்

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

குறிப்பிடுகின்றார். அந்த மகிழ்ச்சி நிறைந்த தருணம் என்பது தன் மகனைப் பிறர் 'அறிவொழுக்கங்களில் சிறந்தவன்' என்று சொல்லக்கேட்ட தாய், அவனைப் பெற்றபொழுது அடைந்த மகிழ்ச்சியைவிட மிகுந்த மகிழ்ச்சி அடைவாள் என்று கூறுவதிலிருந்து தாய்-சேயின் உறவு மேம்பாட்டை வள்ளுவர் எங்ஙனம் போற்றுகிறார் என்பதை அறிந்துகொள்ள இயலுகின்றது.

**நட்புறவு**

ஒரு மனிதனுக்கு தாய்-தந்தை உட்பட அனைத்து உறவுகளையும், இறைவன் அமைத்துக்கொடுத்த பரிசாகக் கருதலாம். ஆனால், நண்பனை மட்டும் ஒருவன் தான் விரும்பியவாறு தேர்ந்தெடுத்து அமைத்துக்கொள்ளலாம். நட்பு என்ற உன்னதமான உறவினைப் பற்றி இலக்கியங்கள் பெரிதும் போற்றிப்பரவுகின்றன. திருவள்ளுவர் ஒரு படி மேலே சென்று எவ்வாறு நட்பைத் தேர்வது, நட்பின் இலக்கணம் என்ன என்று திறம்பட விவரித்துக் கூறுகின்றார்.

**"நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்**
**மேற்சென்று இடித்தற் பொருட்டு" (குறள்-784)**

என்ற குறளின் வழி வள்ளுவர், நட்பு பாராட்டுதல் என்பது ஒருவரோடு ஒருவர் சிரித்து மகிழ்வதற்கன்று. அவரிடத்தில் தீய செய்கை கண்டபோது முற்பட்டுச் சென்று கண்டித்து அறிவுரை சொல்லுதற்கேயாகும் என்று நண்பர்கள் எவ்வாறு தங்கள் நண்பர்களை நல்வழிப்படுத்த வேண்டும் என்பதனை மிகத்துல்லியமாகக் கூறியிருக்கின்றார். மேலும்,

**"முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்து**
**அகநக நட்பது நட்பு" (குறள்-786)**

என்னும் குறளின் வழி, நண்பர்கள் ஒத்த உணர்ச்சியுடன் பழகுதல் வேண்டும். அதாவது சேர்ந்து பழகுவது மட்டும் நட்பாகாது உணர்ச்சிகளின் மூலம் ஒத்துப் போகக்கூடியவர்களாக இருக்க வேண்டும். அதுவே சிறந்த நட்புறவு என்று வள்ளுவர் நட்பின் இலக்கணத்தை வரையறுக்கின்றார். நட்பு என்ற உறவை சிந்தையில் நினைத்து சங்க இலக்கியத்தை நோக்கினால் ஔவை-அதியனின் நட்பு நம் கண்முன் படரும். இதனை,

**"சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே**
**பெரியகட் பெறினே**
**யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணு மன்னே**
**சிறுசோற்றானு நனிபல கலத்தன் மன்னே**
**பெருஞ்சோற்றானு நனிபல கலத்தன் மன்னே" (புறம். பா.235)**

என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன. பொருளின் அளவு சிறியதாக இருந்தாலும் பெரியதாக இருந்தாலும் அதனைத் தான் மட்டும் தனித்து உண்ணாமல் முதலில் எனக்குக் கொடுத்த பின்னரே அதியன் உண்பான் என்று ஔவை கூறுவதிலிருந்து அவ்விருவர்களின் நட்பாகிய இனிய பந்தத்தினை அறிந்துகொள்ள இயலுகின்றது. மேலும், பாரி-கபிலர், கபில-பரணர், பிசிராந்தையார்-கோப்பெருஞ்சோழன் போன்றோர்களின் நட்புறவு சிறப்பிற்கும் போற்றுதலுக்கும் உரியதாகும். உறவு என்ற சொல்லானது இரண்டு நபர், இரண்டு ஊர், இரண்டு நாடு என்று எந்தவொரு அமைப்பாக இருந்தாலும் அவற்றினூடே நல்லிணக்கத்தை உருவாக்கும் சிறந்ததொரு பணியை ஆற்றிவருகிறதென்பதனை மேற்சொன்ன குறிப்புகளெல்லாம் தெளிவுபடுத்துகின்றன.

**முடிவுரை**

உலகப் பொதுமறையாகத் திகழும் திருக்குறளில் சுட்டப்படாத செய்திகளே இல்லை என்று கூறுமளவிற்கு, எந்தப் பொருளை எடுத்துக்கொண்டு ஆய்வு செய்தாலும் அப்பொருளுக்கு எடுத்துக்காட்டு கூறும் அளவிற்கு, இந்நூல் பொருண்மை பொதிந்து மிளிர்கின்றது. சாதி, மதம், இனம், மொழி போன்றவைகளுக்கெல்லாம் அப்பாற்பட்டவையாகத் திகழும் திருக்குறள்

E-ISSN: 2581-7140

Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

முப்பால்களிலும் உறவுகள் பற்றிய குறிப்புக்களைப் பதியம் போட்டுச் சென்றிருக்கின்றது. தாய்-தந்தை-குழந்தை என்ற அமைப்பில் தொடங்கிய உறவுநிலைகள் நாளடைவில் பேரன்-பேத்தி என்று வளர்ச்சி அடைந்தது. மனிதன் அச்சத்தின் காரணமாக இறைவனை வழிபட ஆரம்பித்து தன்னுடைய முதல் உறவை இறைவனோடு ஏற்படுத்திக்கொண்டான். பின்னர் பிறப்பு, காதல், நட்பு என்ற கோணத்தில் உறவுநிலைகள் விரிவடைந்து மனிதனை அடுத்தடுத்த கட்ட வளர்ச்சிக்கு இட்டுச்சென்றது. திருவள்ளுவர் கணவன்-மனைவி பற்றிய ஆழமான கருத்தினைக் கூறுகின்றார். மேலும், நட்பு ஏற்படுத்திக் கொள்ளும் முன் எவ்வாறு ஆராய வேண்டும், நட்புக்கொண்ட பின் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்று நட்புறவின் மேன்மையை உலகறியச் செய்தவர் வள்ளுவர்.

**பார்வை நூல்கள்**

1. திருக்குறள், பரிமேலழகர் உரை.
2. குறுந்தொகை, பெருமழைப்புலவர் உரை.
3. புறநானூறு, புலியூர்க்கேசிகன் உரை.
4. பொருநராற்றுப்படை, ச.வே.சுப்பிரமணியன் உரை.
5. திருக்குறள்-வள்ளுவர் கண்ட தத்துவம்- தெ.பொ.மீ.
6. திருக்குறள்- தமிழ் மரபுரை – ஞா. தேவநேயப்பாவாணர்.
7. மேலை மெய்யியலுக்கு வழிகாட்டிய வள்ளுவம், ப.மருதநாயகம்.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

# திருக்குறள் உணர்த்தும் அறம்

# Moral Ethics Instruction in *Thirukkural*

**மு.கற்பகச்செல்வி,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
எஸ். ஏ.்.ப். ஆர். மகளிர் கல்லூரி, சிவகாசி.

## Abstract

*The present article culls out the moral ethics as enunciated and instructed in "Thirukkural". It delineates the explanation of the term 'Aram',* Virtue; *to give deep understanding of the insights in Tamil sense. It further examines the social virtues such as love and affection, familial life, hospitality, truth, education, denying wishes, truth, thankfulness etc. these are some of the major traits that one should keep in life to live a serene livelihood. Accordingly, this paper finds the the ethical ways of life as instructed in "Thirukkural" to lead a flourishing life.*

**Keywords:** Moral Ethics, Instruction, *Thirukkural*

**முன்னுரை**

சங்கம் மருவிய காலத்தில் தோன்றிய இலக்கியங்களை பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் என்கிறோம். இவ்விலக்கியங்கள் இருண்ட காலத்தில் நிலவிய சூழலை உணர்த்தும் விதமாக அமைந்துள்ளது. இத்தகைய இலக்கியங்களை நீதிஇலக்கியங்கள் என்கிறோம். நீதிநூல்களுள் ஒன்றான திருக்குறளில் வள்ளுவர் கூறிய அறங்களை ஆராயும் நோக்கில் இக்கட்டுரை அமைய உள்ளது.

**அறம் விளக்கம்**

அறம் என்ற சொல் அறு என்னும் வினைச்சொல் அடியாகப் பிறந்தது எனலாம். அறம் என்ற சொல்லிற்கு அறுத்தச் செல், வழியை உண்டாக்கு, உருவாக்கு, துண்டி, வேறுபடுத்து என்ற பலவகைப் பொருள்கள் வழங்கி வருகின்றன. இத்தகைய சொல் ஆராய்ச்சியின் அடிப்படையில் அறம் என்ற சொல்லிற்குப் பலவேறு பொருள்களில் கூறலாம்.

அறம் என்ற சொல்லை இரண்டாகப் பிரிக்கலாம். அவை தனிமனித அறம், சமூக அறம் என்பதாகும். தனிமனித அறம் என்பது விருந்தோம்பல், கொடை, மற்றோருக்கு உதவுதல், பிறருக்கு ஊறு விளைவிக்காமல் இருத்தல் போன்ற பல்வேறு செயல்பாடுகளைக் கூறலாம். சமுதாயத்தை முன்னிறுத்தும் வகையில் அமைந்துள்ள அறச்செயல்பாடுகள் அனைத்தும் சமூக அறம் எனலாம். அவ்வகையில் திருக்குறள் காட்டும் தனிமனித, சமூக அறங்களை பின்வருமாறு காணலாம்.

**சமூக அறம்**

இல்லறவியலில் ஒரு அதிகாரமாகத் திகழக்கூடியது ஒழுக்கமுடைமை ஆகும். ஒழுக்கமுடைமை அதிகாரம் மானுட சமூகம் மேம்பாடு அடைவதற்கு உண்டான வழிகளை கூறும் விதமாக அமைந்துள்ளது.

> **"ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்**
> **உயிரினும் ஓம்பப் படும்"** (குறள் - 131)

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

ஒருவர்க்கு உயிரை விட மேலானது ஒன்றும் இல்லை எனலாம். அத்தகைய உயிரானது இன்ப துன்பங்களை மாறிமாறி அனுபவிக்கின்றது. உயிரைவிட மேலான பொருள் ஒன்று உண்டெனில் ஒழுக்கத்தை கூறலாம். ஒழுக்கம் என்பது மானுட பிறப்பிற்கே உரிய ஒன்று எனலாம். இவ்வொழுக்கத்தைக் கடைபிடிக்கும் ஒருவன் மேம்பாடு அடைகின்றான்.

**"ஒழுக்க முடைமை குடிமை இழுக்க**
**இழிந்த பிறப்பாய் விடும்" (குறள் - 133)**

ஒருவன் உயர்ந்த குடியில் பிறப்பதால் அவன் சிறந்த பண்புடையவன் என்றும், தாழ்ந்த குடியில் பிறந்த ஒருவனை தீய பண்புடையவன் என்றும் கூறமுடியாது. சிலப்பதிகாரத்தில் மாதவி கணிகையர் குலபெண்ணாக இருப்பினும் அவள் கோவலன் ஒருவனையே தன் கணவனாக கருதியதால் உயர்வாக மதிக்கப்படுகிறாள். ஒருவன் எக்குடியில் பிறப்பினும் அவன் ஒழுக்கத்தை கடைபிடித்தால் அவன் உயர்ந்தவனாகக் கருதப்படுகிறான்.

**அன்புடைமை**

சமுதாயம் முன்னேற வேண்டுமானால் மனிதனிடம் உள்ள தீய குணங்கள் நீங்கி பிற உயிர்களிடத்தில் அன்பு காட்ட வேண்டும். அன்பு தான் மனிதனை மனிதனாக்குகிறது. அன்பு வழியைப் பின்பற்றினால் நாம் எத்தகைய துன்பத்தையும் வென்றிடலாம். அத்தகைய அன்பில்லாத ஒருவனை வள்ளுவர் எழும்புக் கூட்டின் மீது தோலால் போர்த்தப்பட்ட வெற்று உடம்பு என்கிறார்.

**"அன்பின் வழியது உயிர்நிலை அ∴திலார்க்கு**
**என்புதோல் போர்த்த உடம்பு." (குறள் - 80)**

என்ற பாடல் வழி வள்ளுவரின் கருத்தை அறியலாம்.

**இல்வாழ்க்கை:**

மனித வாழ்வில் முதலில் எளிதில் பின்பற்றத்தக்கது இல்லற நெறியாகும்.

**"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்**
**தெய்வதத்துள் வைக்கப் படும்." (குறள் - 10)**

இவ்வுலகில் நல்லமுறையில் இல்வாழ்க்கையில் ஈடுபடுபவன் தேவலோகத்தில் உள்ள தேவர்களுக்கு ஒப்பாக கருதப்படுவான் என்பதை உணர்த்துவிதமாக அமைந்துள்ளது.

**விருந்தோம்பல்**

திருக்குறளில் விருந்தோம்பல் பற்றி கூறுவதற்கு வள்ளுவர் விருந்தோம்பல் என்ற அதிகாரத்தையே படைத்துள்ளார். அவ்வதிகாரத்தின் மூலம் விருந்து பற்றியும் விருந்து அளிக்கக்கூடிய மக்களின் பண்பு பற்றியும் எடுத்துரைக்கின்றார்.

**"இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி**
**வேளாண்மை செய்தற் பொருட்டு" (குறள் -81)**

என்ற குறளின் மூலம் இல்வாழ்க்கையில் ஈடுபடக் கூடியவர்கள் பொருளை சேமிப்பது மட்டுமல்லாமல், விருந்தினர்களுக்கு விருந்தளிக்கவும் வேண்டும் என்ற பண்பினை மக்களுக்கு எடுத்தியம்புகிறார்.

தம்வீட்டிற்கு வரும் விருந்தினரை இன்முகத்துடன் உபசரித்து அவர்களுக்கு விருந்தளிக்க வேண்டும். விருந்தளிக்கும் பொழுது நம் முகம் சிறிதேனும் வாடியிருந்தால் விருந்தினர்களின் முகமும் வாடும் என்பதை,

**"மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து**
**நோக்கக் குழையும் விருந்து." (குறள் - 90)**

என்னும் குறளின் வழி வள்ளுவர் அனிச்சம் மலரானது எப்படி நுகர்ந்தவுடன் வாடிவிடுமோ அதுபோல் நம் முகத்தில் சிறிது மாற்றம் ஏற்படினும் வரும் விருந்தினரின் முகமும் வாடும் என்ற கருத்தினை எடுத்துறைக்கின்றார்.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

குடும்ப விளக்கில் ஒரு தலைவி இன்முகத்துடன் விருந்தினரை உபசரித்தலை பாரதிதாசன் கூறியுள்ளார்.

**"...... பெருகன்பால்**
**பொன் துலங்கு மேனி**
**புதுமெருகு கொள்ள, முகம்**
**அன்றலர்ந்த செந்தா**
**மரையாக – நன்றே**
**வரவேற்றாள்"**

இன்முகத்துடன் வரவேற்கும் பண்பினைக் கூறியுள்ளார்.

**உயிர் கொல்லாமை**

எந்த ஒரு உயிரையும் கொலை செய்யாது, புலால் உண்ணாது வாழ்பவர்களை இவ்வுலகில் உள்ள எல்லா உயிர்களும் கைகூப்பி வணங்கும் என்று கூறுகின்றார் வள்ளுவர்.

**"கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி**
**எல்லா உயிரும் தொழும்" (குறள் - 260)**

என்ற குறள் புலால் மறுத்தலை வழியுறுத்துகிறது.

நெய் முதலிய பொருள்களை வேள்வியில் இட்டு செய்யும் யாகத்தால் விளையக்கூடிய நன்மையை விட அதிகமான நன்மை ஓர் உயிரை கொள்ளாதிருப்பதன் மூலம் விளைகிறது என்ற கருத்தினையும் வழியுறுத்துகிறார்.

**ஆசையை விடுதல்**

மனித வாழ்வை ஆட்டிப்படைப்பது ஆசை எனலாம். தனி மனித பேராசைதான் நாட்டில் தலைவிரித்தாடும் அனைத்து பிரச்சனைகளுக்கும் காரணம் எனலாம். லஞ்சம், ஊழல் போன்ற அனைத்து பிரச்சனைகளுக்கும் அடிப்படை பேராசை எனலாம். எல்லாவற்றையும் தானே அனுபவிக்க வேண்டும் என்ற ஆசைதான் ஒருவனை அழிவு பாதைக்கு அழைத்துச்செல்கிறது.

**"அவாஇல்லார்க்கு இல்லாகும் துன்பம்அ.்.து உண்டேல்**
**தவாஅது மேன்மேல் வரும்" (குறள் - 368)**

என்ற பாடல் பேராசை வயப்பட்டோருக்குத் துன்பங்கள் தொடர் கதையாகும் என்ற எச்சரிக்கை விடுவது போல் அமைகின்றது.

**கல்வி**

கல்வி இன்றைய வாழ்க்கைக்கு அவசியமான ஒன்று ஆகும். ஆதலால் அனைவரும் கல்வி கற்க வேண்டும். கற்கும் நூல்களை குற்றமறக் கற்க வேண்டும். அவ்வாறு கற்ற பிறகு அதனை தன் வாழ்க்கையில் கடைபிடிக்க வேண்டும் என்கிறார்.

**"கற்க,கசடறக் கற்பவை கற்றபின்**
**நிற்க அதற்குத் தக" (குறள் - 391)**

அவ்வாறு குற்றமற கற்கும் கல்வியே நம் அறியாமை இருளை நோக்கும்.

**வாய்மை**

எப்போதும், எந்த இடத்தும் உண்மையே பேச வேண்டும். நாம் பேசக்கூடியச் சொற்கள் மற்றவர்களுக்கு தீங்கு தரக்கூடியதாக இருக்கக் கூடாது. எப்பொழுதும் தீமை இல்லாத சொற்களையே சொல்ல வேண்டும்.

**"வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்**
**தீமை இலாத சொல்" (குறள் - 291)**

ஒருவன் தன்நெஞ்சறிந்து பொய் சொல்லக்கூடாது. அப்படி அறிந்தும் பொய் சொன்னான் என்றால் தன் நெஞ்சே அவனைச் சுட்டுவிடும்.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**செய்நன்றி மறவாமை**

மற்ற உயிர்களிடமிருந்து மனிதனை தனிமைப்படுத்திக்காட்டுவது அவனுடைய ஆறாவது அறிவுதான். அவ்வறிவானது நல்ல தீய விசயங்களை பகுத்தறிந்து கொள்வதற்குத் தான் இறைவனால் படைக்கப்பட்டது. மனிதன் போற்ற வேண்டியெ சயல்பாடுகளுள் ஒன்று நன்றி மறவாமையும் ஒன்றாகும். ஏனெனில் எவ்வகைப் பாவம் செய்தோர்க்கும் அதிலிருந்து மீள்வதற்கு வழி உண்டு. ஆனால் செய்நன்றி மறந்தவனுக்கு அதிலிருந்து மீள்வதற்கு எந்த வழியும் இல்லை எனலாம்.

**"ஆன்முலை அறுத்த ஆறனில்லோர்க்கும்**
**மாண்இழை மகளிர் கருச் சிதைத்தோர்க்கும்**
**பார்ப்பார் தப்பிய கொடுமை யோர்க்கும்**
**வழுவாய் மருங்கில் கழுவாயும் உளஎன**
**நிலம் புடை பெயர்வது ஆயினும் ஒருவன்**
**செய்தி கொன்றோர்க்கு உய்தி இல்" (புறம் - 34)**

என்றப் பாடல் உணர்த்துகின்றது. பசுவின் மடி அறுத்தவனுக்கும, மகளிர் கருச்சிதைத்தவனுக்கும், பார்ப்பனர்களுக்குத் துன்பம் விளைவிப்பவனுக்கும் கூட மண்ணிப்பு உண்டு. நிலம் கீழ்மேலாகப் பெயர்ந்தாலும் ஒருவன் செய்த நன்றியை மறந்தவர்களுக்கு அதிலிருந்து மீளும் வழி இல்லை என்பதால் நன்றி மறவாப் பண்பின் உயர்வு எடுத்துரைக்கப் பெறுகிறது. வள்ளுவரும் இதன் சிறப்பை உணர்ந்தே,

**"காலத்தினாற் செய்த நன்றி சிறிதெனினும்**
**ஞாலத்தின் மாணப் பெரிது" (குறள் - 102)**

என்றுக் குறிப்பிடுகிறார். நாம் துன்பப்படும் காலத்தில் நமக்கு உதவிசெய்தவர்களை உடலில் உயிர் உள்ளளவும் மறத்தல் கூடாது என்பதையே இக்கருத்துக்கள் உணர்த்துகின்றன. ஆனால் இன்று உயிர் கொடுத்து, உரு கொடுத்து, உணவூட்டி வளர்த்து ஆளாக்கிய பெய்றோரை பாரமாகக் கருதும் அவலநிலை பெருகி வருகிறது. செய்நன்றி மறந்த நிலையைத்தான் இன்றைய் முதியோர் இல்லங்கள் நினைவூட்டுகின்றன. இன்றைய சூழலில் மனிதர்களிடம் வளரவேண்டிய பண்புகளில் இதுவும் ஒன்றாகும்.

**முடிவுரை**

சமூகத்தில் அறப்பண்பு வளரவேண்டும். உயிர்கொலை செய்யாமை, நன்றி மறவாமை, விருந்தோம்பள் பண்பு, வாய்மை, கல்வி, இல்வாழ்க்கை போன்ற பண்புகளை கடைபிடிப்பதின் மூலம் நம் வாழ்வு சிறந்து விளங்கும் என்பதை வள்ளுவர் வாக்கின் மூலம் உணரமுடிகிறது. இச்சமூகம் சிறப்பாக அமைவதற்கு உண்டான வழிமுறைகளை உணர்த்தும் விதமாக இக்கட்டுரை அமைந்துள்ளது.

**பார்வை நூல்கள்**

1. *திருக்குறள்.*
2. *தமிழ் - தமிழ் அகராதி.*
3. *சிலப்பதிகாரம்.*
4. *புறநானூறு.*
5. *குடும்பவிளக்கு.*

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140

Special Issue I, August-2019

Available at: www.ijtlls.com

# வள்ளுவம் வலியுறுத்தும் வேந்தன் தொழில்

## The Occupation of the King accentuated in Valluvam

**முனைவர் திருமதி பா.கனிமொழி,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
வே.வ.வன்னியப்பெருமாள் பெண்கள் கல்லூரி (தன்னாட்சி), விருதுநகர் - 626001.

## Abstract

*The present article evinces the role of the kings as found in the Kural. Thiruvalluvar says that the king as superior to the Brahmins who save the holy scriptures. The acclamation is true because that even the Brahmins saves the scriptures; the kings are the ones who save the Brahmins from the foes from other sects or religion. The treatise not only speaks of the glory of the king but of the role of monarchy, its ethical practices, valour of the king, administration, time, place, action of the king in judicial, societal and war matters and so on related to the idea. Therefore, this paper finds evidences from the kurals of "Thirukkural"*

**Keywords:** Occupation of the King, accentuated in Valluvam, Thiruvalluvar

தமிழனின் உயர்ந்த சிந்தனையை எடுத்துரைக்கும் புகழ்பெற்ற நூல் *திருக்குறள்.* எனவேதான் ‘எல்லாப் பொருளும் இதன்பால் உள’ என்பர். பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் இடம்பெற்றுள்ள திருக்குறள் அரசு, அரசியல், அரசாங்கம் எத்தகையது, எவ்வாறு அவை இருந்தன, எவ்வாறு அவை இனி அமைய வேண்டும் என்பது போன்ற கருத்தியல்களை அறிவுறுத்துவனவாக பல்வேறு குறட்பாக்களில் கூறுகின்றன. அவை, அரசியல் குறித்த அரிய கருத்தியல்களைப் பிரதிபலிக்கின்றன. அரசியல் வழி ஒரு சமூகத்தின் அரசுருவாக்கத்தை ஆராய்வதும் அவசியமாகிறது. திருக்குள் வலியுறுத்தும் அரசியல் கருத்துண்மைகளின் வழி தமிழ் மக்களின் வரலாறு ஆய்வு செய்ய வேண்டிய அவசியத்தை அறிஞர்கள் சிலரும் சுட்டிக்காட்டியுள்ளனர். அதனடிப்படையில் நாடாளும் வேந்தனுக்குரிய நற்பண்புகளையும், அவன் ஆற்றவேண்டிய செய்தொழிலையும் வள்ளுவம் வழி காணலாம்.

திருக்குறளில் அரசியல் குறித்த கருத்தாக்கங்களை ஆய்ந்தறிந்த பொழுது அரசியல் அதிகாரங்களில் அரசனின் இயல்புகள், அவன் மேற்கொள்ளவேண்டிய நெறிமுறைகள், அவன் ஆற்றவேண்டிய கடமைகள், தன் நாட்டின் சிறப்பு, நாட்டில் வாழும் மக்களின் சிறப்பு போன்ற அரசியல் குறித்த பல்வேறு செய்திகளை இறைமாட்சி, கல்வி, கல்லாமை, கேள்வி, அறிவுடைமை, குற்றங்கடிதல், பெரியாரைத்துணைகோடல், சிற்றின்பம் சேராமை, தெரிந்து செயல்வகை, வலியறிதல், காலம் அறிதல், இடன் அறிதல், தெரிந்து தெளிதல், தெரிந்து வினையாடல், சுற்றம் தழால், பொச்சாவாமை, செங்கோன்மை, கொடுங்கோன்மை, வெருவந்த செய்யாமை, கண்ணோட்டம் ஒற்றாடல், ஊக்கம் உடைமை, மடியின்மை, ஆள்வினை உடைமை, இடுக்கண் அழியாமை என்ற இருபத்தைந்து அதிகாரங்களில் வள்ளுவர் குறிப்பிட்டுள்ளார்.

படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் என்னும் ஆறு உறுப்புகளைக் கொண்டவனே அரசனாவான் என்னும் கருத்தை வள்ளுவர் பதிவுசெய்துள்ளார். மேலும், திருக்குறள் உணர்த்தும் அறமாவது நடைமுறை வாழ்க்கையின் உன்னதமான அடிப்படை அரசியலையும், ஆழமானக் கருத்துகளையும் இரு அடிகளில் மிக எளிதாக

E-ISSN: 2581-7140

Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

எடுத்துரைத்துள்ளன. அணுவைத் துளைத்து ஆழ்கடலைப் புகட்டியது போல் அறக்கருத்துக்களை மிக எளிதாகவும் நேர்த்தியாகவும் எடுத்துரைத்துள்ளதால் மட்டும் இவை குறளல்ல. ஒவ்வொரு அதிகாரத்திலும் எடுத்துச்சொல்லும் கருத்தின் முழுமையைப் பத்துக் குறட்பாக்களில் பேசிக்காட்டும் அசாத்தியத்தில் தான் வள்ளுவரின் சிந்தனை உச்சம் உலக மக்கள் யாவருக்கு முன் திருக்குறளென்ற மரியாதைக் கலந்த சொல்லில் நின்று நிரூபித்துள்ளன. ஏனெனில், அந்தப் பத்துக் குறட்பாக்களில், சொல்லவந்த செய்திகள் அறக்கருத்தாக வரையறுக்கப்படும், அதன் அவசியம் விளக்கப்படும், விளைவுகளும் சொல்லப்படும். அறம் கடைப்பிடிப்பதின் மேன்மையும், அறத்தைக் கடைப்பிடிக்காததின் கீழ்மையும் உணர்த்தப்படும். ஆழ்ந்து நோக்கினால் சில அறக்கருத்துக்களை தான் விரும்பும் இவ்வையகத்திற்கு நிறுவுவதற்காகக் காணும் நடைமுறை நிகழ்வுகளைச் சான்றாகக் காட்டும் அனுபவ அணுகுமுறையும் அதில் கையாளப்படும்.

> **“சங்கத் தொகுப்புகளில் உள்ள அரசு உருவாக்க மூலங்கள் தொகுக்கப்பட்டு பட்டியலிடப்பட்டு ஆராயப்படவில்லையாதலால் நாம் திருக்குறளில் தொடங்கிப் பின்நோக்கிச் சென்று சங்ககாலத்தைப் பார்க்கலாம் எனவும், அரசின் இன்றியமையாதத் தன்மையாக வள்ளுவர் கூறுவனவற்றைச் சரடாகவும் வழிகாட்டியாகவும் எடுத்துக்கொண்டு நிறுவனங்கள் மற்றும் அரசியல் உறவுகள் குறித்து ஆராய இயலும் எனவும் சிவத்தம்பி குறிப்பிடுகிறார்.” (கார்த்திகேசு சிவத்தம்பி, பண்டைத் தமிழ்ச்சமூகம் வரலாற்றுக் புரிதலை நோக்கி.ப.51)**

இங்கு அரசு உருவாக்கப்பட்டதன் மூலத்தைத் தேட திருக்குறளை முதலில் அரசியல் வழி ஆராயவேண்டும். ஏனெனில், சங்கம் மருவிய காலத்திலே உருவான திருக்குறளில் தான் அரசு மற்றும் அதன் இயக்கம் எவ்வாறு அமையவேண்டும் எனவும், அவ்வாறு அமைவதற்கு என்னென்னத் தேவை எனவும் வள்ளுவர் தனித்தனி அதிகாரங்களில் குறிப்பிட்டிருப்பதைச் சுட்டிக்காட்டியிருக்கிறார்.

> “தமிழ் மக்களின் வரலாற்றை அரசியல் சமூக பொருளாதார பண்பாட்டு **வரலாற்றை இலக்கிய நிலைநின்றும் இலக்கிய வழிநின்றும் பார்க்கும் ஆய்வுநோக்கு இன்னும் தொடங்கப்படவில்லை என்றே கூறலாம். தமிழ்நாட்டின் வரலாற்றைச் சில ஆட்சிப் பரம்பரைகளின் வரலாறாகவே (பல்லவர் காலம், சோழர் காலம்) பார்ப்பதால் இப்பண்பு நிலவுகிறது என்பர்”. (கார்த்திகேசு சிவத்தம்பி, முன்னுரை, தமிழிலக்கியத்தில் மதமும் மானுடமும்.ப.3)**

மேலும்,

> **“சங்ககாலத்திற்குப் பின்னர் இயற்றப்பட்ட திருக்குறளில் அரசு என்பது ஏழு அம்சங்களைக் கொண்ட தத்துவமாக விளக்கப்பட்டிருக்கிறது. அவைகளில் ஆறு அம்சங்கள் அரசனுக்கு உட்பட்டவை எனத் தெளிவாக்கப்பட்டிருக்கிறது. அரசியல் என்பது சுதந்திரத்திற்கான அடிப்படை ஒழுக்கம் நிறைந்ததாக இருக்கவேண்டும் என்பதைத் திருக்குறள் விளக்குகிறது. இந்தத் தத்துவம் எவ்வாறு உருவாக்கப்பட்டது என்பது தெளிவாக இல்லாவிட்டாலும் அன்றைய அரசியல் நிலையை நன்றாக எடுத்துக்காட்டியிருக்கிறது.” (க.செந்தில்குமார், அழகு ஒழுக்கம் குடிமை எனும் சமூக மதிப்புகள் - ஒரு வரலாற்றுப்பார்வை, பக். 232-233)**

அரசனின் ஆணையைச் செயல்படுத்துவதற்குப் பல அதிகாரிகள் இருந்தது போல அமைச்சர்களும் இருந்தனர். இவர்களின் பணி அரசனுக்கு ஆட்சிமுறையில் ஏற்படும் ஐயங்களுக்கு ஆலோசனை வழங்குதலே ஆகும். அரசன் நெறி தவறி நடக்கும் சூழல் உருவாகும் பொழுது அவனை திருத்த வேண்டியவர்களாகவும் இருந்தனர். அரசியலமைப்பில் அரசனுக்கு அடுத்த அதிகாரங்களைப் பெற்றவர்களாக அமைச்சர்கள் திகழ்ந்தனர். ‘அமைச்சர்’

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

என்பவரை 'மந்திரி' என்றும் அழைப்பர். அமைச்சர் என்னும் சொல் 'அமாத்யா' என்ற வடமொழிச் சொல்லிலிருந்து பெறப்பட்டது என்பர். அமைச்சரை உழை இருந்தார் (பக்கத்தில் இருப்பவர்) என்று வள்ளுவர் உரைப்பர். கடியலூர் உருத்திரங்கண்ணனார் அமைச்சரைப் பெரும்பாணாற்றுப்படையில் 'சுற்றம்' என்னும் சொல்லால் குறிப்பிடுவார்.

*இறைமாட்சி* (39) அதிகாரத்தில் அரசனுக்கு வேண்டிய அல்லது அரச அறத்தில் இடம்பெறத்தக்க மாட்சியமைப்பட்ட பண்புகளை, கடமைகளை, அறங்களை வள்ளுவர் தொகுத்துரைக்கிறார். அஞ்சாமை, அறிவு, ஊக்கம், துணிவு, வீரம், மானம், செங்கோன்மை, ஓம்புதல், முறைசெய்தல், அறத்தின் வழுவாமை, ஈகை, கொடை, கல்வி, இன்சொல், விழிப்புணர்வு, காட்சிக்கு எளிமை, சொற்பொறுத்தல் ஆகியவையாகும்.

> **"வள்ளுவர் கல்வியறிவு பற்றி தரும் விளக்கங்கள் எல்லாம் அறம் மற்றும் ஒழுக்கவியலை (Morality) சேர்ந்தவையாக உள்ளன. மேலாதிக்கத்தாரின் கருத்தியலை, உலக வழக்கு என்று சொல்லுவது உலகச் சமூகங்களில் காணப்படுகிற மரபாகும். அந்த மரபுக்கு அனுசரித்து அதிலிருந்து விலகாமல் வாழ கல்வி வகை செய்ய வேண்டும் என்பது மரபாளரின் கொள்கை என்பார் ராஜ்கௌதமன்." (ராஜ்கௌதமன், தமிழ்ச் சமூகத்தில் அறமும் ஆற்றலும், ப.139)**

அரசியலின் அங்கங்களை 'அமைச்சு' தொடங்கி 'மருந்து' ஈறாக முப்பத்தி இரண்டு அதிகாரங்களில் திருவள்ளுவர் விரிவாக விளக்கியுள்ளார். நாட்டை ஆளும் அரசன் எப்படி இருக்க வேண்டும். அவன் எப்படி நாட்டைச் செலுத்தவேண்டும் என்பதை வள்ளுவர் கீழ்வருமாறு எடுத்தியம்புகிறார். அரசனுக்குப் பொருள் சேரும் வழிகளை மேலும் உருவாக்குதலும், அப்படிச் சேர்ந்த பொருளை முறையாகத் தொகுத்தலும், அவற்றைத் தகுந்த முறையில் காத்தலும், காத்தவற்றை தக்க செலவினங்களுக்குச் செய்தலுமே வல்லமையான அரசு என்பர். இதனையே,

> **"இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த**
> **வகுத்தலும் வல்ல தரசு." (குறள்.385)**

என்ற குறளில் விளக்குகிறார். ஒரு நாட்டினுடைய நிதியமைச்சராக இருப்பவர், நிதி நிலையறிக்கையைத் தயாரிப்பதற்கு முன், 'இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த வகுத்தலும்' என்னும் இத்திருக்குறளைக் கட்டாயம் படிக்க வேண்டும். திருவள்ளுவரை அறவழியாகவே பார்த்தவர்களை, இனிமேல் ஒரு பொருளியல் வல்லுநராகவும் பார்க்கவேண்டும். மேலும், திருக்குறளை உள்வாங்கி உற்றுப்படித்து வள்ளுவர் வாழ்ந்த காலத்திற்கே நம் சிந்தனைப் போக்கினை கொண்டுசென்றால் திருக்குறளை அடிப்படையாக வைத்துப் பழங்கணக்கையே போட்டுப் போட்டுப் பழக்கப்பட்ட நமக்கு மத்தியில் புதுப்பாதை புறப்படத்துவங்கும் எனலாம்.

அரசின் கீழ் இயங்கும் நாடானது பசியில்லாமலும், பிணியில்லாமலும், அயல்நாட்டின் பகையில்லாமலும் இருத்தலே நலமாக அமையும். நாட்டினது அரசு நாட்டுப்பொருளில் ஏற்றத்தாழ்வின்றி அனைவருக்கும் பசிதீர்க்கும் அரசாகவும், பற்பலத்திட்டங்களின் வழி நாட்டு மக்களின் சுகாதாரத்தைப் பேணும் அரசாகவும், நாட்டு மக்களின் அமைதியை விரும்பும் அரசாகவும் இருக்கும் நாடே சிறந்த நாடென திருக்குறள் நாடு இருக்கவேண்டிய இயல்பினை மொழிகிறது. இச்செய்தியினை,

> **"உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்**
> **சேரா தியல்வது நாடு." (குறள்.734)**

என்னும் குறள் வழி வள்ளுவர் எடுத்துரைத்துள்ளார். குடிமக்களை வருந்தவிடாமலும், தானும் வருந்தாமலும் மக்களைக் காத்து, மக்களுக்குத் துன்பம் விளைவிப்பவரை அடையாளங்கண்டு

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

அவர்களுக்கு தண்டனையளித்துத் தன் பணியைச் செவ்வனே செய்பவனே நல்ல ஆட்சியாளன் எனும் கருத்தைத் தாங்கிய குறளொன்று கீழ்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

**"குடிபுறங் காத்தோம்பிக் குற்றம் கடிதல்**
**வடுவன்று வேந்தன் தொழில்." (குறள்.549)**

நாட்டை ஆளும் மன்னவனுக்குத் துணைநிற்பவர்கள் அமைச்சர்கள். இம்மரபு அக்காலம் தொட்டே இன்றுவரை ஆட்சிமரபாக இருக்கின்றதை அறியமுடிகின்றது. இக்காலத்தில் மாநிலத்தை ஆள்பவர் முதல்வராகிறார். முதல்வருக்குத் துணையாக அமைச்சர்கள் இருக்கிறார்கள். இவ்வமைச்சர்கள் எப்படி இருக்க வேண்டும் என்பதை அமைச்சு அதிகாரங்கள் வழி வள்ளுவர் எடுத்துரைக்கிறார். இதனையே,

**"அறனறிந்து ஆன்றமைந்த சொல்லான் எஞ்ஞான்றுந்**
**திறனறிந்தான் தேர்ச்சித் துணை." (குறள்.635)**

என்னும் வள்ளுவர் வாக்கின் வழி அறியமுடிகின்றது. சமுதாயத்திலுள்ள குடிமக்கள் வாழ்க்கை நன்னிலை பெற செம்மையான நெறிகளை வகுத்து ஆட்சிபுரிதல் அரசர்களுக்குரிய கடமையாகும். மக்களின் இயல்பையும், தேவைகளையும் உணர்ந்து செயல்படும் செங்கோன்மையாளன் அறம் தவறாது, அல்லவை நீக்கி சமுதாயத்தினை மேன்மையுறச் செய்தல் வேண்டும் என்கிறது கீழ்வரும் குறள்.

**"அறனிழுக்கா தல்லவை நீக்கி மறன்இழுக்கா**
**மானம் உடையது அரசு." (குறள்.384)**

அரசியல் நெறிமுறைகள் நாடு, நாட்டையாள்பவர், அமைச்சர், மக்கள் அரசியலுக்குள் அங்கம் வகிக்கும் ஒவ்வொருவருக்கும் தனித்தனியே சொல்லப்பட்ட முறைகளைப் பார்க்கும்பொழுது திருக்குறள் காலத்திலே அரசியலை வலியுறுத்தி சொல்லும் தன்மையும், எது அரசியல் என அடையாளங்காட்டுந் தன்மையும் அக்காலத் தேவையாக இருந்திருக்கிறது. திருவள்ளுவர் கூறும் அரசியல் கருத்தியல்கள் எதிர்காலத் தேவையையும் உள்ளடக்கியதாகச் சொல்லப்பட்டவையாக இருக்கிறதெனலாம். குற்றங்களை ஆராய்ந்து எவரிடத்திலும் இரக்கமின்றி இவர் வேண்டியவர் இவர் வேண்டாதவர் எனப்பாராது, நடுநிலையோடு குற்றத்தினை அறிந்து தண்டனை வழங்கச்சொல்லும் முகமாக, முறையான ஆட்சி நடத்தவேண்டிய மன்னனின் நடுநிலைமையைக் கீழ்க்காணும் குறள் வலியுறுத்துகின்றன.

**"ஓர்ந்து கண்ணோடாது இறைபுரிந்து யார்மாட்டும்**
**தேர்ந்துசெய் வ∴தே முறை." (குறள்.541)**

என்னும் இக்குறளின் பொருண்மையாவது, செங்கோன்மையுடன் ஆட்சி செய்யும் வேந்தன், குடிமக்களிடம் முறையற்ற வழிகளில் வரியினைப் பெறக்கூடாது. அத்தன்மையானது, பாதையில் வருவோர் போவோரிடம் வழிப்பறிக் கள்வன் பயமுறுத்தி பொருள் பறிப்பதற்குச் சமமாகும் என குறிப்பிடுகிறார் வள்ளுவர்.

**"வேலோடு நின்றான் இடுவென் றதுபோலும்**
**கோலோடு நின்றான் இரவு." (குறள்.552)**

என அறிவுறுத்தி நல்லற நெறியில் நாட்டைக் காக்கும் வேந்தனைக் குடிமக்கள் தெய்வமாகக் கருதி வழிபடுபவர் எனவும் குறிப்பிடுகிறார்.

**"முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு**
**இறை என்று வைக்கப்படும்." (குறள்.388)**

என்னும் குறளில், இங்கு முறை செய்து காத்தல் எனக் குறிப்பிடுவது, நாட்டையாளும் அரசன் நாட்டை செழிப்புறச்செய்தலும், நடுநிலையான நீதி வழங்குதலும், நெறிப்பட்ட பொருளீட்டுதலுமாகிய இவ்வறங்களைச் செய்தல் சொல்லப்பட்டதாகக் கொள்ளலாம். அறம் வழுவா ஆட்சிமுறையே நாட்டை வளம் பெறச் செய்யும் என்பதற்கேற்பவும் மாறாக அரசனின்

E-ISSN: 2581-7140

Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

தன்னிச்சையான போக்கு சமுதாயத்தின் மாண்புகளைப் பாதிக்கச் செய்யும் என்பதற்கேற்பவும் பற்பல கருத்தியல்கள் திருக்குறள் வழி இடம்பெற்றிருப்பதை காணமுடிகிறது.

**“வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்**
**தெய்வத்துள் வைக்கப் படும்.” (குறள்.50)**

என்ற மேன்மையானக் கருத்து, மனிதா, இயற்கை தந்துள்ள வாழ்வதற்கான ஒரே வாய்ப்பை, மனத்துக்கண் மாசிலனாக வாழ்ந்து ஈந்து உவந்தளித்து, பல்லுயிர் ஓம்பி, பகுத்துண்டு செந்தாண்மைப் பூண்டு, உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல் எனச் சிந்தித்து, பழியஞ்சி, பண்பு காத்து வாழ்ந்தால், மனிதனும் தெய்வப் பிறவியாகக் கருதப்படுவான் என்பதில் தான் வள்ளுவரின் கருத்து மையம் கொண்டுள்ளது என்பதனை அனைவரும் அறியவேண்டும். ஏனெனில், இந்நற்பண்புகளையே நாடாளும் வேந்தருக்கும் அவன்கீழ் வாழ்வோருக்கும் வள்ளுவர் வலியுறுத்தியுள்ளார்.

**பார்வை நூல்கள்**

1. பரிமேழலகர். ‘**திருவள்ளுவர் திருக்குறள்**’. (உ.ஆ), கங்கை புத்தகநிலையம், சென்னை, நான்காம் பதிப்பு – 2002.
2. ராஜ்கௌதமன், ‘**தமிழ்ச்சமூகத்தில் அறமும் ஆற்றலும்**’, விடியல் பதிப்பகம், கோவை, முதற்பதிப்பு 2008.
3. கார்த்திகேசு சிவத்தம்பி, **‘பண்டையத் தமிழ்ச் சமூகம், வரலாற்றுப் புரிதலை நோக்கி’**, மக்கள் வெளியீடு, முதற்பதிப்பு – 2013.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com


# பொருட்பாலில் இசை உரிச்சொற்கள்

## Musical Adjectives in 'Porutpaal' (Wealth)

**கி. கோவிந்தம்மாள்,** ஆய்வியல் நிறைஞர் தமிழ்,
அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரி, சிவகாசி.

## Abstract

*The present paper deals with the use of musical adjectives in 'Porutpaal' of the 'Thirukkural'.Tamil Language is an epitome of Literary virtues. It promotes its existence through Iyal (Philology), Isai (Music), and Nadagam (Drama). Of the three, music is very important. The study elucidates the meaning of Musical adjectives as enunciated in the Classic Tamil Lecicons, "Tholkappiam", and the use of four musical adjectives 'Isaipu', 'Iyambal' 'Irangal' and 'Kali' found in "Thirukkural". Therefore, this paper collects the needed sources and encompasses the meanings of the verses from"Thirukkural"*

**Keywords:** Musical Adjectives, 'Porutpaal', *Thirukkural*

**முன்னுரை**

பழந்தமிழ் இலக்கியங்கள் காலச் சூழலின் மாற்றம் காரணமாகவும், பிறமொழிதாக்கத்தின் காரணமாகவும் பலவகை பொருட்களை பாடுபொருளாகக் கொண்டு படைக்கப்பட்டுள்ளன. இலக்கியங்கள் இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழால் முழுமை பெற்றிருப்பது. எழுத்துக்களின் வடிவமைப்பில் சொல்லாக இலக்கியங்கள் உருவாக்கப்பட்டுள்ளன. இவ்விலக்கியங்களில் பொருளின் தன்மையை முதன்மைப்படுத்தும் உரிச்சொற்கள் பலவகைப் பண்புகளைஉடையது. இவ்வுரிச் சொற்களைப் பற்றிதொல்காப்பியர் உரியியலில் 120 நூற்பாக்களில் கூறியுள்ளார். அவற்றின் தன்மையையும் சொற்பொருளையும் உணர்த்துவதாக இவ்வுரிச்சொற்கள் காணப்படுகின்றன. இசையை உணர்த்தும் உரிச்சொற்களும் இடம்பெறுகின்றன. இந்த இசை உரிச்சொற்கள் திருக்குறளில் இடம்பெறும் பொருட்பால் என்ற அதிகாரத்தினைமையமாகக் கொண்டு ஆராய்வதாக இக்கட்டுரை அமைகிறது.

**உரிச்சொல் - விளக்கம்**

*உரிச்சொல்* என்பது செய்யுட்கே உரிமை பூண்டது. 120 உரிச்சொல்லினை உடையது. ஏளிதில் பொருள் விளங்காத சொல்லிற்கு பொருள் விளக்கும் சொல் ஆகும். இச்சொற்கள் பலசொல் ஒருபொருளையும், ஒருசொல் பலபொருளையும் விளக்குவதாக அமையும். இதனைதொல்காப்பியர் இசை, பண்பு, குறிப்பு என்று மூன்று பிரிவுகளாக பிரிக்கப்பட்டுள்ளார். இதில் இசை என்ற உரிச்சொற்கள் 9 உரிச்சொற்கள் ஆகும்.

**அகராதிகள் தரும் விளக்கம்**

சொல்லுக்கு விளக்கம் அளிக்கும் அகராதிகள் உரிச்சொல்லில் இடம்பெற்றுள்ள இசைக்கும் விளக்கம் தருவதில் முக்கியத்துவம் பெறுகின்றன.

**தமிழ் மொழி அகராதி**

நா. கதிரைவேற்பிள்ளை அவர்கள் இசைஎன்ற உரிச்சொல்லானது" இசைப்பாட்டு, இசைப்பு, இசையென்னேவல், இணக்கம், இனிமை, ஒலி, கூடி நிற்றல், கொடை, சங்கீதம்,

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

பண்பு, சொல், பாட்டினிசை, புகழ், பொன், முத்தமிழினொன்று" என்று 15 பொருளை தருகின்றது என கூறுகின்றார்.

**பாரி தமிழ் அகராதி**

பாரி தமிழ் அகராதியானது உரிச்சொல்லில் இடம்பெற்றுள்ள இசை என்ற சொல்லிற்கு" ஓசை, பாட்டு, புகழ், சொல், பண், இசைவு, ஊதியம்" என்ற 7 பொருளை தரும் என ஆசிரியர் பி.ஸ்ரீ. ஆச்சார்யாவரையறுக்கின்றார்.

**வெள்ளி விழா தமிழ் பேரகராதி**

இசை என்ற சொல்லிற்கு" இசைப்பாட்டு, இசைப்பு, இசையென்னேவல், இணக்கம், இனிமை, ஒலி, கூடி நிற்றல், கொடை, சங்கீதம், பண்பு, சொல், பாட்டினிசை, புகழ், பொன், முத்தமிழினொன்று" என தமிழ் மொழி அகராதியில் அதே 15 பொருளினை வெள்ளிவிழா தமிழ் பேரகராதி ஆசிரியர் எஸ்.சங்கரலிங்க முதலியார் கூறியுள்ளார்.

**இலக்கியச் சொல்லகராதி**

சுன்னாகம் அ.குமாரசுவாமிப் பிள்ளை அவர்கள் இசை என்பது "ஒலி, கீர்த்தி, சொல், பண்" என்ற 4 பொருளினை உணர்த்தும் என இலக்கியச் சொல்லகராதியில் விளக்குகின்றார்.

**தற்காலத் தமிழ் சொல்லகராதி**

தற்காலத் தமிழ் சொல்லகராதியின் ஆசிரியர் பவாநந்தம் பிள்ளை இசை என்ற சொல்லிற்கு "ஒலி, புகழ், சொல், மிடற்றாற் பிறக்கும் இசை, இசைப்பாட்டு, சங்கீதம், முத்தமிழினொன்று" என 7 பொருளினை வரையறுக்கின்றார்.

**தொல்காப்பியர் சுட்டும் இசை உரிச்சொற்கள்**

ஐம்புலன்களுள் ஆற்றல் மிக்கதுசெவி. அச்செவியால் உணரப்படும் ஒலியை இசை என தொல்காப்பியர் உரியியலில் சுட்டிக்காட்டியுள்ளார். தொல்காப்பியர் கூறிய 120 உரிச்சொற்களுள் 9 உரிச்சொற்கள் இசையைகுறிப்பனவாகும். இதனை,

**"கம்பலைசும்மைகலியேஅழுங்கல்**
**என்றிவைநான்கும் அரவப் பொருள" (தொல். உரியியல்)**
**"இசைப்பு இசையாகும்"(தொல். உரியியல்)**
**"துவைத்தலும் சிலைத்தலும் இயம்பலும் இரங்கலும்**
**இசைப்பொருள் கிளவிஎன்பனார் புலவர்"(தொல். உரியியல்)**

என்று தொல்காப்பியர் பதிவு செய்துள்ளார். இந்த 9 இசை உரிச்சொற்களும் பலசொல் ஒருபொருள் உணர்த்தும் தன்மை உடையது. இதில் அழுங்கல், இரங்கல் என்ற இரண்டு சொற்கள் மட்டும் ஒருசொல் பலபொருள் தரும் தன்மை உடையன. 9 இசை உரிச்சொற்கள்,

- **அழுங்கல்**
- **இசைப்பு**
- **இயம்பல்**
- **இரங்கல்**
- **கம்பலை**
- **கலி**
- **சிலைத்தல்**
- **சும்மை**
- **துவைத்தல்**

என்பவை இசை உரிச்சொற்கள் ஆகும். மேற்கூறிய 9 உரிச்சொல்லில் அழுங்கல், இரங்கல் என்ற சொற்கள் குறிப்புப் பொருளையும் உணர்த்தும் எனத் தொல்காப்பியர் கூறியுள்ளார். இதனை,

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**"அழுங்கல் இரக்கமும் கேடும் ஆகும்"(தொல். உரியியல்)**

**"இரங்கல் கழிந்தபொருட்டும் ஆகும்"(தொல். உரியியல்)**

எனச் சுட்டிக் காட்டியுள்ளார்.

**பொருட்பாலில் இசைஉரிச்சொற்கள்**

திருக்குறளின் இரண்டாவது அதிகாரமான பொருட்பால் 7 இயல்களை உடையது. இதில் தொல்காப்பியர் கூறிய 4 இசை உரிச்சொற்கள் வழங்கப்பட்டுள்ளன. அவை,

- **இசைப்பு**
- **இயம்பல்**
- **இரங்கல்**
- **கலி**

என்ற 4 உரிச்சொற்களும் ஆகும்.

**இசைப்பு**

ஒலி,புகழ், இசை, கீர்த்தி என்ற பொருளை உணர்த்தும் இசை என்ற உரிச்சொல் திருக்குறள் பொருட்பாலில் இடம்பெற்றுள்ளன.

**"சுழலும் இசைவேண்டிவேண்டாஉயிரார்**
**கழல்யாப்புக் காரிகைநீர்த்து" (குறள்:777)**
**"ஈட்டம் இன்றிஇசைவேண்டாஆடவர்**
**தோற்றம் நிலக்குப் பொறை" (குறள்:1003)**

என்ற இரு குறளிலும் தொல்காப்பியர் கூறாதபுகழ் என்ற பொருளை தொல்காப்பியர் கூறியுள்ளார். இசை என்ற சொல்லிற்கு புகழ் என்ற பொருளும் உண்டு என்று தமிழ் இலக்கணப் பேரகராதிவிளக்கம் அளிக்கின்றது.

**இயம்பல்**

இயம்பல் என்ற உரிச்சொல் திருக்குறள் பொருட்பாலில் ஒரு இடத்தில் இடம் பெற்றுள்ளது.

**"உள்ளம் இலாதவர் எய்தார் உலகத்து**
**வள்ளியம்என்னும் செருக்கு" (குறள்: 598)**

என்ற குறளில் இடம்பெறும் இயம்பல் என்றசொல் சோம்பித் திரிதல் என்ற பொருளை உணர்த்துகிறது. தற்காலத் தமிழ் அகராதி இயம்பல் என்ற சொல்லிற்கு "சொல் (வி),வாச்சிய முழங்கு, ஒலி" என்ற பொருளையும் தருகின்றன.

**இரங்கல்**

இரங்கல் என்ற உரிச்சொல் திருக்குறள் பொருட்பால் அதிகாரத்தில் இரண்டு இடங்களில் இடம்பெற்றுள்ளன.

**"முன்னுறக் காவாது இழுக்கியான் தன்பிழை**
**பின்னூறு இரங்கிவிடும்" (குறள்:535)**
**"எற்றென்றுஇரங்குவசெய்யற்கசெய்வானெல்**
**மற்றன்னசெய்யாமைநன்று"(குறள்:655)**

என்ற குறளில் தொல்காப்பியர் கூறிய இரங்கல் என்ற உரிச்சொல் இசை என்ற பொருளை குறிக்காமல் வருந்துதல் என்ற பொருளை குறிக்கின்றது.

**கலி**

ஒலி, ஓர்பா, கடையுகம், கேடு, வஞ்சகம் என்ற பொருளை குறிக்கும் கலி என்ற உரிச்சொல் திருக்குறள் பொருட்பாலில் ஒரு இடத்தில் மட்டும் இடம்பெறுகிறது.

**"பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை**

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**பெருகலிற் குன்றல் இனிது" (குறள்:811)**

என்ற குறளில் வரும் கலி என்ற உரிச்சொல் தொல்காப்பியர் கூறிய அரவப் பொருளை உணர்த்தாமல் வளர்தல் என்ற பொருளை குறிக்கின்றுத என்பதை அறியமுடிகின்றது.

**முடிவுரை**

இசை என்பது செவியால் உணரப்படுகிறது. இதனை தொல்காப்பியர் தனது தொல்காப்பியத்தில் கூறியிருக்கின்றார். இசை என்பதற்கு தொல்காப்பியர் கூறாத "புகழ்" என்ற பொருளும் வரும் என பல அகராதிகள் விளக்கம் அளிக்கின்றன. தொல்காப்பியர் சுட்டும் இசை உரிச்சொற்கள் 9 ஆகும். அதிலும் அழுங்கல், இரங்கல் ஆகிய இரண்டும் குறிப்பு பொருளை உணர்த்துகின்றன. தொல்காப்பியர் கூறிய இயம்பல் என்றசொல் சோம்பித் திரிதல் என்றபொருளையும், இரங்கல் என்றசொல் வருந்துதல் என்ற பொருளையும், கலி என்ற சொல் வளர்தல் என்ற பொருளையும் பொருட்பாலில் திருவள்ளுவர் குறிப்பிட்டுள்ளார். திருக்குறள் பொருட்பாலில் தொல்காப்பியர் கூறியஉரிச்சொற்கள் 6 இடங்களில் இடம்பெற்றுள்ளன என்பதை அறியமுடிகின்றது.

**பயன்பட்ட நூல்கள்**

1. திருக்குறள் புதிய உரை, புலியூர்க்கேசிகன், பூம்புகார் பதிப்பகம், சென்னை.
2. தொல்காப்பியம், தமிழண்ணல், மீனாட்சி புத்தக நிலையம், மதுரை.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

# சுற்றம் தழால்

# Cherishing Kinsmen

**போ.சக்திஜோதி,** முனைவர் பட்ட ஆய்வாளர்
அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரி, சிவகாசி.

## Abstract

*The present article probes on the importance of relationship and maintaining relationship interms of Valluvam. Relationship is a vital one to keep moral support for an individual to keep commitment in life. Without maintaining or identifying good relationship, one will fail his life with flaws in his life. "Thirukkural" a treasure of valuable ideologies comments on the cherishing of kinsmen and is importance. It scripts down how kings and people have to maintain relationship, relationship's significance, accepting deviated relationship, on neglecting relationship etc. As a result, the paper encompasses the meanings of the verses from"Thirukkural" with the related ideas.*

**Keywords:** Cherishing Kinsmen, *Thirukkural,* Thiruvalluvar

**முன்னுரை**

வெண்பொன் வள்ளத்தி லமைந்த செம்பொற் கனியாய திருக்குறள் தமிழரின் பண்டைய நூலாக இருப்பினும், அன்றலர்ந்த மலர்போல் என்றும் மணம் பரப்பும் திறம் கொண்டதாகத் திகழ்கிறது. உயிர்க்குருதியாக வேண்டப்படும் உறுதிப்பொருள் மூன்றினை எடுத்தோதும் இந்நூல் என்றென்றைக்கும் நிலைத்து நிற்கும் என்று கூறினால் அது மிகையாகாது. இதில் வள்ளுவர் ஒவ்வொரு மனிதனுக்கும் உறவுகளின் தேவையை விளக்கிக் காட்டியுள்ளார். அதிலும் ஒரு நாட்டை ஆளும் வேந்தனுக்கு உறவுகள் எந்த அளவிற்கு முக்கியத்துவம் வாய்ந்தது என்பதனை இக்கட்டுரை ஆராய்வதாக அமைகின்றது.

**மன்னன் தன் கிளைஞரைத் தன்னில் நீங்காமல் அணைத்தல்**

உணர்வு கொள்ளும் தன்மை கொண்ட அனைத்து உயிரினங்களுக்கும் சுற்றம் என்பது இன்றியமையாததாகும். அதில் கடைசியாக இப்பூமியில் தோன்றிய உயிரினமான மனித இனத்திற்கு சுற்றத்தின் தேவை அவசியமான ஒன்றாகும்.அதிலும் ஒரு நாட்டை ஆளும் வேந்தனுக்கு சுற்றத்தின் தேவை அவசியமானதாகும். 'அரசன் தன் சுற்றத்தைப் பாதுகாத்துக் கொள்ளுதல் வேண்டும்' என்பர் பரிதி. அரசன், அரசி அவர்களின் மக்களான இளவரசன், இளவரசி அவர்களை மணம் முடித்துக்கொண்டோர் என நாடாளும் உரிமை அரச குடும்பத்திற்கு மட்டுமே அந்நாளில் இருந்தது. சான்றாக, ராசராசசோழனின் மகன் ராசேந்திரன் தன் தந்தையின் படைத் தளபதியாக இருந்தான். முதலாம் மகேந்திரவர்மனின் மகன் நரசிம்மவர்மன் தந்தையின் படைக்கு தலைமை தாங்கினான். மக்களால் தேர்தெடுக்கப்படும் சார்பாளர்களைக் கொண்டு ஆளப்பெறும் குடியரசு அமைப்பில், ஆளுவோர் தம் உறவினரைத் தழுவி இருத்தலும் பதவி அளித்தலும் குடியரசு முறைக்கு ஏற்பவை அல்ல. இருப்பினும் தேவை கருதி இந்நிலையை மன்னன் ஏற்படுத்திக் கொண்டான் என்கிறது திருவள்ளுவம்.

**"பற்றுஅற்ற கண்ணும் பழைமை பாராட்டுதல்**

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**சுற்றத்தார் கண்ணே உள."**

இக்குறட்பாவின் கருத்துக்கிணங்க மன்னன் தன் சுற்றத்தார்க்கு பதவி கொடுக்கும் நிலை ஏற்பட்டிருப்பதனை நம்மால் உணர முடிகின்றது.

**ஆக்கம் தரும் சுற்றத்தாரின் சிறப்பு**

எந்த ஒரு சூழ்நிலையிலும் தன்னுடனான அன்பைக் குறைத்துக் கொள்ளாத உறவு ஒருவருக்குக் கிட்டினால் அவரே பெரும் செல்வம் கொண்டவராகத் திகழ்வார். என்பதை வள்ளுவரின் வழி அறிய முடிகிறது. மேலும்,

**"கொடுத்தலம் இன்சொலுமம் ஆற்றின், அடுக்கிய**
**சுற்றத்தால் சுற்றப் படும்."**

தன்னிடம் பொருள் பெற்றிருப்பானாயின் அப்பொருளைத் தன் உறவினர்களுக்குக் கொடுத்து உதவும் தன்மை கொண்டவனாகத் திகழ வேண்டும். அவர்களுடன் இனிமையாகப் பேசும் குணம் படைத்தவனாக இருத்தல் வேண்டும். அத்தகைய குணம் படைத்தவனை வெல்ல எவராலும் இயலாது என்கிறார் வள்ளுவர்.

**"பெருங்கொடையான், பேணான் வெகுளி, அவரின்**
**மருங்கு உடையார் மாநிலத்து இல்"**

தான் மிகுந்த செல்வம் கொண்டவன் என்பதை மனதில் கொண்டு தான் சொல்வதையே பிறர் கேட்டு நடக்கவேண்டும் என்ற எண்ணம் கொள்ளாதவனாக இருப்பானாயின் அவன் பெறத்தக்க பேறு வேறொன்றும் இல்லை. என்ற கருத்தைத் தாங்கி நிற்கின்றது மேற்கண்ட குறள்.

சாதாரண மக்களிலிருந்து, மக்களை ஆட்சி செய்யும் மன்னன் வரையிலும் சுற்றம் என்பது தவிர்க்க முடியாத ஒன்றாகும். சாதரணமாக நம் குடும்பங்களையே எடுத்தக் கொண்டால் நமக்கும் நம் உறவினர்களுக்கும் ஏதோ ஒரு காரணத்தால் பேச்சுவார்த்தை இல்லாமல் இருக்க நேரிடும். அப்படிப்பட்டதொரு காலகட்டத்தில் உறவினர் அல்லாதவர்கள் நமக்கு ஆதரவு இல்லை என்பதை அறிந்துகொண்டு பலவீனமாக நினைத்து தாக்க நேரிடும்பொழுது பழைய பகையை மறந்து நம்மைப் பாதுகாப்பர், அத்தகைய சிறப்புப் பெற்றவர்கள் உறவினர்கள். இதே போன்றுதான் அண்டை மாநிலத்தாரும் அண்டைநாட்டாரும் நமக்கு உதவியாக இருப்பர். இத்தகு சிறப்புப் பெற்ற சுற்றத்தாரை காகமானது தனக்குக் கிடைத்த உணவை மற்ற காகங்களும் உண்ணும்படிச் செய்யும், அதுபோல தன்னிடமுள்ள பொருளை தன் கிளைஞர்களுக்கும் கொடுத்து உதவி மகிழவேண்டும் என்கிறார் வள்ளுவப் பெருந்தகை.

**தகுதியறிந்து செயல்பட வேண்டும்**

இன்னன்ன பொறுப்புக்களை இவரிடம் ஒப்படைத்தால் சிறப்பாகச் செய்யவர் என்னும் தன்மையை அறிந்தவனாக மன்னன் இருத்தல் வேண்டும். இதனையே வள்ளுவர்

**"பொதுநோக்கான், வேந்தன் வரிசையா நோக்கின்,**
**அதுநோக்கி வாழ்வார் பலர்".**

என்ற குறட்பாவின் மூலம் தெளிவுபடுத்தியுள்ளார். இக்கருத்தையொட்டியே புறநானூறு கீழ்வருமாறு விளக்குகிறது

**"ஒருதிசை ஒருவனை உள்ளி, நால்திசைப்**
**பலரும் வருவர், பரிசில் மாக்கன்,**
**வரிசை அறிதே, பெரிதும்,**
**ஈதல் எளிதே, மாவன் தோன்றல்!**
**அதுநற்கு அறிந்தனை ஆயின்,**
**பொதுநோக்கு ஒழிமதி, புலவர் மாட்டே!" (புறம்-121)**

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

ஒரு மன்னனை நோக்கி நான்கு திசைகளிலிருந்தும் பரிசுபெறும் பொருட்டு திறமைகொண்ட பலரும் வருவர். அவர்கள் அனைவரும் ஒத்த திறமையோடு இருப்பினும், நுண்ணிதின் ஆராய்ந்து நற்புலமை கொண்டவருக்கே அப்பரிசினை அளித்தல் வேண்டும். அதுவே அம்மன்னனது தகுதியை நிர்ணயிக்கும். கொடை வழங்குவது என்பது எளிதான செயல், ஆனால் அக்கொடை உரியவரைச்சென்று சேருதலே அத்திறமை கொண்டவருக்கும், கொடையளிப்பவருக்கும் சிறப்பைப் பெற்றுத்தரும்.

**சுற்றத்தாரைச் சேராதாரின் இயல்பு**

தன் உறவினர்களுடன் மனம்விட்டுப் பழகும் இயல்பு இல்லாதவனின் வாழ்க்கை வெறுமையானதாக இருக்கும். அந்நிலையானது கரையில்லாத குளத்தில் நீர் நிரம்பி வழிவதைப்போன்று அவனது செல்வமும் பயனற்றுக் கசிந்துவிடும் என்பதனை

**"அளவளாவு இல்லாதான் வாழ்க்கை குளவளாக்**
**கோடுஇன்றி நீர்நிறைந் தற்று"**

என்ற குறளின் வழியே அறியலாம்.

**பிரிந்து சென்ற சுற்றத்தைக் காரணமறிந்து சேர்த்துக்கொளல்**

கருத்து வேறுபாடு காரணமாகப் பிரிந்து சென்ற உறவினர், சிறிது காலம் கழித்து கருத்து வேறுபாட்டிற்குறிய காரணங்கள் இப்போது இல்லை என உணர்ந்ததும், வந்து சேர்ந்து கொள்வர். இந்நிகழ்வானது உறவினர்களுக்கும், தலைவன் தலைவிக்கும் பொருத்தமுடையதாகும். மேலும் அவ்வாறு வந்து சேரும்பொழுது மன்னனானவன் முறையாக ஆராய்ந்த பின்பு ஏற்றுக்கொள்வதே அவனுக்குப் பாதுகாப்பாக அமையும். இதனை

**"உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்தன்**
**இழைத்து இருந்து எண்ணிக் கொளல்"**

என்ற குறள் விளக்கி நிற்க்கின்றது.

மேற்சொன்ன கருத்துக்களின்படி ஆராயாமல் உறவினரைச் சேர்த்துக்கொண்டால் அதுவே அவனுக்கு சில சமயங்களில் ஆபத்தானதாக அமைய நேரிடும். காரணம், பிரிந்து சென்றவர் பகைதீர்த்துக் கொள்வதற்க்காகவும் வந்து சேர விரும்புவர்.

**முடிவுரை**

சுற்றத்தாரின் சிறப்புக்களை இக்கட்டுரையின் வழி அறிந்தோம். எந்த ஒரு சூழ்நிலையிலும் தன்னுடனான அன்பைக் குறைத்துக் கொள்ளாதவர் பெரும் செல்வம் கொண்டவராகத் திகழ்வார். எனவே, சுற்றத்தாரிடம் நன்கு செயல்படுவது கடமையாகும்.

**பார்வை நூல்கள்**

1. *திருக்குறள்*.க.ப. அறவாணன்.
2. *புறநானூறு* ச.வே.சு. பா.எண்:121

**E-ISSN: 2581-7140**
**Special Issue I, August-2019** Available at: www.ijtlls.com

# திருக்குறளில் ஐந்திலக்கணப் பயன்பாடு

## The Use of Five Grammatic Order (Iyndilakkanam) in *Thirukkural*

**முனைவர். பா. சங்கரேஸ்வரி**,உதவிப்பேராசிரியர்,
தமிழியற்புலம், மதுரைகாமராசர் பல்கலைக்கழகம், மதுரை -21.

**Abstract**

*The article explains on the use of 'Iyndilakkanam' (Five Grammar) as indicated in "Thirukkural'. The use of 'Eluthu', .Sol', 'Porul', 'Yappu, and 'Ani' are considered the chief elements of a language and its grammar patterns. It is called as 'Iyndilakkanam' in Tamil. Without the coherent usage of them the language cannot be meaningful. Tamil Language is rich in these concepts. These are also widely spoken in "Thirukkural". Therefore, the paper decodes the use of the grammatical norms and qualities as derived from the verses of "Thirukkural"*

**Keywords:** Use, Five Grammatic Order, *'Iyndilakkanam' Thirukkural*

### முன்னுரை

தமிழினத்தின் பழம்பெறும் பண்பாட்டையும் பாரம்பரியத்தையும் பற்றி உலகம் வியக்கிறது என்றால் அதற்கு தமிழ் இலக்கியம் முக்கிய காரணமாக அமைகின்றது. திருக்குறள் உலகப்பொதுமறை நூல் என புகழ்வதற்கு ஏற்ப உலக மக்கள் அனைவரும் படித்து பயன்பெறும் நூலாகும். அறம் மக்களின் தேவை என உணர்ந்து எழுதப்பட்ட நூல் ஆகும் தமிழ் இலக்கணத்தைப் பொறுத்தவரை ஐந்து பகுதிகளை உள்ளடக்கியதாக அமைந்துள்ளது. அவையாவன - எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி. இந்த ஐந்து இலக்கணப் பகுதிகள் திருக்குறளில் எங்ஙனம் பதிவாகியுள்ளது என்பதைத் தொகுத்துக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும். எள்ளில் இருந்து எண்ணை எடுப்பது போல் இலக்கியத்திலிருந்து இலக்கணம் எடுபடும் எனும் அகத்தியர் கூற்றுக்கிணங்க இலக்கியத்திலிருந்து இலக்கணம் பிரிக்கப்படுபகிறது.

### 1.எழுத்து

இலக்கணம் தனியே கற்பிக்கப்படாமல் இலக்கியத்தின் வழி கற்பித்தால் மாணவர்களுக்கு இன்னும் தெளிவாகவிளங்கும் என்பதில் ஐயமில்லை. தாமே தனித்து இயங்கவல்ல பன்னிரண்டு உயிர் எழுத்துகளில் முதல் எழுத்தாக திகழ்வது 'அ' என்னும் எழுத் இதனை 'அகரம்' என்றும் வழங்குவர். வாயைத் திறந்த அளவில் வெளிப்படுவது இந்த 'அ' என்ற உயிர் எழுத்து. இது மற்றைய பதினோறு உயிர்களிலும் பதினெட்டு மெய்களிலும் ஒன்றாய்க் கலந்து நின்று அவற்றை ஒலிக்க உதவுகிறது. திருவள்ளுவர் 'அ' என்ற எழுத்தின் பெருமையைப் பறைசாற்றும் விதமாக முதல் குறளிளேயே *அகர முதல எழுத்தெல்லாம்* எனக்கூறி 'அ' என்ற எழுத்திற்கும் பெருமை சேர்த்துள்ளார்.

#### 1.1போலி

ஒரு சொல்லில் எழுத்துமாறி, ஆனால் பொருள் மாறாமல் வருவன போலி எனப்படும்.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

திருவள்ளுவர் *அறம்* எனப்பட்டதே *இல்வாழ்க்கை* என்று குறித்துள்ளார். இதில் அறம், அறனாகவந்துள்ளது.

**"அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அ.்.தும்**
**பிறன்பழிப்பதில்லாயின் நன்று" (திருக்.44)**

**1.2 அளபெடை**

அளபெடைசெய்யுளில் அசைநிறைக்கவருவது.. ஆனால் இயற்கையானதாகக் கருதவேண்டும்.

**"கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்மற்றுஆங்கே**
**எடுப்பதூஉம் எல்லாம் மழை" (திருக் 15)**

**1.3புணர்ச்சி**

**நீரின்றமையாதுலகெனின் யார்யார்க்கும்**
**வானின் றமையாதொழுக்கு"**

**1.3.1புணர்ச்சி பிரிந்தபடிவம்**

**"நீர் இன்றுஅமையாதுஉலகுஎனின் யார்யார்க்கும்**
**வான் இன்று அமையாதுஒழுக்கு"**

**1.3.1.1 வாக்கியஅமைப்பு**

**ஒழுக்குஅமையாது–முதன்மைவாக்கியம்**
**உலகுநீர் இன்றி–துணைவாக்கியம்**

**நீரின்று : நீர்+ இன்று**

'இன்றி' என்ற வினையெச்சம் தான் இங்கு 'இன்று' என்ற வடிவில் வந்துள்ளது. இதனைத் தொல்காப்பியர்,

**"இன்றிஎன்னும் வினையெஞ்சு இறுதி**
**நின்ற இகரம் உகரம் ஆதல்**
**தொன்றியல் மருங்கின் செய்யுளுள் உரித்தே" (தொல்.எ.237)**

இகரம், உகரம் ஆதல் தொன்றுதொட்டும் வரும் மரபு. (உரைநடையில் வராது)

'நீர்இன்று' - 'நீர் இன்றி' இ 'அமையாதுலகு' - இத்தொடர் 'அமையாது உலகு' என்று விரியும். அமையாது என்பது எதிர்மறை வினைமுற்று.

'அமையாதெனின்' - 'அமையாது எனின்' என விரியும். 'எனின் என்பது' என்றால் எனப் பொருள் படும்.

'யார்யார்க்கும' - யார்+யார்+கு +உம் என விரியும். 'யார் யார' என்பது அடுக்குத் தொடர்.

**2.சொல்**

**2.1 திணை**

திணை இரண்டு வகைப்படும்

1. **உயர்திணை**
2. **அ.்.றிணை**

இவ்விரண்டுபகுப்புகளும் அறிவின் சிறப்பை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப் பெற்றவை. மனிதரிலும் பகுத்தறிவு இல்லாதவர் மாக்கள் என அ.்.றிணையாகிவிடுவர்.

**"உயர்திணைஎன்மனார் மக்கட் சுட்டே"**

சில பேர் வடிவத்தால் மக்களாகக் காணப்படுவர் ஆனால் பண்பால் விலங்குகளிலும் இழிந்தவராக இருப்பர் உறுப்பு ஒப்புமை என்ற ஒன்றை மட்டும் அல்லாமல் பண்பு ஒப்புமை என்ற ஒன்று பற்றியும் கருதியே ஒருபொருளை உயர்திணை, அ.்.றிணை என்றே வழங்குதல் வேண்டும். இதனைத் திருவள்ளுவர், சிலபேர் வடிவத்தால் மக்களாகக் காணப்படுவர் ஆனால்

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

பண்பால் விலங்குகளிலும் இழிந்தவராக இருப்பர் உறுப்பு ஒப்புமை என்ற ஒன்றை மட்டும் அல்லாமல் பண்பு ஒப்புமை என்ற ஒன்று பற்றியும் கருதியே ஒருபொருளை உயர்திணை, அ.்.றிணை என்றே வழங்குதல் வேண்டும். இதனைத் திருவள்ளுவர்,

**"உறுப்பொத்தல் மக்கள் ஒப்பஅன்றால்வெறுத்தக்க**
**பண்பொத்தல் ஒப்பதாம் ஒப்பு."**(குறள். 993)
**"அறம்போலும் கூர்மையரேனும் மரம்போல்வர்**
**மக்கள் பண்பு இல்லதாவர்."**( குறள். 999)

**2.2 வேற்றுமை**

ஒரு,ஓர்க்குவிதியைக் கூறியதொல்காப்பியர் ஒடு, ஓடு, ஆல், ஆன் போன்ற உருபு எந்தெந்த எழுத்திற்கு முன்னால் வரும் எனக் கூறவில்லை. ஆனால் உயிர் எழுத்துக்கு முன்பு ஓடு, ஆன் என்றும் உயிர்மெய் எழுத்துக்கு முன்பு ஒடு, ஆல் என்றும் தவறாமல் கடைபிடித்துக் காட்டி உணர்த்தியுள்ளார்.

**"மெய்யோடுஇயையினும் உயிரியல் திரியா" (தொல்.எ.10)**
**"மெய்யின் இயற்கைபுள்ளியொடுநிலையால" (தொல்.எ.15)**

தாய்க்கும் உரித்தால் **"போக்குடன் கிளப்பின" (தொல் பொருள் -198)**

**"வாராமரபினவரக் கூறுதலும்**
**……………….அவற்று இயல்பான்**
**இன்னஎன்னும் குறிப்புரை ஆகும்" (தொல் சொல்.416)**

இதை அடியொற்றியே திருவள்ளுவர் மூன்றாம் வேற்றுமை உருபுகளின் முறையினைக் கடைபிடித்துள்ளார்

**"விலங்கொடுமக்களனையர் இலங்கு நூல்**
**கற்றாரோடுஏனை யவா" (திருக் - 410)**

உயிர் மெய்க்கு முன்னால் 'ஒடு' என்றும் உயிர்க்கு முன்னதாக 'ஓடு' என்றும் சரியாகக் கடைபிடித்துக் காட்டியுள்ளார்.

**"புறந்தூய்மைநீரான்அமையும் அகந்தூய்மை**
**வாய்மையால்காணப்படும்" (திருக் 298)**
**அமையும் - நீரான் - ஆன் உருபு**
**காணப்படும் - வாய்மையால் - ஆல் உருபு**

**2.3 தொகைச்சொல்**

'ஆண்மை' என்ற பெயரைச் சேர்த்துத் தொகைச் சொல் பலகுறளில் காணப்படுகின்றன. ஆண்மை என்பது ஆளும் தன்மை.

பேராண்மை (148) வேளாண்மை (212) நல்லாண்மை (1026) வினையாண்மை - 904) சான்றாண்மை (990)

**2.4 சொல் வகைப்பாடு**

**2.4.1 இயற்சொல்**

மற்றையவர்கள் (263) செய்தற் பொருட்டு (212) நிலம், நீர் …

**2.4.2 திசைச்சொல்**

அற்றம், அங்கணம், மடி, உணக்குதல், வெள்ளம் (595)

**2.4.3 திரிசொல்**

அற்றால் (943) (942), மாடு (400)

**2.4.4 வடசொல்**

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

வள்ளுவர் 925க்கும் மேற்பட்ட வடசொற்களைக் கையாண்டுள்ளதாக வையாபுரிப்பிள்ளை பட்டியலிடுகிறார். (1949:87 தொ) ஆதிபகவன் (1) வரன˙(24) க.˙.சு (1037) பாக்கியம் (1141) பீழை (பீடா -658) ஆதி (636) பகவன் (1) மந்திரி (639) ……

**3.பொருள்-அகம்**

திருக்குறளில் காமத்துப்பால் 25 அதிகாரங்களைக் கொண்டது. இவ்வதிகாரங்கள் ஐந்திணை மரபுப்படி படைக்கப்பட்டுள்ளதாகக் கூறப்படுகின்றது. இதனை ஐந்திணைப் பாகுபாட்டில் *காமத்துப்பால்* அதிகாரங்கள் பின்வருமாறு அமைந்துகிடக்கின்றன எனக் கருதலாம்.

| **குறிஞ்சி** | **முல்லை** | **பாலை** | **நெய்தல்** | **மருதம்** |
|---|---|---|---|---|
| புணர்தல் புணர்தல் நிமித்தம் | இருத்தல் இருத்தல் நிமித்தம் | பிரிதல் பிரிதல் நிமித்தம் | இரங்கல் இரங்கள் நிமித்தம் | ஊடல் ஊடல்நிமித்தம் |
| தகைஅணங்குறுத்தல | நாணுத்துறவுரைத்தல் | பசப்புறபருவரல் | உறுப்புநலன் அழிதல் | புணர்ச்சிவிதும்பல் |
| குறிப்பறிதல் | அவர் அறிவுறுத்தல் | தனிப்படர் மிகுதி | நெஞ்சொடு கிளத்தல் | நெஞ்சொடு புலத்தல் |
| புணர்ச்சி மகிழ்தல் | பிரிவாற்றாமை | நினைந்தவர் புலம்பல் | நிறையழிதல் | புலவி நுணுக்கம் |
| நலம் புனைந்து உரைத்தல் | படர்மெலிந்திரங்கல் | கனவுநிலைஉரைத்தல் | அவர்வயின் விதும்பல் | புலவிநுணுக்கம் |
| காதற் சிறப்புரைத்தல் | கண்விதுப்பழித்தல் | பொழுதுகண்டு இரங் | குறிப்புஅறிவுறுத்தல் | ஊடல் உவகை |

திருக்குறள் காமத்துப்பாலில் அகப்பொருளின் மரபுகள் தொடர்நிலையாகஅமைதலையும் அறியமுடிகிறது.

**“அணங்குகொல் ஆய்மயில் கொல்லோகணங்குழை**
**மாதர்கொல் மாலுமென் நெஞ்சு”      (திருக்.1081)**

இயற்கைப் புணர்ச்சியின் முதல் படிநிலைகளானகாட்சி,ஐயத்தைவிளக்குவதாகஅமைகிறது.

**“நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு**
**தானைக் கொண்டன்னதுடைத்து” (திரு.1082)**

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

என அமைத்து ஐயமுற்றத் தலைவன், அவளும் நோக்கத் தெளிவு பெற்ற நிலையைக் குறிப்பிடுகிறது.

**3.1 குறிப்பறிதல்**

தலைவனுடைய காமக் குறிப்பை உணர்ந்து தலைவியும் கண் குறிப்புக் காட்டிய செய்தி சுட்டப்படுகிறது.

**"இருநோக்கிவளுக்கண் உள்ளதொருநோக்கு**
**நோய்நோக்கொன்றந் நோய் மருந்து" (திரு.1091)**

**3.2 புணர்ச்சிமகிழ்தல்**

'இடந்தலைப்பாடு' என்னும் துறைக்குரிய செய்திகளை விளக்குகின்றன. *நலம் புனைந்துரைத்தல், காதற் சிறப்புரைத்தல்* ஆகிய அதிகாரங்களில் சுட்டப்பட்டுள்ள செய்திகள் காதலின் வளர் நிலைகளைச் சுட்டுவனவாக அமைகின்றன. இவர்களது களவு வாழ்க்கையைக் கற்பு வாழ்க்கையாக மாற்ற முற்படும் போது ஏற்படும் சிக்கல்களால் தலைவன் மடலேறத் துணிதலை *நாணுத்துறவுரைத்தல்* என்னும் அதிகாரம் விளக்குகின்றது.

**3.1.2 புறம்**

*திருக்குறள்* அறத்துப்பால், பொருட்பால்களில் புறச்செய்திகள் குறிப்பிடப்பட்டிருப்பினும் புறத்திணைகள் மற்றும் புறத்துறைகள் குறித்த செய்திகள் நேரடியாக அமையவில்லை. போர் நிகழ்வுகள் தொடர்பான செய்திகளை மையமிட்டு இறைமாட்சி, செங்கோன்மை, கொடுங்கோன்மை, ஒற்றாடல், அரசியல், அமைச்சு, தூது, நாடு, அரண், படைமாட்சி முதலான அதிகாரங்கள் சுட்டும் செய்திகளைப் புறச்செய்திகளாக காணமுடிகிறது.

**3.3 மெய்ப்பாடுகள்**

**3.3.1 களவுக் காலமெய்ப்பாடுகள்**

**புகுமுகம் புரிதல்**

முதன் முதலாகச் சந்தித்தல் (திருக்.1082, 1083, 1084, 1085, 1086, 1091, 1092, 1093, 1094, 1095, 1098, 1100)

பொறிநுதல் வியர்த்தல் - தலைவி உவகைப் பெருக்கால் போராட அவள் நெற்றியில் சிறு வியர்வைத் துளிகள் தோன்றும்.

**"திருக்குறளில் ஒளிபொருந்தியநெற்றியைப் பற்றி**
**ஒண்ணுதல் கோஒஉடைந்ததேஞாட்பினுள்" (திருக் -1088)**

குறிப்பாகவெளிப்பட்டுள்ளது.

**நகுநயம் மறைத்தல்**

தலைவனுக்கு புலப்படாதது போல நகையை வெளிக்காட்டாமல் இருப்பது

**யான் நோக்குங் காலை ........... (திருக்.1094)**

**சிதைவுபிறர்க்கின்மை** (திருக் 1096, 1097, 1099)

**வேட்கையில் தோன்றும் மெய்ப்பாடு** (திருக். 1097, 1099, 1106, 1107, 1108)

**4.யாப்பு**

குறள் வெண்பா வெண்பாவிற்குரிய பொது இலக்கணங்களைப் பெறுவதோடன்றி, இரண்டடியால் வருவது இரு விகற்பமாகியும் (அதாவது எதுகை வேறுபட்டும்) ஒரே விகற்பமாகியும் (எதுகை வேறுபடாமலும்) ஆகும்.

**இருவிகற்பம்**

**உருவுகண் டெள்ளாமைவேண்டும் உருள்பெருந்தேர்க்**
**கச்சாணிஅன்னார் உடைத்து (குறள்.667)**

**ஒருவிகற்பம்**

| ஆணி | குறட்பாஎண் |
|---|---|
| உவமையணி. | 118 |

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

| | |
|---|---|
| **உருவகஅணி** | 757 |
| **தீவகஅணி** | 1094, 1196, 1281 |
| **பின்வருநிலையணி** | 200 |
| **வேற்றுப் பொருட் வைப்பணி** | 211 |
| **ஒட்டணி** | 475 |
| **ஆதிசயஅணி** | 85,64,1103 |
| **தற்குறிப்பேற்றஅணி** | 1114,1116 |
| **ஏதுவணி** | 445,827 |
| **நிரல் நிறைஅணி** | 18,45,254,856,876,926 |
| **சுவையணி** | 77,177,1048,1049,1062,1081,1124,1151 |
| **விரோதவணி** | 222,1327 |
| **சொற்பொருட்பின்வருநிலையணி** | 200,948,12,202,297,320,350,359,365,411, 428 |

**முடிவுரை**

எள்ளில் இருந்து எண்ணை எடுப்பது போல் இலக்கியத்திலிருந்து இலக்கணம் எடுபடும் எனும் அகத்தியர் கூற்றுக்கினங்க இலக்கியத்திலிருந்து இலக்கணம் பிரிக்கப்படுபகிறது. என்பதை மேற்காட்டிய செய்திகளின் வழி அறியமுடிகிறது.

**நூல்கள்**

1. திருக்குறள் புதிய உரை, புலியூர்க்கேசிகன், பூம்புகார் பதிப்பகம், சென்னை.
2. தொல்காப்பியம், தமிழண்ணல், மீனாட்சி புத்தக நிலையம், மதுரை.
3. மு. வரதராசனர் - திருக்குறள் தெளிவுரை.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com



# குறள் காட்டும் அன்பின் ஆளுமை

## The Personality of Love shown by Kural

**இரா.சத்தியலட்சுமி,** தமிழ் முனைவர் பட்ட ஆய்வாளர்
அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரி, சிவகாசி

## Abstract

*The present article details on the importance of the sway of love on human lives. It explains the definition of love and the etymological meaning of love. Love surpasses all sorts of partial senses and keeps us with deep conscious for humanity in making the life more meaningful to consider it as a boon in the present life. A man without love is deprived of all fortunes is the concept of the Tamil society. It additionally defines on the reasons of the name put to the didactic work as "Thirukkural". The vitalness of love, love emphasized in "Thirukkural", love shared and life, Domestic life, lovable family with love, and so on related to the virtues of love are deciphered in the article to give much emphasis on the sway of love in life. Therefore, the paper decodes the inner value of love from the verses of "Thirukkural"*

**Keywords:** Influence of Love, Kural, Life

**முன்னுரை**

திருக்குறள் - திரு குறள் மேன்மையான குறள் வெண்பாக்களினால் ஆகிய நூல் என்பது பொருளாகும். திரு-மேன்மை, குறள்-இரண்டடி வெண்பாகளால் ஆனது. வள்ளுவனை உலகிற்கு தந்து புகழ்பெற்றுக் கொண்ட தமிழ்நாடு என்று பாடினார் பாரதியார். திருக்குறள் அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று உறுதிப் பொருட்களையும் விரிவாக 133 அதிகாரங்களாக அமைந்த 1330 குறட்பாக்களை உடையது. இந்நூலில் மனித இனம் முழுமைக்கும் வேண்டிய உயரிய கருத்துக்களை எடுத்துக் கூறுவதாக அமைந்த இந்நூலில் அன்பின ஆளுமையை விளக்குவதாக இக்கட்டுரை அமைகின்றது.

**ஆளுமை**

ஆங்கிலத்தில் ஆளுமையைக் குறிக்கும் **பர்ஸனாலிடி (personality)** என்னும் சொல் லத்தீன் மொழியிலுள்ள **பர்ஸொனா** என்ற சொல்லிலிருந்து பிறந்தது. நாடக மேடையில் நடிப்பவர்கள் தாங்கள் ஏற்றிருக்கும் பாத்திரத்தின் இயல்புக்குத் தக்கப்படி அணிந்திருந்த முகமூடியை **பர்ஸொனா** என்ற லத்தீன் சொல் குறித்தது. ஆளுமையைக் குறிக்கும் பர்ஸனாலிடி என்ற ஆங்கிலச் சொல்லின் பண்டைய பொருள் ஒருவனது பண்புகளைக் குறிக்கும் வெளித்தோற்றம் என்பதாக இருந்தது.

மேலும், ஆளுமையானது ஒருவனது பண்புகளின் தனித்தன்மை வாய்ந்த அமைப்பு (unique pattern) என்கிறார் கில்போர்ட். ஒவ்வொரு மனிதனிடமும் குறிப்பிட்ட ஒரு வகையில் அவனது உடல் மனப்பண்புகள் சேர்ந்து ஒருங்கமைந்திருக்கும் இவ்வொருங்கமைப்பின் இயல்பு, மனிதனுக்கு மனிதன் சிறிதேனும் மாறுபட்டிருக்கும். தனிமனிதன் ஒருவன் தன் சூழ்நிலையில் எவ்வாறு செயற்படுகிறான் என்பது இவ்வொருங்கமைப்பின் தன்மையைப் பொறுத்ததாகும்.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

இத்தகைய உடல்-மனப்பண்புகளின் தனிப்பட்ட ஒருங்கமைப்பு ஒருவனது ஆளுமையாகும் என்கிறார் ஆல்போர்ட்.

**திருக்குறள் - பெயர்க்காரணம்**

திருவள்ளுவர் அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றையும் பற்றிய கருத்துக்களையும் தொகுத்து அடைவுபடுத்தி மூன்று பகுதியாக்கித் திருக்குறளை இயற்றியுள்ளார். அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றையும் ஒருமித்து வழங்குவது இந்திய நாட்டு மரபு, வடமொழியில் அதைத் **திரிவாக்கம்** என்பர் தமிழ் நூல்களில் அம்மூன்றையும் ஒருங்கிணைக்கும் வழக்கத்தை,

**"அறனும் பொருள் இன்பமும் மூன்றும்**
**ஆற்றும் பெருமிநன் செல்வம்."**

என்றும், மேலும்,

**"சிறப்புடை மரபிற் பொருளும் இன்பமும்**
**அறத்துவழி படுஉம் தோற்றம் போல."**

என்றும் புறநானூற்று அடிகள் சுட்டியுள்ளன.

திருக்குறளில் அந்த மூன்றைப் பற்றிய பகுதிகளைத் தனித்தனியே அறத்தப்பால், பொருள்பால், காமத்துப்பால் எனத் திருவள்ளுவர் இந்நூலுக்கு இட்டப்பெயர் **முப்பால்** எனத் தெரியவருகிறது.

குறட்பாவால் அமைந்த தனிநூல் பழங்காலத்தில் இல்லையாதலால் இதனைக் **குறள்** என்றும் பின்னர் **திருக்குறள்** என்றும் வழங்கினர். தற்போது இந்நூலைத் திருக்குறள் என்றே வழங்குகின்றனர் நூலில் அமைந்த யாப்பினால் வந்த பெயர் இது எனலாம்.

**அன்பு**

காலத்தின் பொருளையும் பிறருக்குத் தேவைப்படும் போது கொடுக்கும் தன்மையே அன்பின் அடிப்படை இது அகத்தே உணரும் மென்மையான உணர்வு இதற்கு புறவடிவம் இல்லை வார்த்தைகளால் வருணிக்க முடியாதது உருவம் இல்லாத உணர்வு, இவ்வுலகில் பிறவி எடுத்ததன் பயன் வாழ்வாங்கு வாழ்ந்து உடலும் உயிரும் சிறப்படைவது அன்பினாலே.

**திருக்குறள் போற்றும் அன்பு நெறி**

உலகின் எழுத்தோவியம் திருக்குறள் என்று போற்றிய தமிழ்த் தென்றல் திரு.வி.க அவர்கள் திருவள்ளுவரையும் திருமூலரையும் எல்லோருக்கும் பேரளவில் அறிமுகம் செய்து வைத்த பெருமைக்கு உரியவராவார் அதற்கு அடிப்படையாக அமைபவை திருக்குறளில் உள்ள ஒன்பது அதிகாரங்களின் சிறப்புமிகு சிந்தனைகளாகும். இல்வாழ்க்கை, வாழ்க்கைத்துணைநலம், மக்கட்பேறு, அன்புடைமை, விருந்தோம்பல், இனியவை கூறல், பிறனில் விழையாமை, பெண் வழிச்சேறல், வரைவின் மகளிர் ஆகிய அனைத்தும் உயிர்நாடியாக விளங்குவது அனபு.

**அன்பின் வெளிப்பாடு**

அன்பை இன்பத்திலும் துன்பத்திலும் காணலாம், கண்ணின் மூலம் காணலாம், கையின் மூலம் காணலாம், முக மலர்ச்சியாலும், செய்கையாலும், பார்க்க முடியும் ஆனால் அன்பைத் தணித்துக் காணமுடியாது. அன்பை அமைத்து வைக்கவும் முடியாது என்பதனை,

**"அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்**
**புன்கணீர் பூசல் தரும்."**

என்ற குறளில் வள்ளுவர் அன்பின் வெளிப்பாடினைக் கூறுகின்றார். ஏரியில் வெள்ளம் பெருகி வருகிறது ஆற்று வெள்ளம் பெருக்கெடுத்து வருகிறது கடலும் கரைகடந்து செல்கிறது இவ்வெள்ளங்களை யெல்லாம் அடைத்துத் தடுத்தல் கூடும் ஆனால் ஒருவர் கொண்டுள்ள அன்பை அடைத்து (மறைத்து) வைக்க முடியாது. ஆர்வம் கொண்ட காதலர்கள் கண்களில்

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

ததும்பும் நீர்த்துளிகளில் அன்பைக் காட்டுகன்றனர். உள்ளத்தில் இருக்கக் கூடிய அன்பை கண்ணீர் வழியாகவும் வெளிப்படுகின்றன என்பதைக் கூறுகிறார்.

**மனித வாழ்வு**

உலகத்தில் உள்ள எல்லா உயிர்களிடமும் அன்பு காணப்படுகின்றது. அன்பானது ஒரு மனிதனை மற்ற மனிதர்களோடு இச்சமுதாயத்தில் சேர்ந்து வாழச் செய்கின்து. உயிர்களை மதிக்கச் செய்கின்றது அன்பினால் மட்டுமே வேற்றுமைகள் நீங்கி ஒற்றுமை பெருகுகிறது. மனிதன் தவறான பாதையை நோக்கிச் செல்லும் போது அன்பு நேர்மையோடு அறம் சார்ந்து செல்ல துணை நிற்கின்றது. திருவள்ளுவர் அன்பினைக் குறித்து கூறும் போது அன்பு இல்லார் எல்லாப் பொருளை தனக்கே உரியதாகக் கொள்வர் ஆனால் அன்புடையவரோ தன் உடலையும் பிறருக்கு வழங்கக் கூடியவர் என்பதை,

**"அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்**
**என்பும் உரியர் பிறருக்கு."**

என்ற குறளின் வாயிலாக எடுத்துக் காட்டகின்றார். அறத்திற்கு மட்டுமே அன்பு துணைபுரியும் என்று அறியாதவாகள் சொல்வார்கள் அறத்திற்கு மட்டுமின்றி நாடு, மொழி, கொள்கைக் காக்கும் மறம் சார்ந்த போருக்கு அன்பு தான் துணை செய்கின்றது. இதனை,

**"அறத்திற்கே அன்புசார்பு என்ப அறியார்**
**மறத்திற்கும் அஃதே துணை."**

என்ற குறள் வாயிலாக குறிப்பிடுகின்றார்.

**காதல்**

**"உடம்போடு உயிரிடை என்னமற்று அன்ன**
**மடந்தையொடு எம்மிடை நட்பு."**

காதலன் தன் காதலியின் மீது உயிருக்குச் சமமாக அன்பு வைத்திக்கின்றான். மேலும்,

**"கருமணியில் பாவாய் நீ போதாய் யாம் வீழும்**
**திருநுதற்கு இல்லை இடத்து."**

என்ற குறளில் காதலியின் மீது கொண்ட அன்பின் மிகுதியால் நீ என்னை விட்டுச் சென்றால் என் உயிர் பிரியும் என காதலன் கூறுகின்றான். மேலும் காதலி காதலனை நினைத்துக் கொண்டிருக்கிறாள். காதலியின் கண்ணில் காதலன் உள்ளே போகாமல் விழிகளுக்கும் இமைகளுக்கும் இடையில் இருந்து கொண்டிருக்கிறான் என்றால் காதலன் மீதான அன்பையே வெளிக்காட்டுகிறது. கண்ணை மூடினால் என் காதலன் மறைந்து விடுவார் என்றும் காதலி சூடான உணவுகளை உண்ண அஞ்சுவதும் காதலன் மீதான அன்பை வெளிப்படுத்துகிறது.

**இல்வாழ்கையின் அன்பு**

இல்லற வாழ்க்கையில் கணவன் மனைவி இருவரும் ஒருவருடன் ஒருவர் மிக அன்பாக இருக்க வேண்டும் எனக் குறிப்பிடும் வள்ளுவர் எதைச் செய்தாலும் அன்போடும் தரும நியாயம் தவறாமலும் செய்தால் அதுதான் இல்வாழ்க்கையின் தன்மை அதனால் நமக்கும் உலகத்துக்கும் நல்ல பயனுண்டாகும் என்பதை,

**"அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**
**பண்பும் பயனம் அது."**

இனிமை, நீர்மை எனும் இரண்டும் பண்புகளும் அன்பின் வழித் தோன்றுவதாகும். அன்புள்ளம் கொண்டவர் யாவரிடமும் இனிமையாக நடப்பர் இன்சொல் பேசுவர் இனிமையாகக் காட்சியளிப்பர் அன்பு கொண்டவரிடம் சினம் தோன்றுவதில்லை அன்பினால் உயர்வு தாழ்வு நீங்கி ஒற்றுமை வளரும் என்பதைனை வள்ளுவர் கூறுகின்றார்.

**அன்பே இன்பம்**

அன்பு, அருள், பொறுமை, அம்மூன்றும் இன்றியமையாதன அன்பினால் ஆர்வமும்

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

அதனால் நட்பு என்னும் செல்வமும் கிடைக்கும். உடலுக்கும், உயிருக்கும் அன்பே நெருங்கிய தொடர்புடையது இந்த கட்டற்ற ஆன்மா, எலும்புக் கூட்டில் இணைந்திப்பதன் காரணம் அன்பை விரும்பியே. இந்த உலகத்து மக்கள் அனைவரும் நுகரும் இன்பம் எதுவென்றால் அவை அன்பின பயனே ஒருவர் மீது எவ்வளவு அன்பு வைத்துள்ளோமோ அந்த அளவிற்கு மனதில் இன்பமும் உண்டாகும்.

**"அன்பின் வழியது உயிர்நிலை அ∴திஇலார்க்கு**
**என்புதோல் போர்த்த உடம்பு."**

என்ற குறளில் வள்ளுவர் உள்ளத்தில் அன்பு இல்லை என்றால் இந்த உடம்பு பயனற்ற எலும்புக் கூடுதான். ஒருவர் அன்போடு வாழவில்லை என்றால் அது பிண வாழ்வு என்று குறிப்பிடுகிறார்.

**அன்பையும் அறத்தையும் உடைய குடும்பம்**

ஒரு குடும்பத்தில் தலைவன் அறத்திற்கும், மனைவியானவள் அன்புக்கும் இலக்கணமாகச் சொல்லப்படுகின்றனர். குடும்ப வாழ்வை செம்மையாக வாழ்வதற்கு மூன்று அடிப்படை தேவைகள் இருக்கின்றன. உணவு, உடை, உடைவிடம் ஆகியன மிக இன்றியமையாதவை ஆகும். இவை அனைத்தையும் ஒருங்கே அமைத்துக்கொள்ள ஒரு மாளிகை தேவை அந்த மாளிகைதான் குடும்பம் எனப் புறநானூறு உணர்த்துகின்றது. மேலும் திருவள்ளுவர் பார்வையில் மனிதன் தன் வாழ்நாளில் அறத்தின வழியே வாழ்வதற்கென சொல்லப்பட்டிக்கின்ற முறைப்படி வாழ்பவன் தெய்வத்திற்கு இணையானவனாகப் போற்றப்படுகின்றான் என்பதனை,

**"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான்உறையும்**
**தெய்வத்துள் வைக்கப் படும்."**

என்ற குறள் வழி உரைக்கின்றார்.

**அன்பால் ஆளுமை செய்தல்**

உறவினர் நினைத்தால் தும்மல் வரும் என்பது உலக வழக்கு ஆனால் தலைவன் மீது அளவு கடந்த அன்பு வைத்திருந்த தலைவி இல்வாழ்க்கையில் இருவரும் ஈடுபடும் பொழுது தலைவனுக்கு தும்மல் வந்தது தலைவியோ இயல்பாக வாழ்க வாழ்க என வாழ்த்தினாள். பின்னர் தலைவி தான் அருகில் இருக்கும் பொழுது வேறு எவர் உன்னை நினைக்கின்றனர் என தலைவி வருந்தினாள் என்பதை,

**"வழுத்தினாள் தும்மினேன் ஆக அழித்தழுதாள்**
**யார் உள்ளித் தம்மினீர் என்று."**

என்ற குறள் வழி வள்ளுவர் அன்பின் திறத்தை எடுத்துக் கூறுகின்றார்.

**அறமும் அன்பும்**

அறம் என்கிற அமைப்பு முறைக்கும், அன்பு சார்புடையது, அடிப்படையானது, அறத்தின் மற்றொரு கூறான வீர வாழ்க்கைக்கும் அன்பே துணையாக நிற்கிறது.

**"அறத்திற்கே அன்புசார் யென்ப அறியார்**
**மறத்திற்கு அ∴தே துணை."**

என்ற குறள் வழி அறம் முழுமை கூறன்று, அது மரம் போன்றது பல கூறுகள் சேர்ந்த ஒன்றே மரம், அறமும் பல கூறுகள் சேர்ந்த ஒன்று மரக்கூறுகளுள் சிறந்தது வேர், அறக் கூறுகளுள் சிறந்தது அன்பு அறத்துக்கு வேர்போன்றது அன்பு என வள்ளுவர் கூறுகின்றார்.

**முடிவுரை**

மனித வாழ்வின் வெற்றிக்கு அடிப்படைக் காரணம் அன்பு ஆகும். அன்பினை அனைவரிடமும் காட்ட வேண்டிய ஒன்று, அன்பு என்ற வெள்ளத்தை எந்த தாழ்போட்டும் தடுத்து நிறுத்த முடியாது, உலகில் மக்கள் இன்பத்தோடு சிறப்பாக வாழ்வதற்குக் காரணம் அன்பு ஆகும். இவ்வுலகில் மனிதர்கள் அனைவரும் அன்போடு வாழ்ந்தால் அவர்கள்

E-ISSN: 2581-7140

Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

அனைவரும் அனைத்து வகையான செல்வங்களைப் பெற்று மகிழ்ச்சியுடன் வாழ முடியும் என்பதை இக்கட்டுரை வழி அறிய முடிகிறது.

**பார்வை நூல்கள்**

1. மு. வரதராசனர் - திருக்குறள் தெளிவுரை.
2. சுந்தாந்த பாரதியார் - திருக்குறளின்பம்.
3. திரு.வி.கலியாணசுந்தரனார் (உ.ஆ) – திருக்குறள் விரிவுரை அறம்.
4. கி.நாகராஜன் - உளவியல் நோக்கில் கற்றலும் மனித மேம்பாடும்.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com



# உழவர் குடியே உயர்ந்த குடி

## Agriculturalists are the Lofty Society

**சு.சிவச்சந்திரன்,** உதவிப் பேராசிரியர்,
தமிழ்த்துறை, மதுரை காமராசர் பல்கலைக்கழக உறுப்புக் கல்லூரி, திருமங்கலம்.

## Abstract

*The present article decodes the importance of agriculture and the people who are doing are the one's care much for the society. Valluvar gave much more importance to agriculture and he had praised in "Thirukkural". All beings in the world live by food. The major part of beings in the world are herbivorous; they need the plant kingdom to survive themselves. Humans, mainly rely on rice, wheat, barley, grains cereals and nuts have to do agriculture and a very few of them who care society are doing agriculture to give food to others. The qualityof doing such business is a lofty one compared to any other business. The high qualities of agricultural people are glorified in this article through the evidences taken from kurals. Therefore, the paper decodes the values of agriculture.*

**Keywords:** Agriculturalists, Lofty Society, *Thirukkural*

**முன்னுரை**

உலக உயிரினங்கள் எல்லாம் உணவினை முதன்மையான பொருளாகக் கொண்டு உயிரினை உயிர்ப்பித்துக் கொள்வதற்கு ஆதாரமாக இருக்கின்றன. கரடுமுரடான காலங்களில் உணவினை இயற்கையின் மடியிலிருந்தே கிடைக்கப் பெற்றன. சில இடங்களில் மிகுதியும், சில இடங்கிளல் குறைவாகவும் கிடைத்தன. மற்ற விலங்கினங்களில் இருந்து சிறிது மாற்றம் கொண்டு சிந்தித்து வாழ எண்ணிய மனித இனம் தன்னுடைய உணவினைத் தானே உற்பத்தி செய்து கொள்ள இயற்கையிடம் பாதுகாத்துக் கொண்டு சிறுக சிறுக வேளாண்மை உருவானது. மண்ணைக் கிளர்ந்து செடி, கொடிகளை வளர்த்து உணவினை உற்பத்தியினைப் பெருக்கிக் கொண்டான். பழங்காலம் தொட்டு பல்வேறான தொழில்கள் முதன்மை பெற்று வந்தாலும் உழவுத் தொழில் முதன்மையானத் தொழிலாக ஏற்றம் பெற்றது.

**உலகமும் உணவும்**

உலகில் உள்ள மனித இனங்கள் மூலம் மற்ற உயிரினங்கள் வரை உயிர் வாழ்வதற்கு உணவு என்பது அடிப்படை. இவை இல்லாமல் வாழ்வது அரிது. எவ்வளவோ விஞ்ஞான உலகமயம் ஆனால் கூட பசி என்பது எல்லா உயிர்களுக்கும் பொதுவானது. அவ்வை பாட்டிக் கூட பசி வந்தால் பத்தும் பறந்து போகும் என்று கூறியுள்ளார். பசி என்று வந்து விட்டால் அனைத்து விதமான செயல்பாடுகளும் நின்று விடும். அதனால் தான் வள்ளுவர் உலகங்கள் பல தொழில்களை முதன்மையாகக் கொண்டு சிறப்புற்று விளங்கினாலும் தனக்குப் பசி என்று வந்துவிட்டால் உணவிற்காக அலையும் நிலை ஏற்படும். இதனை,

> **"சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம் அதனால்**
> **உழந்தும் உழவே தலை" (குறள்.1031)**

என்று திருவள்ளுவர் உலகமே ஏரின் பின்பு தான் செல்ல வேண்டும் என்று குறிப்பிடுகிறார்.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

உலகில் உள்ள உயிர்கள் எல்லாம் உயிர் வாழ்வதற்கும், உழவுத் தொழிலைத் தவிர்த்து பிறத்தொழில்களை புரிகின்றவர்க்கு உழவுத் தொழிலால் உண்டாகின்ற உணவே அவர்கள் உயிர் வாழ்வதற்கு முதன்மையாக இருப்பதினால் உலகம் இயங்குவதற்கு அச்சாணியாக விளங்குவதை,

**"உழுவார் உலகத்தார்க்கு ஆணி அஃதாற்றாது**
**எழுவாரை எல்லாம் பொறுத்து" (குறள்.1032)**

என்று குறிப்பிடுவதைக் காணலாம்.

**உழுவாரைத் தொழுதல்**

வான்மழை உலகில் உள்ள உயிர்களை எல்லாம் வாழ்வதற்கு வழி வகை செய்கின்றதோ, அதே போன்று ஏரினைக் கொண்டு உழவுத் தொழிலைச் செய்து வாழ்கின்ற உழவர்கள் தான் மட்டும் உண்டு வாழாமல் பிற உயிர்களையும், உயிர் வாழ வைக்கின்றனர். இதனால் தான் திருவள்ளுவர்,

**"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாம்**
**தொழுதுண்டு பின்செல் பவர்" (குறள்.1033)**

என்ற அடிகளில் உழவுத் தொழிலைச் செய்யக் கூடிய உழவர்கள் செழிப்பாகவும், சிறப்பாகவும் வாழ்வர், மற்றத் தொழிலைச் செய்யக் கூடியவர்கள் அவர்கள் தரக்கூடிய உணவினை உண்டு பின் தொடர்ந்து செல்வர் என்று குறிப்பிடுகின்றார்.

**அரசரும் உழவரும்**

நாட்டை ஆளக்கூடிய அரசர்களும், நாட்டின் தன்மைகள் சிறந்து விளங்க வேளாண்மை சிறந்து விளங்க வேண்டும். ஆதலால் உழவர்கள் தன்னுடைய தொழிலைச் சிறப்புற நடத்தினால் தான் அரசன் நேர்மையான ஆட்சியினைத் தரமுடியும். அதனால் தான் திருவள்ளுவர்,

**"பலகுடை நீழலும் தங்குடைக்கீழ்க் காண்பர்**
**அலகுடை நீழ லவர்" (குறள்.1034)**

என்ற அடிகள் மூலம் பல மன்னர்களால் ஆளப்படும் குடிமக்கள் ஆனாலும் அவர்கள் எல்லோரும் உழவர்களின் உழவுப் பயனைக் கொண்டே உயிர் வாழ வேண்டியவர்களாக இருக்கின்றார்கள். இவ்வாறு உழவுத் தொழில் செம்மையுற நடைபெற்றால் தான் ஒரு அரசனின் கொற்றக்குடை சிறப்புற விளங்கும். அதனாலே மன்னன் வாழ்வாங்கு வாழ்த்துவர்.

**உழவரும் இரப்பாரும்**

உழவர்கள் வயல்களில் மண்ணை பலவாறு பண்படுத்தி விதைத்ததை விளையக் கூடிய வகையில் செய்து வைப்பார்கள். களத்து மேட்டில் கதிர்களை அடித்து அதில் வரக்கூடிய நெல்மணிகளை தான் மட்டும் பயன்படுத்தாது பிறருக்கு பகிர்ந்து கொடுக்கும் குணத்தினைக் கொண்டவர்கள். யாருக்கும் இல்லை என்று சொல்லாத வன்மை உடையவர்கள். அதுபோல நெல்மணிகள் குவிந்து கிடக்கும் இடத்திற்கு வரக்கூடிய இரவலர்களுக்கு ஒருபோதேனும் இல்லை என்று சொல்லாமல் வாரி வழங்கும் செம்மைப் பண்புடையவர்கள் உழவர்கள். பலவிதமான தொழில்களைப் புரியக் கூடியவர்கள் இரவலர்களாக இருப்பர். இதனை,

**"இரவார் இரப்பார்க்கு ஒன்றுஈவர் கரவாது**
**கைசெய்தூண் மாலை யவர்" (குறள்.1035)**

உழவர்கள் தம் கைகளினாலேயே உழவுத் தொழிலைச் செய்து உணவுப் பொருள்களை விளைவித்து உண்ணும் இயல்பினைக் கொண்டவர்கள் உழவர்கள். தனக்காக ஒருபொழுதும் யாரிடமும் சென்று இரக்கமாட்டார்கள். தம்மிடம் இரந்து வருபவர்களிடம் எதையும் ஒளிக்கும் பண்பு இல்லாதவர்கள் வேண்டிய அளவு இரவலர்களுக்கு கொடுத்து அனுப்புவர்.

E-ISSN: 2581-7140

Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**உழவும் துறவும்**

உலகத்தில் உழவுத் தொழில் என்பது இடைவிடாது நடைபெற்றால் தான் நாடு நலம்பெறும். அவ்வாறு அத்தொழில் நடைபெறவில்லை என்றால் உண்மைத் தன்மை இழந்து பொய்யும் வழுவும் தோன்றும். ஆதலால் உழவர்கள் உழவுத் தொழிலை இடைவிடாயது செய்வர். இதனை,

> **"உழவினார் கைம்மடங்கின் இல்லை விழைவதூஉம்**
> **விட்டேம் என்பார்க்கும் நிலை" (குறள். 1036)**

உழவர்களுக்கு உழவுத் தொழிலை எக்காரணங் கொண்டேனும் செய்ய முடியாத நிலை ஏற்படுமானால் விருப்பங் கொள்கின்ற எல்லாப் பற்றையும் துறந்து விட்டோம் என்று கூறிவிடும் துறவிகளுக்கும் நிலைத்த வாழ்வு இல்லாமற் போய்விடும் என்று திருவள்ளுவர் உழவுத் தொழிலே உயர்ந்த தொழிலாக இருப்பதாக அறிவுறுத்துகிறார்.

**நிலத்தைப் பண்படுத்துதல்**

பல்வேறு நிலைகளில் இருந்த நிலத்தினைச் செம்மைப்படுத்தி அதனைத் திருத்திப ண்பட்ட நிலமாக ஆக்கிய பின்பே வேளாண்மை நிலமான மாற்றி பயிரினை இடுவர். 'அகல உழுவதை விட ஆழமாக உழுவதே மேல்' என்ற பழமொழிக்கு ஏற்ப உழவர் 'சித்திரை மாதத்து உழவு பத்திர மாத்மிரத் தங்கம்' என்று உழவர் பெருமக்கள் கூறுவர். இக்காலங்களில் உழவு மேற்கொண்டால் காலச்சூழ்நிலைக்குத் தக்கவாறு மண்ணும், களைகளும் இல்லாமல் போகும் என்று வழக்கத்தினைத் கொண்டு உள்ளனர்.

> **"தொடிப்புழுதி க.்.சா உணக்கின் பிடித்தெருவும்**
> **வேண்டாது சாலப் படும்" (குறள்.1037)**

என்ற அடிகளில் உழவன் தன் நிலத்தினை ஒரு பலப்புழுதியைக் கால்பலமாக ஆகுமாறு பலமுறை உழுது அதனைக் காயவிடுவோமேயானால் நிலத்தில் ஒரு பிடி அளவுக்கூட எருபோட வேண்டிய இன்றி விதைக்கக் கூடிய விதையானது பயிராகச் செழித்து வளரும் தன்மை உடையதாக இருக்கும் என்பதை விளக்குவதாக உள்ளது.

**எரு இடுதலும் காத்தலும்**

உழவு செய்து நிலத்தில் வளத்தை உருவாக்குதலை விட ஆடு, மாடுகளின் கிடை வைப்பது மேல். அதனுடைய எருக்களால் பயிரின் தன்மையும், நோய் இன்மையும், பயிர்களின் நெல்மணிகளின் திரட்சியின் தன்மையும், உபரிகளும் அதிகமாகவும் கிடைக்கும். அதே போன்று பயிரின் ஊடே இருக்கின்ற களைநீக்கி, நீர் பாய்ச்சி விளைவிப்பதே உழவர்களிடம் காணப்படுகின்ற நிகழ்வு காலம் காலமாகத் தொடர்ச்சியாக நடைபெறுகின்ற நிகழ்வாக இருக்கின்றது.

**முடிவுரை**

திருவள்ளுவர் திருக்குறளில் 1330 பாடல்களை எழுதினாலும் அவற்றில் சொல்லாத செய்திகளே இல்லை என்று சொல்லலாம். அதில் 'உழவு' என்னும் அதிகாரத்திலல் உள்ள 10 பாடல்கள் முழுவதும் உழவுத் தொழிலின் தன்மையே வெளிப்படுத்துகிறார். உலகத்தில் எத்துணைத் தொழில் முறைகளை மனிதன் உருவாக்கினாலும் கூட உழவுத் தொழிலுக்கு ஏற்ற தொழில் இல்லை என்று சொல்லலாம். "ஏர் முனைக் இங்கு நிகர் ஏது" என்ற பழமொழிக்கு ஏற்ப உழவர்களின் வாழவு சிறந்து விளங்கினால் தான் மன்னன் ஆட்சி மகத்துவம் பெறும் இல்லை என்றால் மடிந்து போகும். உழவர்களின் உழைப்பையும், அவர்களின் உயர்வான குணங்களையும், நிலத்தினை வளப்படுத்தும் முறைகளையும், காதல் முறைகளையும் கூறுவதைக் காணலாம். இன்றைய விஞ்ஞான முறையில் இயற்கையாக உழவு செய்து இயற்கை உணவினை உட்கொண்ட மனிதன் இன்றைய நாளில் செயற்கை முறையில் உண்டான உணவுகளை உட்கொண்டு அள்ளல் படுதலைக் காணலாம்.

E-ISSN: 2581-7140

Special Issue I, August-2019

Available at: www.ijtlls.com

இயற்கையில் விளைந்த உணவு தலைசிறந்ததாக விளங்குகின்றதோ அதே போன்று எத்தொழில்கள் வந்தாலும் உழவுத் தொழிலுக்கு நிகர் இல்லை.

**பயன்பட்ட நூல்கள்**

1. நெடுஞ்செழியன், இரா, திருக்குறள் தெளிவுரை, நாவலர் நெடுஞ்செழியன் கல்வி அறக்கட்டளை, சென்னை -18. (ஐந்தாம் பதிப்பு – 2011)

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com


# திருக்குறளில் தகவல் தொடர்பு

## Communication in Thirukkural

**மு.சுமதி,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரி (தன்னாட்சி), சிவகாசி.

**Abstract**

*The article evinces on the mode of communication and the need of communication as revealed in "Thirukkural". Communication is mode of sharing our thoughts and wishes with others. It is a sort started from body language and through the later developed eight modes of ways, Language and devices. These are elaborated through the evidences from the kurals in the "Thirukkural". "Face is the index of mind", "Eyes are the identity of your words"; these are not the mere sayings but the truth revealing on the modes of communication in human life. "Thirukkural" evinces about it in detail on the power of speech, discourse, oration, diplomatic speech of Ambassodors etc. Therefore, the paper decodes the modes of communication and its spheres from the verses of "Thirukkural"*

**Keywords:** Communication, Thirukkural, Discourse, Power of communication

**முன்னுரை**

நம்முடைய கருத்துக்களைப் பிறரிடம் பகிந்து கொள்வதற்குத் தகவல் தொடர்பு பெரும் பங்காற்றுகிறது. அஃறிணை உயிர்கள் முதல் ஆறறிவு உயிர்கள் வரை அனைவரும் தங்கள் தேவையைப் பூர்த்தி செய்து கொள்ள தகவல்களைப் பரிமாறிக் கொள்கின்றனர். நம் உடல் மொழியில் காணப்படும் எண்வகை மெய்ப்பாட்டின் மூலமும், எழுத்துக்கள், கருவிகள் மூலமாகவும் தகவல் தொடர்பு கொள்ளலாம் அவற்றைத் திருக்குறள் வழிக் காணபோம்.

**உடல் மொழி**

மனிதன் தன்னுடைய கருத்துக்களை பிறருக்குத் தெரிவிக்க தன் உடலையே ஒரு ஊடகமாகப் பயன்படுத்தி இருக்கின்றான். உடலின் பாகங்களான முகம், கண், உதடு, புருவம், கை, நாக்கு போன்றவைகளைப் பயன்படுத்தி பிறருக்கு தகவலைத் தெரிவித்து இருக்கிறான், சைகையின் மூலம் ஆதிமனிதன் முதல் இக்காலம் வரை தகவல்தரும் ஊடகமாகச் சைகைகளைப் பயன்படுத்துகிறான், நம் தாய் மொழியைத் தவிர பிற மொழிகள்பேசுபவரைப் பார்த்தால் அவரிடம் நாம் சைகைகள் மூலமாகவே நம் கருத்துக்களைப் பகிர்ந்து கொள்கிறோம்.

**முகம்**

மனித முகம் உள்ளக் கருத்துக்களையும், உணர்ச்சிகளையும் வெளிக்காட்டும் உன்னத தகவல் ஊடகமாகும்.

**"மோப்பக் குழையும் அனிச்சம் முகம் திரிந்து**
**நோக்கக் குழையும் விருந்து."** **(குறள்.90)**

என்ற குறளில் அனிச்ச மலர் மோந்தவுடனே வாடி விடும், முகம் மாறுபட்டு நோக்கிய உடனே விருந்தினர் உள்ளம் வாடிவிடுவார்கள்.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**"அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்**
**மடுத்தது காட்டு முகம்." (குறள்.706)**

ஒருவர் நம்மிடம் கடுத்ததனை அவரது முகமே காட்டிவிடும். பேச்சு மொழியைத் தேவையில்லை என்கிறார் வள்ளுவர் எனவே, முகம் எனபது தகவல் தொடர்பில் இன்றியமையாத இடத்தைப் பெறுகிறது.

**கண்கள்**

கண்கள் தகவல் பரிமாற்றத்தில் குறிப்பு மொழியாகக் காணப்படுகின்றன. வாய்ச் சொற்களைப் பயன்படுத்தாமலேயே தன் மனத்தில் உள்ளக் கருத்துக்களைக் கண்களின் மூலம் வெளிப்படுத்த முடியும். திருக்குறளில் காமத்துப்பாலில் காதலர்கள் தம் கண்களாலேயே உள்ளக் கருத்துக்களை வெளிப்படுத்துவர் என்று வள்ளுவர் கூறியுள்ளார்,

**"கண்ணொடு கண்ணினை நோக்கொக்கின் வாய்ச்**
**என்ன பயனும் இல." (குறள்.1100)**

என்ற குறளில் காதலர்களைத் தவிர பிறருக்கு இம்மொழி புரியாது என்று தலைவன் தலைவி தம் கண்களின் மூலம் தகவல் பரிமாறும் உத்தியைக் குறிப்பிட்டுள்ளார். இதனை தொல்காப்பியர்,

**"நாட்டம் இரண்டும் அறிவுடம் படுத்தற்குக்**
**கூட்டி யுரைக்கும் குறிப்புரை யாகும்." (தொல்.நூ.5)**

தலைவனும் தலைவியும் ஒரே நேரத்தில் ஒருவரையொருவர் விருப்பத்தோடு நோக்கி உள்ளத்தில் இருக்கும் காதலைக் கண்கள் வழி வெளிப்படுத்துவர் அதன் மூலம் களவில் கண்கள் ஒரு சிறந்த தகவல் தொடர்பு ஊடகமாக உள்ளதை உணர முடிகிறது.

**"பகைமையும் கேண்மையும் கண்ணுரைக்கும்**
**வகைமை உணர்வாப் பெறின்." (குறள்.709)**

பகைவர்களையும், நண்பர்களையும் நாம் அவர்களின் கண்களைப் பார்த்தே கண்டறிந்து விடலாம், பேச்சு மட்டும் அல்ல கண்களும் ஒருவரது குணங்களை அறிவிக்கும் கருவியாக அமையும்,

**"குறிப்பின் குறிப்புணரா வாயின் உறுப்பினுள்**
**என்ன பயத்தவோ கண்." (குறள்.705)**

ஒருவர் ஒரு கருத்தைக் குறிப்பால் காட்டிய போது, அதனை உணராமலிருந்தால், உடலுறுப்புக்களுள் கண் என்பது பயனற்றது என்று செயலற்றவர்களின் கண்களை வள்ளுவர் வன்மையாகக் கண்டிக்கிறார்,

**"ஒற்றும் உரைசான்ற நூலும் இவையிரண்டும்**
**தெற்றென்க் மன்னவன் கண்." (குறள்.581)**

தன் நாட்டின் ஒற்றர்களுக்கு இணையானது வேந்தனது கண் என்று வள்ளுவர் கூறியுள்ளார். ஏனென்றால் ஒற்றர்களே பிறநாட்டில் உள்ள தகவல்களை மன்னரிடம் அறிவிப்பர், எனவே வள்ளுவர் ஒற்றர்களும் அறநூலும் மன்னர் தனக்குரிய இரு கண்களாகக் கொள்ள வேண்டும் என்று கூறியுள்ளார்.

**தூதுவரின் சொல்லாற்றல்**

தகவல் தொடர்பில் இன்றியமையாதது சொல்லாற்றலே, ஒரு நாட்டின் மன்னர் பிற நாட்டில் உள்ள நிலையைத் தன் தூதுவனின் மூலமாகவே அறிவான் திருக்குறளில் தூது உரைப்பவனுக்கு மூன்று இன்றியமையாத தகுதிகளைத் திருவள்ளுவர் கூறியுள்ளார்,

**"அன்பறிவு ஆராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்கு**
**இன்றி யமையாத மூன்று." (குறள்.682)**

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

தன் தாய் நாட்டின் மீது அன்பும், தெளிவான் அறிவும், எதையும் ஆராய்ந்து பேசும் சொல் வன்மையும் தூது உரைப்பவனுக்குரிய தகுதிகாளாகும். இத்தைய தகவல் தொடர்பினைக் கம்பர் சுந்தரகாண்டத்தில் அனுமனின் மூலம் தூது சொல்பவரின் இலக்கணத்தைக் கூறியுள்ளார். கம்பராமாயணத்தில் அசோக வனத்தில் சீதையைக் கண்ட செய்தியை அனுமன் இராமனிடம் சொல்கிற போது தகவல் பரிமாற்றத்தின் அத்தனை நுட்பங்களும் அமையுமாறு பாடல் வடிவமைக்கப்பட்டுள்ளது.

**"கண்டனென், கற்பினுக் கணியைக் கண்களால்**
**தெண்திரை அலைக்கடல் இலங்கைத் தென்நகர்**
**அண்டர் நாயக இனி, துறத்தி ஐயமும்**
**பண்டுள துறரும் என்று அனுமன் பன்னுவான்.**

கற்பினுக்கணியான சீதையைத் தன் கண்களால் இலங்கைத் தென் நகரிலே கண்டேன் ஐயத்தையும், துயரத்தையும் நீக்குக என்று இராமனிடத்தில் சரியாகச் செய்தியைக் கூறியதனால் தூதுவானாகிய அனுமன் 'சொல்லின் செல்வன்' என்று புகழ்ப்படுகிறார். எனவே தகவல் தொடர்பில் சொல்லாற்றல் என்பது இன்றியமையாத கருவி என்பதை அறிய முடிகிறது.

**சொல்வன்மை**

தன் மனதில் உள்ள கருத்துக்களைப் பரிமாறும் போது பிறர் மனம் நோகாதவாறு பேச வேண்டும். பயனில்லாத சொற்கள் தகவல் பரிமாற்றத்தை தடைபடச் செய்யும் பயனுள்ள சொற்களும் அதனால் உதவாமல் போய்விடும் என்பதனை,

**"இனிய உளவாக இன்னாத கூறல்**
**கனியிருப்பக் காய்கவர்ந் தற்று." (குறள்.100)**

எனவே, தகவல் பிரிமாற்றத்தின் போது சரியான சொல்லைப் பயன்படுத்த வேண்டும் என்று வள்ளுவர் அறிவுறித்தியுள்ளார்.

**முடிவுரை**

இவற்றான், கருவிகள், நிறைந்த இக்காலகட்டத்தில் மட்டுமல்லாமல் தகவல் பரிமாற்றம் அக்காலகட்டத்திலிருந்தே இயற்கையோடியைந்த மக்களின் முகம், கண்கள், சொல்லாற்றல் இவற்றின் மூலம் வெளிப்பட்டுக் காணப்பட்டுள்ளதை திருக்குறளின் வழி அறிய முடிகிறது.

**பயன்பட்ட நூல்**

1. அ. மாணிக்கம், *திருக்குறள்*, தென்றல் நிலையம்.
2. *திருக்குறள் புதிய உரை*, புலியூர்க்கேசிகன், பூம்புகார் பதிப்பகம், சென்னை.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

# அன்பின் வழியது உயிர்நிலை

# The Path of Love is of High State

**மு.செல்லமுத்து,** முனைவர்ப்பட்ட ஆய்வாளர்
தமிழியல் துறை, தமிழியற்புலம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை -21.

## Abstract

*The article evinces on virtues of Love ascribed in "Thirukkural". It is a treasure of moral ideas. Scholars all over the world praise it for its diadactic preaching for to lead a good life. Human life is suffering by vices and needs refreshment to resurrect itself to achieve the topmost quality. It ascribes Love on others can lead any individual to become a man of god by his leadership skills; of it love or compassion is the chief virtue an individual has to keep in his life to get a lofty state in life. "Thirukkural" is archive of such virtues and therefore, the paper decodes and states that the path of love is a high state in life.*

**Keywords:** Path of Love, High State in Life, Kural

தமிழ் இனத்தின் நற்சிந்தனையில் விளைந்த சிறப்பும் தூய்மையும் வாய்ந்த இலக்கியப் பெட்டகம் *திருக்குறள்* ஆகும். எனவே தான் தமிறிஞர் பலரும் ஒப்பற்ற உலகப் பொதுமறையை உருவாக்கிய மூதறிஞர் வள்ளுவரை மனதார வாழ்த்தி மகிழ்கின்றனர். இத்தகைய படைப்பில் மக்களுக்கான மேலாண்மைப் பண்புகள் பலவற்றை வள்ளுவர் தம் குறளில் மிகநேர்த்தியாக சிறந்த சொல்லாடலில் உணர்த்திச் சென்றுள்ளார். காலந்தோறும் மானுட இனம் தமக்குள் போட்டியும் பொறாமையும் கொண்டு கணக்கற்ற தீமைகளைச் செய்து தம் தலைமுறைகளுக்கும் அதனை விளைவித்துச் செல்கிறது. ஆரோக்கியமான வாழ்வியலுக்குத் தேவையான அன்புமொழியால் நற்பண்புகளை வளர்த்துக்கொள்ளும் எண்ணம் அறவே இல்லாமல் போய்விட்டன. இன்றைக்கு உலகநாடுகள் மனிதர்களில் தலைசிறந்தவர்களை கண்டறிந்து அன்பிற்காகவும், அமைதிக்காகவும் மிக உயரிய விருதுகளை அவர்களுக்கு அளித்துக்கொண்டிருக்கின்றன. கோடிக்கணக்கான மக்கள் வாழும் இவ்வையகத்தில் ஓரிருவர் மட்டுமே தம் வாழ்வில் எல்லா உயிர்களிடத்திலும் அன்புமொழியால் உரையாடி மகிழ்ந்து, கருணை உள்ளத்தால் தடம் பதித்துள்ளனர். ஏனையோர் தமக்கு வேண்டியவர்களிடத்தில் அன்பு செலுத்துவதும், அன்பு செலுத்துவது போல் நாடகத்தை அரங்கேற்றுவமாக தம் சுயத்தை வெளிப்படுத்திக் கொண்டிருக்கின்றனர். எந்நாளும் சந்தர்ப்பவாதிகளாக அல்லாமல் அன்பைப் போதிப்பவர்களாக மனிதர்கள் மாறவேண்டும் எனப் பல்வேறு மகான்களும், எண்ணற்ற மதங்களும் தொடர்ந்து வலியுறுத்தி வருகின்றன. அதனடிப்படையில் எல்லா உயிர்களிடத்திலும் அறம் செய்து பழக்கப்படாத மானுட வர்க்கத்தின் தலைமைப்பண்பில் வீற்றிருப்பவர்களுக்கு அன்புமொழியால் வள்ளுவர் வலியுறுத்திய நற்கருத்துக்களை சுட்டிக்காட்டி தலைமைப்பண்பின் தகுதிகளை எடுத்துரைப்பதாக இக்கட்டுரை அமைகின்றன.

**"அன்பென்று கொட்டு முரசே – மக்கள்**
**அத்தனை பேரும் நிகராம்"**

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

என மகாகவி பாரதியார் மானுட சமூகத்தை நோக்கி ஒற்றுமைக்குரலை தம் கவிதைக்கனலால் உணர்த்திச் சென்றிருக்கிறார். இவ்வாறு உணர்த்துவதன் நோக்கம், அன்பு என்னும் ஒற்றுமையை வையத்தில் வாழுகின்ற மனிதர்களுக்குள் மிகுதியாக காணமுடிவதில்லை. நற்பண்போடு மனிதஇனம் தம்மை நாளும் வெளிப்படுத்த அன்பெனும் ஆயுதத்தாலேதான் முடியும் என்பதை உறுதியாக உணரவேண்டும். சக மனிதர்கள் இவ்வுலகம் எல்லா உயிர்களுக்குமானது என்று உணர்ந்து யாவற்றிடமும் அன்பு செலுத்த வேண்டும். எனவேதான் 'வள்ளலார் வாடிய பயிரை கண்டபோதெல்லாம் வாடினேன்' என மனம் நொந்தார். உலகப்பொதுமறையாம் வள்ளுவமும்,

**"அன்பகத்து இல்லா உயர்வாழ்க்கை வன்பாற்கண்**
**விற்றல் மரம்தளிர்த் தன்று" (குறள்.78)**

என்ற குறளில், மனத்தில் அன்பு இல்லாத உயிர் இல்லறத்தில் ஈடுபட்டு வாழ்வது என்பது வலிய பாறை நிலத்தில் ஈரம் வற்றி, உலர்ந்த மரம் தளிர்த்தாற் போன்றதாகும் எனக் குறிப்பிட்டுள்ளது.

**"அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு**
**என்புதோல் போர்த்த உடம்பு." (குறள்.80)**

என்ற குறளானது, அன்பின் வழி ஒழுகுவாருடைய உடம்புகளே உயிர் நிலைத்து வாழும் உடம்புகளாகும். அது இல்லாதவர்க்குரிய உடம்புகள் எலும்பைத் தோலால் போர்த்து மூடி வைத்துள்ள வெற்றுடம்புகளேயாகும் என்கிறது. எனவே அன்பில்லாதவர்களால் மானுடத்திற்கும், மனதப்பிறவி எடுத்ததற்கும் எவ்விதப் பயனுமில்லை எனக் குறிப்பிட்டுள்ளார் வள்ளுவர். இதே கருத்தினை,

**"புறத்துஉறுப்பு எல்லாம் எவன்செய்யும் யாகதை**
**அகத்துஉறுப்பு அன்பு இலவர்க்கு." (குறள்.79)**

என்ற குறளிலும் விளக்கியுள்ளார். அதாவது, உடம்பின் உள்ளுருப்பாகிய அன்பு இல்லாதவர்களுக்கு வெளியிலுள்ள மற்ற உறுப்புகளால் எந்தப் பயனும் உண்டாகது என்கிறார். அதாவது, கண்ணுக்கு புலப்படுவது மட்டும் உடல் உறுப்புகள் என எண்ணிவிடாமல், உள்ளிருக்கும் மனத்தினையும் தம் உறுப்பாக எண்ணி அதனை ஆக்கத்திற்கான செயல்களுக்கு பயனிக்குமாறு செய்யவேண்டும் என்கிறார்.

**"உடையர் எனப்படுவது ஊக்கம் அஃதில்லார்**
**உடையது உடையாரே மற்று." (குறள்.591)**

என்ற குறளானது, ஒருவர் செல்வமுடையவர் என்று சொல்ல சிறந்த காரணமாக இருப்பது ஊக்கம். ஊக்கம் இல்லாதவர் வேறு எதைப் பெற்றிருந்தாலும் உடையவர் ஆவரோ என்கிறார் வள்ளுவர். எனவே சகமனிதர்களுக்குள் சிறந்த தலைமைப் பண்பினைப் பெற ஊக்கம் என்பது முக்கியக் காரணியாக அமைகின்றன எனக் கருதலாம்.

**"அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையோடு**
**ஐந்துசால்பு ஊன்றிய தூண்" (குறள்.983)**

என்ற குறளில், மனிதத்தன்மையின் முதற்படி அன்பு என்றும், ஒருவர் காட்டுகின்ற அன்பு அவருக்கு தம் வாழ்வில் மீண்டும் கிடைக்கும். நாண் என்பது தவறான செயல்களை செய்வதற்கு வெட்கப்பட்டு அவற்றை ஒதுக்குதல். ஒப்புரவு என்பது பெரியோர்களிடம் மதிப்பினை உணர்த்துகின்றன. கண்ணோட்டம் என்பது நாம் பிறப்பால் வெளிப்படுத்தும் கருணையைக் காட்டுகிறது. வாய்மை என்பது உண்மைத்தன்மையான தலைமைப்பண்பிற்கு அழகூட்டுவனவாக இருக்கின்றன என விளக்கியுள்ளார்.

மேலும், ஒவ்வொரு மனிதரிடத்திலும் இறைத்தன்மை பொருந்தியுள்ளது என்பதனை அவன் ஆற்றும் வினையைக் கொண்டு பிறர் உணர்த்துவர் என்கிறார் வள்ளுவர். இதனை

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**“வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்**
**தெய்வத்துள் வைக்கப் படும்.” (குறள்.50)**

என்ற மேன்மையானக் குறளில் விளக்கியுள்ளார். எனவே மனிதா! இயற்கை தந்துள்ள வாழ்வதற்கான ஒரே வாய்ப்பை, மனத்துக்கண் மாசிலனாக வாழ்ந்து ஈந்து உவந்தளித்து, பல்லுயிர் ஓம்பி, பகுத்துண்டு செந்தாண்மைப் பூண்டு, உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல் எனச் சிந்தித்து, பழியஞ்சி, பண்பு காத்து வாழ்ந்தால், மனிதனும் தெய்வப் பிறவியாகக் கருதப்படுவான் என்பதில் தான் வள்ளுவரின் கருத்து மையம் கொண்டுள்ளது என்பதனை அனைவரும் உணரவேண்டும். ஏனெனில், இந்நற்பண்புகளையே நாடாளும் வேந்தருக்கும் அவன்கீழ் வாழ்வோருக்கும் வள்ளுவர் வலியுறுத்தியுள்ளார்.

தனக்குக்கீழ் செயல்படுபவர்களின் தனித்திறனை அறிந்து அவர்களுக்குரிய பணிகளை ஒதுக்கீடு செய்வது தலைமைக்குரிய தனித்திறனாகும். இதனை வள்ளுவர்,

**“இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து**
**அதனை அவன்கண் விடல்” (குறள்.517)**

என்ற குறளில் விளக்கியுள்ளார். எனவே இச்செயலை இம்முறையில் இவன் செய்து முடிப்பான் எனத் தெரிந்து அச்செயலை அவனிடம் மட்டுமே ஒப்படைக்க வேண்டும். இம்மதிநுட்பம் சிறந்த தலைமைப் பண்பிற்கான ஒன்றாகக் கருதலாம்.

**“கற்க கசடற கற்பவை கற்றபின்**
**நிற்க அதற்குத் தக” (குறள்.391)**

என்ற குறளானது, கல்வி கற்றவருக்கு சென்ற இடமெல்லாம் சிறப்பு என்று குறிப்பிடுவதோடு, எண்ணும் எழுத்தும் வாழும் மனிதர்களுக்கு இருகண்களைப் போன்றும், தம் உயிரைப் போன்றும் கருதவேண்டும் என வலியுறுத்துள்ளார். எனவே ஆறறிவு பெற்ற மனிதர்கள் யாவரும் ‘பிச்சைப் புகினும் கற்றல் நன்றே’ எனக் கருதி கல்வியால் வாழ்வின் உச்சத்தை அடைய முயற்சிக்க வேண்டும். தலைமைப்பண்பின் தலைசிறந்த தகுதியாக அவன் கற்ற கல்வியின் மேன்மையைக் கொண்டு விளக்கியுள்ளார் வள்ளுவர்.

**“எதிராதாக் காக்கும் அறிவினாற்கு இல்லை**
**அதிர வருவதோர் நோய்” (குறள்.429)**

என்ற குறளில், எதிர்காலத்தில் வரப்போகும் வினைகளை முன்னறிந்து செயலாற்றும் திறன் ஒருவர்க்கு இருந்தால்தான், அச்செயலின் இடர்பாடுகளை தவிர்க்க மிகச்சரியான முயற்சியினைச் செய்வர். இத்திறன் உயர்ந்த தலைமைப்பண்பிற்கும், உயிர்கள் நிலைபெறுவதற்கும் வழியமைக்கும் எனலாம்.

**“விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்துஇனிது**
**சொல்லுதல் வல்லார்ப் பெறின்.” (குறள்.648)**

என்ற குறளானது, ஒருவர் தான் சொல்லவேண்டியதை சரியான தருணத்தில் சொல்லக்கூடுமானால் அவர் உணர்த்தியபடி உலகில்லோர் செயல்படுவார்கள் என விளக்குகின்றன. எனவே நன்மை தீமைகளை உணர்த்தும் எச்செயலானாலும் சரியான காலமறிந்து வெளிப்படுத்துவது அவசியமானதாகும். வள்ளுவரும் இக்கருத்தினை தலைமைப்பண்பிற்கான தகுதிகளில் ஒன்றாகக் கருதியுள்ளார்.

**“ஆக்கமும் கேடும் அதனால் வருதாலால்**
**காத்துறும்பல் சொல்லின்கண் சோர்வு.” (குறள்.642)**

என்ற குறளானது, ஒருவருக்கு நன்மையும் அழிவும் தம் சொற்களால்தான் விளையும். ஆதலால் அத்தகைய சொற்களைக் கையாளும் போது தம் நாவினை சரியாகப் போற்றிப் பாதுகாத்து, சகமனிதர்களுக்கு துன்பம் நேராதவாறு இடம் பொருள் ஏவல் அறிந்து பேசவேண்டும் என்கிறது. இன்றைய மனித உறவுகளுக்குள் சகிப்புத்தனமை இல்லாமல்

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

போனதற்குக் காரணம், வார்த்தைகளைப் பிரயோகப்படுத்துவதில் ஏற்படும் மனக்கசப்பே எனலாம். எனவே மானுடம் பயனுற நற்சொற்களை விதைத்தால் தலைமுறைகள் தோறும் அன்புமொழியால் தம்மை ஆளக் கற்றுக்கொள்வார்கள். இச்சிந்தனையை முதலில் வயதில் முதிர்ந்ததவர்கள் நன்கறிந்திருந்தால் தான் இளைய சமுதாயம் கற்றும் கேட்டும் தம் சமூக வாழ்வியலில் பயன்படுத்தி மகிழ்ந்திருக்க வழியமைக்கும். இக்கருத்தியலையே வள்ளுவர் மேற்கண்ட குறளில் உணர்த்தியுள்ளார்.

**“அகன்அமர்ந்து ஈதலின் நன்றே முகன்அமர்ந்து**
**இன்சொலன் ஆகப் பெறின்.” (குறள்.92)**

என்ற குறளானது, முகம் மலர்ந்து இன்சொல் கூறுபவனாக இருக்கப்பெற்றால் மனம்மகிழ்ந்து பொருள் கொடுக்கும் ஈகையை விட நல்லதாகும் என விளக்குகின்றன. எனவே, தன்னைநாடி வரும் இரவலர்களுக்கு பொருள் கொடுப்பதை விடவும் அன்புமொழியாலும் புன்னகையாலும் தம் முகக்குறிப்பினை வெளிப்படுத்துவது ஆள்வோருக்கான நற்பண்பாகும் என வள்ளுவர் வலியுறுத்தியுள்ளார்.

**“பணிவுடையவன் இன்சொலன் ஆதல் ஒருவர்க்கு**
**அணிஅல்ல மற்றுப் பிற.” (குறள்.95)**

என்ற குறளானது, ஒருவன் கல்வி கேள்விகளிலோ, செல்வத்திலோ, பதவியிலோ எத்தனை பெரியவனாக இருந்தாலும் அவனுக்கு பணிவுடைமையும் இன்சொல்லும் முக்கிய அணிகலன்களாகும் என விளக்குவதோடு, மனிதர்களுக்குள் நல்ல உறவுகளை வளர்க்கவும் இவை வழிசெய்யும் என வள்ளுவர் உணர்த்தியுள்ளார். இக்கருத்து தலைமைப்பண்பிற்கு சரியான சான்றென தற்கால ஆளும் வர்க்கத்தினர் உணரவேண்டும்.

**“எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியர்**
**திண்ணியர் ஆகப் பெறின்.” (குறள்.666)**

என்ற குறளானது, தான் மேற்கொண்டிருக்கின்ற செயல்திட்டத்தின் மீது மனதை ஒருமைப்படுத்தி அன்பளிப்பு உணர்வோடு செயல்படுகின்ற தன்மை ஒரு தலைவனுக்குத் தேவையானதாக இருக்கிறது என்கிறார் வள்ளுவர். இன்றைய வியாபாரிகளும், பெரும் வணிகர்களும் வல்லுநர்களும் இக்கருத்தியலை கடைப்பிடித்து வாழ்வது அவர்களுக்கான பொருளாதாரத்துறையில் சிறந்தத் தலைமைப்பண்பினை அடையச் செய்யும் எனலாம்.

**“கலங்காது கண்ட வினைக்கண் துளங்காது**
**தூக்கம் கடிந்து செயல்.” (குறள்.668)**

என்ற குறளானது, தாம் ஏற்றுக்கொண்ட தொழிலை மனந்தளராமல், காலம் தாழ்த்தாமல், மனம் கலங்காமல் பெரும் முயற்சியோடு செய்யவேண்டும். அச்செயலானது எண்ணிய எண்ணம் சிறப்பாக நிறைவேற வழிவகுக்கும் என உறுதியாகக் கொள்ளலாம் என்கிறார் வள்ளவர்.

**“சினமென்னும் சேர்ந்தாரை கொல்லி இனமென்னும்**
**ஏமப் புனையைச் சுடும்.” (குறள்.306)**

என்ற குறளானது, மனித உறவுகளை மேம்படுத்த வேண்டிய ஒருவர் சினம் என்னும் தீயப்பண்பை அறவே ஒழிக்கவேண்டும். ஏனெனில், சினம் என்னும் தீய குணம் அவர்களையே அழித்துவிடும் என்கிறது. ‘கத்தி எடுத்தவன் கத்தால் சாவான்’, ‘வினை விதைத்தவன் வினை அறுப்பான்’ என்ற வாக்கிற்கு ஏற்ப மனயெண்ணத்தில் அதிகம் எதற்கு இடம்கொடுக்கிறமோ அதுவே பிற்காலத்தில் இரண்டு மடங்காக வளர்ந்து நிற்கும். ‘நல்லதை நினைத்தால் நல்லதே நடக்கும்’ என்ற சாதகமான சூழலையே நம் மனதிற்கு சொல்லி உணர்த்தவேண்டும். இதனையே, இரத்தினச் சுருக்கமாக வள்ளுவர் விளக்கியுள்ளார். எனவே, தலைமைப்பண்பில்

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

இருப்பவர்கள் எச்செயலையும் தன்மையோடு செயலாற்றி முடிப்பதில் மிகக் கவனமாக இருக்கவேண்டும்.

**"தீயவை தீய பயத்தால் தீயவை**
**தீயினும் அஞ்சப் படும்." (குறள்.202)**

என்ற குறளானது, தனக்கு இன்பம் தரும் என்றெண்ணி ஒருவன் செய்யும் தீய செயல்கள் பின் தீமையே தருதலால் அத்தகைய தீய செயல்கள் நெருப்பைக் காட்டிலும் கொடியன என்று அஞ்சி அவற்றை விலக்கவேண்டும் என்கிறது. எனவே, பாவச்செயல்களை செய்வதையும், அச்செயல்களுக்கு அறியாமல்கூட துணைநிற்பதையும் மனிதர்கள் தவிர்க்கவேண்டும். குறிப்பாக தலைமையில் வீற்றிற்கும் எவரும் இதனை கண்ணும் கருத்துமாக எண்ணிச் செயலாற்ற வேண்டும். இதனையே மேற்கண்ட வள்ளுவர் வாக்கும் அறிவுறுத்துகிறது.

**"அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்**
**இழுக்கா இயன்றது அறம்." (குறள்.35)**

என்ற குறளானது, அழுக்காறு, பேராசை, சினம், கடுஞ்சொல் ஆகிய நான்கு குற்றங்களுக்கும் இடம்தராமல் அவற்றைக் கடிந்து ஒழுகுவதே அறமாகும் என்கிறது. எனவே, தலைமைப்பண்பை பெற்றிருக்கும் எவரும் மேற்கண்ட செயல்களுக்கு இடமளித்தால் தன்நிலையை இழக்கநேரிடும் என்பதை உறுதியாக உணர்த்தியுள்ளார் வள்ளுவர். இக்கருத்தியலானது மானுட நன்மைக்கு எக்காலத்திற்கும் பொருந்தும் எனலாம்.

எனவே, அறம் செய்ய விரும்புவதை விடவும், அன்பின் வழி உயிர்களிடத்தில் அறம் செய்ய பழகினால் மட்டுமே மானுட சமூகம் பயனுற்று தகுதியானத் தலைமுறை வளரவும் வழிவகுக்கும். உலகப்பொதுமறையாம் ஒப்பற்ற திருக்குறள் அன்பின் வழிதான் இவ்வுலகத்தின் உயிர்கள் நிலைபெறும் என வலியுறுத்தியதன் காரணமும் அதுதான். திருக்குறள் எண்ணற்ற அறச்சிந்தனைகளை மனிதமூளைக்கு அசைபோடக் கொடுத்திருக்கிறது. வாசிப்புவெளியில் அதனை அனுபவிக்கும் யாவரும் தம் வாழ்விலும் செயல்படுத்தினால் இம்மண்ணும் வளம் பெறும், இம்மக்களும் வளம் பெறுவர். குற்றங்களுக்கு தீர்வு காணுவதை விடவும் குற்றவாளிகளே தோன்றாமல் பார்த்துக் கொள்வதுதான் மனிதஇனத்தின் ஆகச்சிறந்த வெற்றியாக கருதமுடியும். இத்தீர்விற்கு அன்பு ஒன்றே ஆயுதம் என்பதனை அடிநிலை முதல் தலைமை வரை வீற்றிருக்கும் மக்களினம் உணரவேண்டும். இதுவே வள்ளுவர் வலியுறுத்திய 'அன்பின்வழியது உயிர்நிலை' என்பதன் பொருளாகக் கொள்ளலாம்.

### பார்வை நூல்கள்

1. பரிமேழலகர் (உ.ஆ) - 'திருவள்ளுவர் திருக்குறள்' கங்கை புத்தகநிலையம், நான்காம் பதிப்பு - 2002. சென்னை.
2. முருகரத்தினம்.தி - வள்ளுவர் வகுத்த அரசியல், திருக்குறள் ஆய்வக வெளியீடு, மதுரை காமராசர் பல்கலைக்கழகம் 1997.
3. க.ப.அறவாணன் - அற இலக்கியக் களஞ்சியம், மணவார் மருதூன்றி பதிப்பகம், 2008.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

# திருக்குறள் காட்டும் மருத்துவம்

## Medical Treatment in *Thirukkural*

**ஞா. செல்வி,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ் உயராய்வு மையம், தி ஸ்டாண்டர்டு ஃபயர் ஒர்க்ஸ் இராசரத்தினம் மகளிர் கல்லூரி, சிவகாசி.

## Abstract

*The article unfolds the truth regarding medicine and medical treatment. It alsoonstructs that diet is a chief proponent in keeping good physical condition. Thiruvalluvar says that knowing and eating the quality of food will not allow any disease to the body and keeps is sturdy and healthy. "Food is Medicine, Medicine food" is the real fact evinced by Valluvar in his kurals. This purpose serves the need of natural treatment in life with a harmony to life. Moreover, Sidda treatment is also shared with evidences from the kurals. The use of flower, fruit, leaf, stem, root etc are enlisted for understanding how folk medicine and medical treatment are registered in "Thirukkural". Therefore, the paper decodes and states that the path of love is a high state in life.*

**Keywords:** Medical Treatment in *Thirukkural, Folk Medicine*

அன்றாடம் உண்ணும் உணவின் தன்மை அறிந்து உண்டால் உடலை எந்தப் பிணியும் அண்டாது. மருந்து என்ற ஒன்றைத் தேடி அலைய வேண்டிய அவசியம் ஏற்படாது. 'உணவே மருந்து, மருந்தே உணவு' என்ற இயற்கை மருத்துவத்தின் அடிப்படை உண்மைக் கொள்கையை அன்றே உலகுக்கு உணர்த்தியவர் வள்ளுவரே. திருவள்ளுவர் தம் குறளின் மூலம் இயற்கை மருத்துவத்தை வாழ்க்கை அறநெறிமுறைகளோடு எடுத்துரைப்பதே இவ்வாய்வுக் கட்டுரையின் நோக்கமாக அமைய உள்ளது.

**இயற்கை மருத்துவம்**

உணவில் சேர்க்க வேண்டியதைச் சேர்த்து விலக்க வேண்டியதை விலக்கினால் பிணி அண்டாது. அப்படியே வந்தாலும், உணவே மருந்தாகப் பயன்பட்டு, பிணியைப் போக்கிவிடும். இதனையே,

**'மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது**
**அற்றது போற்றி உணின்' (குறள். 942)**

இவ்வுடல் உணவால் வாழ்கின்றது. அதுவே அளவுக்கு மீறினால் நோய்கள் ஏற்படுகின்றன. இதனால் உடல் அழிகின்றது. எனவே அளவு மீறாது உணவு உட்கொள்ள வேண்டியது அவசியம். இதைத்தான் இயற்கை மருத்துவம் அல்லது உணவு மருத்துவம் என்பதையே இக்குறள் மூலம் வள்ளுவர் எடுத்துரைக்கின்றார்.

திருவள்ளுவர் கூறியபடி, இயற்கை மருத்துவம் தற்போதைய சித்த மருத்துவமாக மாற்றம் அடைந்துள்ளது. சித்த மருத்துவத்தில் வேர் முதல் கனி வரை முழுவதும் மருத்துவப் பயனுடைய சிறிய செடி முதல் பெரிய மரங்கள் வரை உள்ளன.

**'மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்**
**பெருந்தகை யான்கண் படின்' (குறள். 217)**

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

என்ற குறள் மூலம் உணர்த்தப்படுகிறது. மரங்களில் வேர் முதல் முழுவதும் மருத்துவப் பயன்தரத் தக்கவைகளுக்கு உதாரணமாக,

| | |
|---|---|
| **வேப்பமரம்** | - **Neem Tree (Azachirachta India)** |
| **வில்வமரம்** | - **Bael Tree (Aegle Marmeolos)** |
| **வாழைமரம்** | - **Plantain Tree (Ficus Bengalensis)** |
| **தென்னைமரம்** | - **Coconut Tree (Cocos Nucifera)** |
| **ஆலமரம்** | - **Banyan Tree (Mangifera Indica)** |
| **விளாமரம்** | - **Wood apple Tree (Feronia Elephantum)** |

சில மரங்கள் ஒன்று அல்லது இரண்டு உறுப்புகளைத் தவிர முழுவதும் பயன் தரக்கூடிய வகையாக இருக்கின்றன. சான்றாக:

| | |
|---|---|
| **புளிய மரம்** | - **Tamarind Tree** |
| **புங்க மரம்** | - **Indian Beech** |
| **பனை மரம்** | - **Palmyra Palm** |
| **நுணா மரம்** | - **Indian Mulbery** |
| **பூவரச மரம்** | - **Portia Tree** |
| **கருவேல மரம்** | - **Indian gum arbica Tree** |

இங்கு நாம் வேம்பு என்கின்ற சாதாரண வேப்ப மரத்தின் தன்மை, மருத்துவப் பயன் ஆகியவை நம் வாழ்க்கையில் எவ்வாறு தொடர்புடையது என்பதைப் பற்றி ஒரு சில சான்று ஆதாரங்களைக் காணலாம். வேப்ப மரத்தின், மருத்துவப் பயனைப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே நம் தமிழர்கள் அறிந்திருந்தனர். புராணக் கதைகளில் (Mythology) கடினமான முயற்சிக்குப் பின், அமிர்தத்தை (Elixis of Immortality or Amizhtham) கருடன், சொர்க்கத்திற்கு எடுத்துச் செல்லும் போது, ஒரு சில துளிகள் வேப்ப மரத்தின் மீது விழுந்ததால், அம்மரத்திற்கு மருத்துவப் பயன் கிடைத்ததாகக் கூறப்படுகிறது. புதுவருடப் பிறப்பன்று சமயப் பழக்கமாக, வேப்ப மரத்தின் இளங்கொழுந்து, பூ, கருப்பு மிளகு, பெருங்காயம், உப்பு, சீரகம், புளி மற்றும் வெல்லத்துடன் சேர்த்து உண்ணப்படுவதை நாம் அறிவோம். தென் இந்தியாவில் குறிப்பாக, தமிழகத்தில் மாரியம்மனை நினைக்கும்போது, அம்மை நோயின் போது, வேப்ப இலை நிச்சயமாக நமக்கு நினைவிற்கு வரும். அந்த அளவிற்கு வேப்பமரம், நம் தமிழர்கள் வாழ்க்கையுடன் பல வழிகளில் காலம் காலமாகத் தொடர்புடையதாக உள்ளது. வட இந்தியாவில் நீம் (Neemal) சந்நியாசி (Chaitanya Mahachibhu) மற்றும், சாய்பாபா பிறப்புடன் தொடர்புடையதால் புனிதமாகக் கருதப்படுகிறது.

வேப்பமரம் இந்தியாவிற்கே உரிய மரம்; ஆயினும் இந்தியா, அன்றி பர்மாவிலும் பயிரிடப்படுகிறது. வடமேற்குப் பாகங்களிலும் (North-Western Parts) மிகச் செழிப்பாக வளரும் (Normal rain falls varies as of 18.45 inches). தக்காணக் காடுகளில் பெரும்பாலும் அதிகமாக வளரும். சீதத்தால் உண்டாகும் விடச்சுரங்களைத் தடுக்கும் தன்மை இம்மரத்திற்கு உண்டு என்று நம்பப்படுவதால், பெரும்பாலும், மிகுதியான நாடுகளின் எல்லைப்புறம், வாழும் இடங்களுக்கு அருகிலும், காளி முதலிய அம்மன் கோயில்களிலும், சாலைகளின் இருபுறமும், வைத்துப் பயிரிடப்படுகிறது. வேப்பமரம் நீங்கலாக, கருவேம்பு, சர்க்கரை வேம்பு, மலை வேம்பு (Common Bead tree the Persian Lilac) என்கின்ற இனங்களும் உண்டு.

**சித்த மருத்துவத்தில் பயன்படும் உறுப்புகள்**

இலை (Leaf), ஈர்க்கு (Rachis), பூ (Flower), காய் (Young fruit), வித்து (Seed or

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

Nut), நெய் (Seed Oil), பிண்ணாக்கு (Oil Cake), மரப்பட்டை (Root Bark), கட்டை (Wood), கள் (Tody or Sap), பிசின் (Pesin)

இலைக்கு வெப்பமுண்டாக்கி (Stimulant), புழுக்கொல்லி (Antihelminitic), வீக்கம் பரப்பி (Discutient) செய்கை உள்ளது.

**‘கிருமிகுட்ட மாந்தநங் கெடுவிடநஞ்சு ரங்கள்**
**பொருமியம் சூரிகையின் புண்கள் - ஒருமிக்க**
**நிம்பத் திலையிருக்க நீடுலகில் நீங்காமல்**
**கம்பத் திலையிருக்கக் காண்.’ (அகத்தியர் குணவாகடம்)**
**‘புத்தியிதைத் தீட்டுவிக்கும் புண்பிணியை யோட்டுவிக்கு**
**மிந்தியத்தை நன்றா யிசைவிக்கும் - சந்தமும்**
**கீறுண்டாங் கற்ப மிகவுண்டா மெஞ்ஞான்றும்**
**மாறண்றா ரையமில்லா மல்’ (தேரன் வெண்பா)**

போன்றவற்றில் நோய் தீர்க்கும் முறைகளை சித்த மருத்துவ உறுப்புகள் மூலம் அறிய முடிகின்றது.

**இலை (வழக்கு முறையில்)**

வேப்ப மரத்தின் துளிர், முதிர்ச்சியான இலை ஆகிய இரண்டையும் இடித்து அப்பொடியின் அளவிற்க அரைப்பங்கு, ஓமம், உப்பு சேர்த்துப் பொடித்துப் புசிக்கக் கண்ணிலிருக்கும் படல மறைப்பு, காமாலை, மாலைக்கண், புழுவெட்டு முதலிய நோய்கள் நீங்கும்.

வேப்ப இலையைத் தனித்தேனும், சிறிது மஞ்சள் சேர்த்து தேனுடன் அரைத்துச் சீலையில் தடவ, கரப்பான், சொறி, சிரங்கு, அம்மைப்புண் முதலியவற்றுக்கும் இவ்விலை சிறந்த மருந்தாக அமைகின்றது.

இலைக் குடிநீர் (நிலவேம்பு சாறு), துட்ட புண்களைக் கழுவப் பயன்படும், புழு பூச்சி முதலியவைகளால் நேரிடும் துன்பங்களை இவ்விலை ஒழிக்கவல்லது.

**ஈர்க்கு**

இதைச் சுரக்குடி நீரிலும், வாந்திக் குடிநீரிலும் சேர்க்கலாம்.

**பூ**

வெப்பமுண்டாக்கி, பசியைத் தூண்டி, உரமுண்டாக்கிச் செய்கைகள் உள்ளன.

**‘பித்தத் தெழுந்த பெருமூர்ச்சை நாத்தோடம்**
**சத்தத் தெழுவமனம் அருசி - முற்றியகால்**
**ஒப்பம் மசகீட மிலையேகு நாட்சென்ற**
**வேப்பமல ருக்கு வெருண்டு.’ (தேரன் வெண்பா)**

நாள்பட்ட பழைய பூவை நெய்விட்டு வதக்கி, உப்பு, சுட்டப் பழம், புளி, வறுத்த மிளகாய், கறிவேப்பிலை கூட்டி, துவையல் செய்து சாப்பிடலாம். (மேற்படி செய்தால் நோய்கள் விலகும்). வேப்பம் பூவை குடிநீரில் கலந்து குடிப்பதால் அது பல தோல் நோய்களைப் போக்குவது மட்டுமல்லாது குன்ம நோயையும் குணமாக்கும். மேலும் வேப்பம் பூவில் ரசம் வைத்து உண்பர். இதனால் சுவையின்மை, வாந்தி போன்ற நோய்கள் நீங்கும்.

**காய் - பழம்**

இவை வெப்பம் அகற்றியாக செயல்படுகிறது. மேலும், உரமாகவும் பயன்படுகின்றது.

**வித்து**

இதன் பருப்பை அரைத்துப் புழுபட்ட புண்களுக்குப் பூச புண் ஆறும். இதனையே,

**‘வேம்பின் விதைக்கு விடஞ்சந்தி பாதமுதல் தேம்பிவிழுந் தோடுமெனத் தேர்’**
**(அகத்தியர் குணவாகடம்)**

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

அகத்தியர் குணவாகடம் வாயிலாக அறிய முடிகின்றது.

**நெய்**

வெப்பம் உண்டாக்கி, அழுகலகற்றி, புழுக்கொல்லி செய்கைகள் உண்டு.

**'வாதம் போம் பித்தமிகும் மாறாக்கி ரந்தியொடு**
**மோதுகரப் பித்தமிகும் முன்னிசிவும் - ஓதுடலின்**
**நாப்ப ணூறுசுரமு நாடுஞ்சந்தி யுந்தொலையும்**
**வேப்ப நெய் யென்றொருக்கால் விள்ளு' (அகத்தியர் குணவாகடம்)**

நெய்யைப் பூச, பெரும்வளி நோய்கள், கழலைகள், சிரங்குகள் போகும். ஆனால் அழல் மிகும். வேப்பெண்ணெயைக் காயவைத்து எருக்கிலை கொண்டு, தேய்த்து ஒற்றடமிட, உடல் குத்து, பிடரிவலி முதலியவை நீங்கும்.

**பிண்ணாக்கு**

பிண்ணாக்கை இடித்து வறுத்து ஒற்றடமிட, வாதம், தலைநோய் நீங்கும்.

**பட்டை**

இதன் செய்கை வெப்ப அகற்றி, உரமாக்கி, துவாப்பி முதலியவை.

**'ஓதரிய வேம்பை யுறைக்கிய சுரமுடனே**
**வாதமறு மூலகண மாந்தம் போந் - தீதாய்**
**உதிருமெரி பூச்சினுன்ம மோதா தொழியுஞ்**
**சிதறுமலம் போகுமெனத் தேர்' (அகத்தியர் குணவாகடம்)**

குடிநீர், தைலம் முதலியவற்றில் பயன்படுத்தப்படுகிறது. முறைசுரத்திற்குக் குடிநீர் பயன்படும்.

**வேப்பம் பட்டைத் தைலம்**

வேப்பம்பட்டை 35 கிராம், விலாமிச்சம் வேர், மிளகு, வெள்ளுள்ளி, சீரகம், கஸ்தூரி மஞ்சள், பசுவின் பால், நல்லெண்ணெய் சேர்த்துத் தயாரித்த தைலத்தால் வாதநோய், தலைவலி, மூக்கடைப்பு ஆகிய நோய்கள் நீங்கும்.

நூறாண்டு வேப்பம்பட்டை 415கி. நீர் 22 1/2லி. விட்டு 1/6 ஆகக் குறுக்கி எண்ணெய் 2500மி.லி. கலந்து, இலந்தை வேர், பழம் பாசி, அக்கிரகாரம் வகைக்கு 34 கிராம், பால் விட்டரைத்துச் சேர்த்துக் காய்ச்சி வடித்து மூழ்கிவர பெருநோய், உடல் கடுப்பு, கரப்பான், சொறி, சிரங்கு ஆகிய நோய்கள் நீங்கும்.

**கள்**

பசித் தீயைத் தூண்டுதல், உரமாக்கித் தன்மை இருப்பதால், மேகநோய், வலிப்பு நோய்களுக்கு வழங்கலாம்.

**பிசின்**

உரமாக்கும் தன்மை இருப்பதால், உலர்த்திச் சூரணம் செய்து, 2.6 கி. மேக ரோகத்திற்குக் கொடுக்கலாம். வேப்பமரம் நம் வாழ்க்கையில், உணவு பழக்க வழக்கம் என்ற வகையில் பயன்பட்டு வந்த போதிலும், மருத்துவரீதியில் அதிகம் பயன்படுத்தப்படுகிறது. சிறிய பெரிய மருந்துகளில் மற்ற சரக்குகளுடன் சேர்த்துப் பயன்படுத்தப்படுகிறது. (சான்று) விஷ்ணு சக்கர மாத்திரை, காது நோய் தைலம்.

**'மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்**
**பெருந்தகை யான்கண் படின்' (குறள். 217)**

என்ற குறளின் படி சித்த மருத்துவத்தில் வேப்பமரம் போன்று பல மரங்களின் பல உறுப்புகளும் பயன்படுகின்றன.

**தொகுப்புரை**

திருக்குறளில் பல்வேறு மருத்துவம் சார்ந்த கருத்துக்கள் அமைந்துள்ளன. மேலும் நம் உடலுக்கு நன்மை பயக்கும் வகையில் அமைந்துள்ள வேப்பமரத்தின் அடி முதல் நுனி

E-ISSN: 2581-7140

Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

வரை மருத்துவப் பண்புகள் அடங்கியுள்ள விதத்தை வள்ளுவர் தம் குறள் வாயிலாக வெளிப்படுத்தி இருக்கிறார். எனவே நம் தமிழர்கள் இயற்கையாகவே இயற்கையோடு இயைந்த மருத்துவமான சித்த மருத்துவத்தின் முன்தோன்றல்கள் என்பதை அறிந்து கொள்ள முடிகின்றது.

**பார்வை நூல்கள்**

1. *குணவாகடம்* - அகத்தியர்
2. *தேரன் வெண்பா*

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

# திருக்குறளில் இசைக்கூறுகள்

## Music Related Evidences in *Thirukkural*

**திரு.தங்கராசா கோபிநாத்**, முது நுண்கலைமாணி (குரலிசை)
சித்தானைக்குட்டிபுரம், காரைதீவு-03, அம்பாரை மாவட்டம், இலங்கை.

### Abstract

*The paper unfolds the facts of music and its related concepts in "Tirukkural". The treatise has lots of evident facts on music and the impact of music in human life. Music is an exponent of all soothing effects in the world for a human being. Tamil language gives more importance to music; because music is the second most mode of expression of Tamil language. It will probe into the heart of the individual who seeks refuge to it. Music, Musical instruments and its noble quality is exposed through many of the kurals. Parai, Flute, Yaal (Lyre) are mainly used on those days of Valluvar. The impact of these instruments are also briefed for its familiarity. Therefore, the paper elicits the details of the music and related concepts as found in "Thirukkural".*

**Keywords:** Music Related Evidences, *Thirukkural*

**முன்னுரை**

உலகப்பொதுமறை என அனைத்து மக்களும் போற்றும் நீதிநூல்களில் திருக்குறளும் ஒன்றாகும். மனிதன் கருவறை முதல் கல்லறை வரை எப்படி வாழ வேண்டும் என்ற கருத்துக்களை இந்நூல் தெளிவாகக் கூறிநிற்கின்றது. திருக்குறள் தமிழ் இசைப்பற்றிய பதிவுகளையும், கருத்துக்களையும் தன்னகத்தே கொண்டு காணப்படுகின்றது. மேலும், உலகமக்கள் அனைவரிடமும் தமிழ்மொழிக்கு தனி இடம் இருப்பதற்கு திருக்குறளில் மகத்துவமும் ஒரு காரணம் என்றால் எவராலும் மறுக்க முடியாது. இந்நூலில் இசை சார் கருத்துக்கள் இடம் பெற்றிருப்பதனை இசை முகவரி அல்லாத மக்களுக்கு தெரிவிப்பதனை ஆய்வு நோக்காக கொண்டும், விபரண ஆய்வு முறையியலில் இவ்வாய்வுக் கட்டுரை எழுதப்பட்டுள்ளது.

**திருக்குறள் ஓர் அறிமுகம்**

இதனை பொதுமறை, உலகப்பொதுமறை என்றெல்லாம் அழைப்பர். உலகில் பல்வேறுபட்ட மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்ட நூலில் முதன்மையானது திருக்குறள் ஆகும். ஈரடி மூலம் உலகையே திரும்பி பார்க்க வைத்த இந்நூல் அறம், பொருள், காமம் ஆகிய மனிதர் வாழ்விற்கு இன்றியமையாதவை பற்றி விளக்கி நிற்கின்றது எனலாம். இதனை திருவள்ளுவர் என்னும் பெருந்தகை எமக்களித்துள்ளார். இதனை இந்துசமயத்தின் புனித நூலாகவும் கருதுகின்றனர். திருக்குறள் எப்போது தோன்றியது என சந்தேகம் இருந்தாலும்.திருக்குறள் கல்வெட்டுக்களில் பொறிக்கப்பட்டு ஆராய்ச்சியாளர்கள் இதனை கிறிஸ்துவிற்கு முற்பட்ட காலத்தில் திருக்குறள் இருந்துள்ளது எனவும் ஒரு பதிவு எம்மத்தியில் காணப்படுகின்றன. இவற்றை எல்லாம் கருத்தில் கொண்டு "திருவள்ளுவர் வருடம்" என்ற கணிப்பும் ஆரம்பிக்கப்பட்டுள்ளது. இவை அனைத்தும் சந்தேகத்திற்குரியது

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

அன்று திருக்குறளின் மகத்துவமே இவ்வாறான சந்தேகங்கள் எழ காரணமாக அமைகின்றது எனலாம். 1330 குறட்பாக்கள், 133 அதிகாரங்கள் அகிலத்தையும் ஆளும் வல்லமை கொண்டுள்ளன என்றால் மிகையாகாது.

**திருக்குறளும், பண்ணும்**

திருக்குறளில் பண்ணை பற்றிய பதிவுகள் காணப்படுகின்றன. பண் என்பது பாடலுக்கு இயந்து வரக்கூடியவை ஆகும்.

**'பண் எண்ணாம் பாடற்கு இயைபு இன்றேல் கண் - எண்ணாம்**
**கண்ணோட்டம் இல்லாத கண்' (குறள்: 573)**

இதனை, பரிமேலழகர் பின்வருமாறு விளக்கியுள்ளார். பாலையாழ் முதலிய 103 பண்களும், யாழின்கண் வார்த்தல் முதலியஎட்டுபாடற் தொழில்களும், பண்ணல் முதலிய எட்டும்மிடற்றின் கண் எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பிதம், குடிலம் என்னும் ஐந்தும், பெருவண்ணம், இடைவண்ணம், வனப்பு வண்ணம் முதலிய வண்ணங்கள் எழுப்பத்தாறும் ஆகிய இவற்றோடு இயையாத வழிப்பண்ணால் பயன் இல்லாதவாறு கண்ணோடத்து இயையாத வழிக்கண்ணால் பயன் இல்லை என்கிறார்.

திருக்குறளில் பண், இசை நுணுக்கங்களையும் குறிக்கும் குறள்களும் காணப்படுகின்றன. இதன்மூலம் அக்காலத்தமிழ் மக்கள் இசையின் சிறப்பினை அறிந்திருந்தனர். என்றும் திருவள்ளுவர் ஓர் இசை அறிஞராக இருந்திருக்கிறார். எனவும் தெரிய வருகிறது. மற்றும் இதில் **"இசை"** எனும் சொல் ஆங்காங்கே ஆறு இடங்களில் வந்திருக்கின்றது. ஆனால், புகழ் என்றும் பெருமை என்றும் பொருள் கொள்ளப்படுகின்றது. இதனை,

**'ஈதல் இசைபட வாழ்தல் அது அல்லது**
**ஊதியம் இல்லை உயிர்க்கு' (குறள். 231)**

எனும் குறள் தெளிவாக கூறுகின்றது.

**இசைக்கருவிகள்**

திருக்குறளில் பல இசைக்கருவிகளின் பெயர்கள் காணப்படுகின்றன. அவை அணிகையாள்கைக்காக பயன்படுத்தப்பட்டாலும் இசைக்கருவிகளின் சிறப்புக்களையும் சுட்டி நிற்கின்றன. இதில் குழல், யாழ், வீணை, பறை போன்ற இசைக்கருவிகளின் பெயர்கள் பயன்படுத்தப்பட்டன.

**குழல்**

குழல் பற்றிய பல பதிவுகள் திருக்குறளில் காணப்படுகின்றன. அதாவது ஆயர்கள் ஆநிரைகளை மேய்த்து மாலையில் திரும்பும்போது குழலிசைப்பர். அவ்வொலி மிக இனிமையாக இசைக்கும் மற்றவர்களுக்கு கேட்க மகிழ்ச்சியாக இருக்கும். ஆனால் தலைவனை பிரிந்து வாழ்கின்ற தலைவிக்கு அவ்வொலி நெருப்புத்தழல் போல துன்பம் பயப்பதாக இருக்கிறது. அது தலைவியைக் கொல்வதாய் இருக்கிறது என்று கூறப்படுகின்றது.

**'அழல் போலும் மாலைக்குத் தூதாகி ஆயன்**
**குழல் போலும் கொல்லும் படை' (1228 குறள்)**

இவ்வாறு குழல் பற்றிய பதிவு காணப்படுகின்றது.

**குழலும், யாழும்**

திருவள்ளுவர் வாழ்ந்த காலத்தில் தமிழர் இசைக்கருவிகளில் தொன்மையான குழலும், யாழும் காணப்பட்டன. குழலோசை, யாழோசை என்பன மக்களுக்கு இனிமையை கொடுத்தன எனலாம். மற்றும் குழலின் இசை இனிமையானது, யாழின் இசை இனிமையானது என மக்கள் போற்றி வாழ்ந்தனர். குழந்தையை பெற்ற மனிதர்கள் குழலின் இசை, யாழின்

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

இசையை விட தம் குழந்தைகளின் மழலைச் சொற்களே! இனிமையான இசை என கூறுகின்றனர் என்பதனை,

**'குழலினிது யாழினிது என்பர் தம்மக்கள்**
**மழலைச் சொல் கேளாதவர்' (66 குறள்)**

**யாழ்**

வள்ளுவப்பெருந்தகை குழலையும், யாழையும் இணைத்து கூறினார். அத்துடன் யாழ் பற்றித்தனிக் குறள் ஒன்றினையும் குறிப்பிட்டுள்ளார். அதாவது யாழின் வடிவத்தினையும், கணையின் வடிவத்தினையும் ஒப்பிடுகிறார். கணையின் வடிவம் நேரானது ஆனால் யாழின் வடிவம் வளைந்து காணப்படுகின்றது. கணை பிறரது உயிரை கொல்லக்கூடியதாகும். ஆனால் யாழ் இனிய இசையினை மக்களுக்கு வழங்குவது இதில் இருந்து யாழ் நல்லது, கணை கெட்டது எனக் கூறமுடியாது. அதுபோன்று தவம் செய்பவர்களையும் இவர் நல்லவன், இவர் கெட்டவர் என அவர்தம் வடிவத்தைக் கொண்டு கூறாமல், அவர்களது செயலில் பருத்தறிய வேண்டும் என யாழினை உவமைஅணி கையாள்கைக்காக பயன்படுத்தியுள்ளார்.

**'கணை கொடிது யாழ்கோடு செவ்விதாங்கன்ன**
**விளை படுபாலாற் கொளஎல' (279 குறள்)**

**பறை**

பறை என்னும் இசைக்கருவி பற்றிய குறிப்புகளும் திருக்குறளில் காணப்படுகின்றன. வள்ளுவர் பறையினை அணி கையாள்கைக்காக பயன்படுத்தியுள்ளார். முற்காலத்தில் ஒரு தகவலை மக்களுக்கு அறிவிக்க வேண்டும் எனில், பறையை அறைந்து செய்தியை மக்களுக்கு தெரிவிப்பர். அதாவது இங்கு கயவர் ஒருவரிடம் தான் கேட்ட ஓர் இரகசியமான செய்தியை மறைத்து வைக்காமல் அனைவரும் தெரியும்படி உரத்துச்சொல்லிக் கொண்டு இருப்பர். அதனால் அவர்களை பறை என்றும் இசைக்கருவிக்கு ஒப்பிட்டு கூறுவர், இதனை,

**'அறை பறை அன்னர் கயவர் தாம் கேட்ட**
**மறை பிறர்க்குய்த்துரைக்கலான்' (1086 குறள்)**

பிறிதொரு குறளிலும் பறை பற்றி கூறப்பட்டுள்ளது. அதாவது தலைவி தன் கண்ணை பறைபோல் இருப்பதாக எண்ணி பழிக்கிறாள். அறையப்படும் பறைபோல் தன் கண் இருப்பதனால் தன் உள்ளத்தில் இருக்கும் காதல் என்னும் மறைபொருளை தனது விழிகளே பிறர்க்கு காட்டிக் கொடுத்துவிடும் என்கிறாள். இவ்வாறு பறை அணிக்கையாள்கைக்காக பயன்படுத்துள்ளது. இதனை,

**'மறைபெறல் ஊரார்க்கரிதன்றால் எம்போல்**
**அறைபறை கண்ணார் அகத்து' (1180 குறள்)**

மற்றொரு குறளிலும் தாள இசைக் கருவிகளில் ஒன்றான பறை மிகுதியாக பேசப்படுகின்றது. அதாவது,

**'அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தான் நுசப்பிற்கு**
**நல்லபடாஅ பறை'(குறள்.1115)**

அதாவது தலைவியானவள் மிகவும் மென்மையானவன். அவள் தன் மென்மையினை பொருட்படுத்தாது அனிச்சப்பூவை முகிழ்களையாது சூடினாள். மற்றும் அனிச்சப்பூவும் மிகவும் மென்மையானது எனலாம். ஆனால் தலைவி அதைவிடவும் மென்மையானவள் என்பதனால் அம்முகிழ் தாங்காது அவள் இடை முறியும். அதனால் இறந்தவர்களுக்கு அடிக்கும் நெய்தற்பறையே ஒலிக்கும். நல்ல பறைகள் ஒலிக்கமாட்டாது. அதாவது அனிச்சப்பூவை தலைவி சூடினாள் அவள் இடைமுறிந்து செத்துவிடுவாள் ஆனால் நல்ல பறைகள் ஒலிக்காது. மற்றும் நெய்தற்பறையே ஒலிக்கும் என பறையை பற்றி கூறப்படுகின்றது.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**திருக்குறளும், இசை உலகில் அதன் பயன்பாடும்.**

திருக்குறளை இசை உலகில் பல வித்துவான்கள், இசைஇயலாளர்கள் பயன்படுத்தி தமிழையும், தமிழ் இசையையும் வளர்க்கப்பாடுபட்டனர். அந்த வகையில் தஞ்சை இராமதாஸ் அவர்கள் திருக்குறள் பாடல்களுக்குச் சுரதாளக்குறிப்புக்கள் அமைத்து **"திருக்குறள் இசையமுதம்"** என்ற நூலை அமைத்து இசையில் திருக்குறளை இணைத்து அதன் புகழும், தமிழ் இசை வளர்ச்சிக்காகவும் பாடுபட்டார் எனலாம்.

மற்றும் மகாவித்வான் கோமதி சங்கர ஐயர் (23.8.1908 – 07.02.1988) சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் வீணைப் பேராசிரியராகப் பணியாற்றினார். இவர் அண்ணாமலைச் செட்டியாரின் தமிழிசை இயக்கத்தில் செயல்வீரராக விளங்கினார். இவர் **"தானவர்ணக்கடல்"** என்ற நான்கு தொகுதிகளைக் கொண்ட நூலில் 43 திருக்குறள்களைக் கொண்ட வர்ணங்கள் (இசை சார் உருப்படி) காணப்படுகின்றன. இவ்வர்ணங்களுக்குாக 86 திருக்குறள்களை பயன்படுத்தியுள்ளார். இவற்றில் பல்லவி, அனுபல்லவியில் உள்ள குறள்கள் எதுகை, மோனை பொருந்தி வருமாறு கருத்துக்களில் பொருள் கொண்டு இசை அமைத்துள்ளார்.

இதனைத் தொடர்ந்து முதன்முறையாக **"குறளோவியம்"** எனும் நாட்டிய நாடகத்தை உருவாக்கித் உலகத்திருக்குறள் மாநாட்டில் அரங்கேற்றிய பெருமை திருச்சி கலைக்காவிரி நுண்கலைக் கல்லூரியைக் சாரும் மற்றும் கல்லூரியில் திருக்குறளைக் கொண்டு பதவர்ணங்களும் இயற்றப்பட்டு அரங்கேற்றப்பட்டுள்ளது. இவ்வாறு தற்கால இசைஉலகம், இசைக்கல்லூரி, பல்கலைக்கழகங்கள் திருக்குறளின் பெருமைகைள நுண்கலைகளின் ஊடாக வெளிப்படுத்துவது சிறப்பு வாய்ந்தது எனலாம்.

**முடிவுரை**

தமிழ் உலகில் தனிச்சிறப்பு வாய்ந்ததும், பலமொழிகளிலும் மொழி பெயர்க்கப்பட்ட நூலாகிய *திருக்குறள்* உலகெங்கும் தனி சிறப்பு மிக்க நூலாகக் கருதப்படுகின்றது. இதில் கூறப்படுகின்ற விடயங்கள் அனைத்தையும் மனிதன் கடைப்பிடித்தால் வையகத்தில் வாழ்வாங்கு வாழமுடியும். இவ்வாய்வுக் கட்டுரையின் படி இசை, நடனம் இரண்டினையும் சாதாரண மனிதன் முதல் படித்தவன் வரை அனைவரும் இரசிப்பர் எனலாம். எனவே தமிழையும், தமிழிசையும் வளர்க்கும் பொருட்டும், இசையையும், இசையை ஊடகமாகக் கொண்டு திருக்குறளை இசையமைத்து அத்துடன் பல இசைநுட்பங்களை பிரயோகித்து தமிழையும், தமிழிசையும் வளர்க்க முயற்சிப்பதும் மற்றும் திருக்குறளில் அணிக்கையாள்கைக்காக வீணை, குழல், யாழ், வீணை, பறை ஆகிய இசைக்கருவிகளின் பதிவுகளும், 6 இடங்களில் இசைபற்றிய குறிப்புகளும், பண் பற்றி குறிப்புக்கள் என ஏராளமான இசைக்குறிப்புக்கள் பொறிந்துள்ளன என்பதனை இசையினை முகவரியாய் கொண்டோருக்கும், இசையினை முகவரியாய் கொள்ளாதவர்களுக்கும், தெரியப்படுத்தும் முகமாகவும் தமிழையும், தமிழிசையும் வளர்ப்பதற்கு உலகப் புகழ்பெற்ற திருக்குறளை பயன்படுத்தவும் பல இசைசார் ஆய்வுகளை செய்யவும், செவ்வியல் கச்சேரிகளிலும் பயன்படுத்தி உலகப்பொதுமறையான திருக்குறளை நுண்கலைகளாகிய (இசை, நடனம், நாடகம்) மூலம் மேலும் மக்கள் மத்தியில் திருக்குறள் சார் ஈடுபாட்டினையும், அத்துடன் தமிழையும், தமிழிசையும் வளர்க்க பாடுபடுவோம். இவை அனைத்திற்கும் இவ்வாய்வுக்கட்டுரை முன்னோடியாக திகழும் என உறுதியாக நம்பமுடியும்.

**துணை நின்ற நூல்கள்**

1. நூலாசிரியர் குழு, திருக்குறளில் இந்திய அழகியல் நடனக் கூறுகள், கலைக்காவிரி நுண்கலைக்கல்லூரி, உயர் எழுத்துப்பதிப்பகம், முதல்பதிப்பு. மார்ச் 2017.

**E-ISSN: 2581-7140**

**Special Issue I, August-2019** **Available at: www.ijtlls.com**

2. சிவகௌரி. சோ, மகாவித்துவான் திரு.கோமதி சங்கர ஐயரின் தமிழிசைப்பணி. முனைவர்பட்ட ஆய்வேடு, தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர் - 2013.

**செவ்விகாணல்**

1. அருட்செல்வி, பேராசிரியர், இசைத்துறை, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சிதம்பரம்
2. மாதவி, துறைத்தலைவர், இசைத்துறை, தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

# வள்ளுவம் உணர்த்தும் அரசியல் சூழல்

# Inculcation of Political Atmosphere in Valluvam

**அ.தனலட்சுமி,**
முழுநேர முனைவர் பட்ட ஆய்வாளர், எஸ்.எ.ீ.ப்.ஆர் மகளிர் கல்லூரி, சிவகாசி.

## Abstract

*The paper deciphers the political scenario of the Tamil society as reflected in the "Thirukkural". In "Porutpaal", Valluvar has instructed many of the political details in simple manner to do a better reign. The article; in a way briefs the role of a king and his order to save humanity by justice and truth revealed through the kurals. Tyrannical rule is also exposed and its consequences is also shown out for indicating the weakness of a king from his people. Politics, political ethics, king, king's occupation, triumphant rule, tyrannical rule, ambassadorship, espionage, war, stonehenge worship and so on are discussed in the paper with reference to kurals. Consequently, the paper jots down the facts as found in "Thirukkural".*

**Keywords:** Political Atmosphere, Monarch, Monarchial rule, Valluvam

**முன்னுரை**

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று திருக்குறள். திருக்குறள் அனைத்து நாட்டவர்க்கும், எல்லாச் சமயத்தவர்க்கும் பொருந்தக்கூடிய பொதுவான கருத்துகளை உணர்த்துவதால் உலகப்பொதுமறை எனப் போற்றப்படுகிறது. வள்ளுவர் மன்னர்களுக்கு என்று கூறிய கருத்துகளில் மன்னர் என்ற சொல்லை நீக்கினால் அவை அனைத்தும் தற்போதைய மக்களாட்சி முறைக்கு பொருந்தக்கூடியனவாக அமைகின்றன.

அறவழியில் ஈட்டிய பொருள்களை மற்றவர்களுக்கு பகிர்ந்து கொடுக்க வேண்டும் என்று கொடைத்திறனை உணர்த்திய வள்ளுவர் அரசநீதியையும், அரசாட்சி முறையையும் பற்றி பொருட்பாலில் கூறியுள்ளார். வள்ளுவர் காலத்தில் நிலவிய அரசியல் சூழல் உலகம் முழுவதற்குமான கருத்தினை பிரதிபலிக்கும் விதத்தினை ஆராயும் நோக்கில் இக்கட்டுரை அமைகின்றது.

**சூழல் பொருள் விளக்கம்**

சூழல் என்பதை சூழ் + அல் என பிரித்தறியலாம். தமிழில் 'சூழ்' என்ற வினைப்பகுதியோடு 'அல்' என்ற தொழிற்பெயர் விகுதி இணைந்து சூழல் என்ற பதம் பெறப்படும். சூழலியல் என்பதை சுற்றுச்சூழல் அறிவியல், சுற்றுச்சூழலியல், சுற்றுச்சூழல் கல்வி என்று பல்வேறு பெயரிட்டு அழைக்கின்றனர். பண்டைத் தமிழர்கள் சூழலியல் பற்றிய அறிவை மிகுதியாகப் பெற்றிருந்தனர். இவ்வுலகமானது நிலம், நீர், காற்றால் உருவாகியது என்பதை

**"நிலம் தீ நீர்வளி விசும்பொடு ஐந்தும்
கலந்த மயக்கம் உலகம் ஆதலின்"** [1]

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

என்ற தொல்காப்பிய நூற்பாவால் அறியமுடிகின்றது. சூழல் என்பது இப்புவியில் உள்ள உயிர்களைச் சுற்றி நிகழ்கின்ற நிகழ்வுகளைக் குறிப்பதாகும்.

**அரசு**

மக்கள் நாடோடியாக வாழ்ந்த நிலையினை விடுத்து நிலையான வாழ்க்கையை அமைத்துக் கொள்ளவும், பகைவர்களிடமிருந்து தன்னை பாதுகாத்துக் கொள்ளவும், அமைதியான முறையில் வாழ்வினை நடத்துவதற்கும், ஓர் அமைப்பினை ஏற்படுத்தி அதற்கு ஒரு தலைவனை நியமித்து ஒரு நிலையான வாழ்வினை நடத்திவந்துள்ளனர். இதுவே பிற்காலத்தில் வளர்ச்சியுற்று அரசு தோன்றியது எனலாம். அரசு என்ற சொல்லுக்கு மக்கள் சமூகத்தை நிர்வகிக்கவும், நெறிபடுத்தவும் அமைக்கப்பட்ட அரசியல் ரீதியான அமைப்புமுறை என்று பொருள் கொள்ளலாம். அரசு என்பது **"இராசா, இராச்சியபாரம், நாடு"**[2] என தமிழ் மொழி அகராதி விளக்கம் அளிக்கின்றன. இவற்றை அறியும் பொழுது அரசு என்பது பல்வேறு நிலைகளை கொண்டவை என்பதை அறிய முடிகிறது.

**அரசியல்**

அரசியல் என்ற சொல்லிற்கு அகராதிகளும், நூல்களும் பல பொருள்தருகின்றன. **"அரசியல் (Politics) என்பதற்கு ஆட்சி, அதிகாரம் பற்றிய கோட்பாடுகளும் நடைமுறைகளும்"**[3] என க்ரியா தமிழ் அகராதி விளக்கம் தருகின்றன. அரசியல் என்பது **"நாடு ஒன்றினை ஆட்சி புரிந்திடும் முறை, ஆட்சி புரிவது பற்றிய பல்வேறு கட்சிகளின் கொள்கைகள் மற்றும் நடைமுறைகள் Government internal politics of a political party"** [4] என நர்மதாவின் தமிழ் அகராதி விளக்கம் கொடுக்கின்றன. அரசியல் என்பதனை அரசு + இயல் அரசினை பற்றி அனைத்துக் கருத்துகளையும் எடுத்தியம்புவது என பொருள்படும். அரசியல் என்பதனுள் அரசு, அரசாட்சி, அரசன், நாடு, நாட்டில் வாழும் மக்கள், அரசனின் அதிகாரம், மக்களின் வாழ்க்கைத்தரம் என பல்வேறு கருத்துகளின் உள்ளடக்கம் என்பதனை அறியமுடிகிறது.

**அரசன்**

தற்பொழுது மத்திய அரசு, மாநில அரசு என்று இரண்டாக பிரிந்து ஆட்சி செய்வது போல், பண்டைய காலத்திலும் அரசர்கள், பேரரசன், சிற்றரசன் என இருவேறு நிலையில் ஆட்சிபுரிந்திருக்கின்றனர். மத்திய அரசு என்பது நாடு முழுவதும் ஆட்சி புரிவது. மாநில அரசு என்பது நாட்டின் ஒரு பகுதியை(மாநிலத்தை) மட்டும் ஆட்சி செய்வது. அதுபோல் பேரரசன் என்பவன் பெரும் பகுதியை ஆட்சி புரிபவன். சிற்றரசன் என்பவன் குறுநில மன்னன் என்றும் அழைக்கப்பட்டான். அதாவது குறுகிய நிலப்பகுதியை ஆட்சி செய்பவன் ஆவான்.

> **"அரசன் என்பதற்கு நாடாள்வான் அரசு எனும் தலைமையையும், இராச்சியம் என்பது ஆளப்படும் பகுதி என்ற இடத்தையும் அரசாட்சி என்பது அரசு நிருவாகம் என்ற கருவியையும் குறிப்பன"** [5]

என பேராசிரியர் இராஜமுத்திருளாண்டி குறிப்பிடுகின்றார்.

> **"திருவள்ளுவர் ஆட்சித் தலைவனுக்கு என்று கூறும் இயல்புகள் நாட்டு மக்கள் பலருக்கும் வேண்டிய நல்லியல்புகளாக உள்ளன. நாட்டு மக்களும் நல்ல இயல்பும் திறனும் கல்வியும் உள்ள பலர்க்கும் ஆட்சித் தலைமை கிடைக்கக்கூடிய வாய்ப்பு இருக்கும், அரசியல் முறையே குடியாட்சி முறை"**[6]

என்ற மு.வ அவர்களின் கருத்து சிந்தனைக்குரியது. மன்னன் என்பவன் மக்களை காக்கும் திறன் கொண்டவனாக இருக்க வேண்டும். அரசன் கல்வி, வீரம், கொடை, படைசிறப்பு, நிர்வாகத் திறன், மக்களின் நலன் ஆகியவற்றை கருத்தில் கொண்டு ஆட்சி புரியவேண்டும் என்பதை அறிய முடிகிறது. ஒரு நாட்டை ஆட்சி செய்யும் அரசன் கல்வி, துணிவு, வீரம், கொடை, ஒழுக்கம் ஆகிய இயல்புகளைப் பெற்றிருப்பதோடு இவ்வுலகில் யாருக்கும் அஞ்சாத

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

தன்மையுடையவனாக இருக்க வேண்டும் என்பதையும் உணரலாம். வலிமை பொருந்திய படை, ஒழுக்கம் உள்ள குடிமக்கள், உணவுப் பொருள், திரண்ட செல்வம், திறமையான அமைச்சர்கள், அண்டை நாடுகளின் நட்பு, உறுதியான பாதுகாப்பு ஆகிய ஆறு பிரிவுகளை உடையவன் அரசர்களுள் சிறந்தவனாக சிங்கம் போன்றவனாகக் கருதப்படுவான் என வள்ளுவர் கூறியுள்ளார். இக்கருத்திணை,

**“படைகுடி கூழ்அமைச்சு நட்புஅரண் ஆறும்**
**உடையான் அரசருள் ஏறு.”**

என்னும் குறளின் வாயிலாகத் தெளியலாம்.

**நாடு**

மக்கள் கூட்டமாகஇணைந்து வாழும் ஒருநிலப்பகுதியே நாடு எனலாம். ஒரு நாடு எவ்வாறு இருக்க வேண்டும் என்பதற்கும் வள்ளுவர் இலக்கணம் வகுத்துள்ளார். குறைவில்லாத விளைபொருள்களை விளைவிப்போரும், அறவழியில் ஒழுகுவோரும், குறைவில்லாத செல்வம் உடையோரும் சேர்ந்து வாழும் இடமே நாடு என்பதனையும் அறியலாம்.

**அரசனது தொழில்**

அரசனது தொழில் என்பது மக்களை துன்பப்படாமல் காத்தல் ஆகும். காக்கும் தொழிலை செய்பவன் மன்னன் ஆவான். மக்களது குற்றங்களைத் தண்டனையின் மூலம் நீக்குதல் என்பது அரசனுக்கு பழியல்ல அது அவனுடைய தொழிலாகும். இச்செய்தியினை,

**“குடிபுறம் காத்தோம்பிக் குற்றம் கடிதல்**
**வடுவன்று வேந்தன் தொழில்”**

என்னும் குறள் உணர்த்தி நிற்கின்றது. இதனை உணர்த்தும் விதமாக சிறுபஞ்சமூலம் ஆசிரியரும்

**“வாட்டான்நன் றென்றல் வனப்பு” (சிறுபஞ்சமூலம் - 7)**

என்ற வரியலன் மூலம் தன் கருத்தை பதிவு செய்திருக்கின்றார். அரசனுக்கு அழகு இந்த நாட்டில் உள்ள மக்களை வருத்தாமல் காப்பது என்ற கருத்தை வள்ளுவரின் கருத்தொடு ஒன்றிணைகிறார் காரியாசான்.

**அரசர்களுள் சிறந்தவர்**

பேரரசன் என்பவனை வள்ளுவர் தம் குறட்பாவில் அரசர்களுக்கெல்லாம் அரசன் என்று கூறுகிறார். நீதி நெறியிலிருந்து வழுவாமல் அறவழியல் ஆட்சிபுரிந்து தம் மக்களையும் வருத்தாமல் காக்கின்ற அரசன் மனிதகுலத்தில் பிறந்தாலும் தெய்வத்தன்மையுடையவனாகக் கருதப்படுவான் என்று வள்ளுவர் தம் குறட்பாவின் மூலம் உணர்த்துகிறார்.

**“முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு**
**இறைஎன்று வைக்கப் படும்.”**

என்ற குறளின் மூலம் மன்னர்களில் சிறந்தவன் ஆட்சி புரியும் தன்மையை அடையாளப்படுத்துகின்றது.

**கொடுங்கோல் ஆட்சி**

கொடுங்கோல் ஆட்சி என்பது மக்களின் நலனை கருத்தில் கொள்ளாமல் ஆட்சிபுரிவதைக் குறிப்பதாகும். மக்கள் வருத்தப்படுமாறு அவர்கள் மீது மிகுந்த வரியினை செலுத்துதல், மழையில்லா காலத்திலும் வரிசெலுத்தக்கூறுதல், விளைபொருட்களில் மூன்றில் இருபங்கினை வரியாக பெறுதல் போன்ற இறக்கமற்ற செய்கைகளை செய்பவனை கொடுங்கோலன் என்றனர். வள்ளுவரும் தம் குறட்பாவில் கொடுங்கோன்மை பற்றி,

**“வேலொடு நின்றான் இடுஎன் றதுபோலும்**
**கோலொடு நின்றான் இரவு.” (குறள் - 552)**

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

என்னும் பாடலில் அரசனை வழிப்பறி செய்வோனுடன் ஒப்பிட்டுக் கூறுகிறார் வள்ளுவர். செங்கோலை கையில் ஏந்தி மக்களிடம் அதிக பொருளை வரியாக வாங்கும் அரசன், வழிப்பறிசெய்யும் கள்வர்களுக்கு ஒப்பாவான் என்ற கருத்தை வழியுறுத்தும் விதமாக அமைந்துள்ளது. இக்கருத்தினை யானை புக்க புலமபோலத் தானும் உண்ணா உலகமும் கெடுமே என்ற புறநானூற்று வரிகளின் மூலம் எடுத்துரைக்கின்றது.

**ஒற்றன்**

ஒற்றன் என்பவன் ஒற்று ஆய்ந்து தன் நாட்டிற்கு வரும் ஆபத்தை முன்கூட்டியே அரசனுக்கு உரைப்பவன் ஆவான். ஒற்றனுக்குரிய ஒழுக்கமும், அவன் எவ்வாறு ஒற்றாராயிதல் வேண்டும் என்ற செய்தியும் திருக்குறளில் இடம்பெற்றுள்ளது. ஒற்றன் என்பவன் யாரும் அறியாதவாறு மக்களோடு மக்களாகவும், துறவி போல் வேடம் புனைந்தும் இருக்கவேண்டும். அவ்வாறு மக்களோடு ஒன்றியிருந்தால் மட்டுமே செய்திகளை தெளிவாக அறியமுடியும் என்பதனை,

**“துறந்தார் படிவத்த ராகி இறந்தாராய்ந்து**
**என்செயினும் சோர்விலது ஒற்று”. (குறள் - 586)**

என்ற குறள் துறவி போல் தவக்கோலம் பூண்டு புகுதற்கரிய இடங்களில் எல்லாம் புகுந்து ஆராய்ந்து கூறவேண்டும். தன் மேல் சந்தேகம் கொண்டு தன்னை எவ்வளவு துன்புறுத்தினும் மனம் தளராது இருப்பவனே சிறந்த ஒற்றன் என்பது குறள் கூறும் கருத்து ஆகும். அரசனும் ஒற்றனுக்கு தான் செய்யும் சிறப்புக்களை மற்றவர் அறியாதவாறு சிறப்பு செய்யவேண்டும். அவன் மற்றவர் அறியும்படி சிறப்பு செய்தால் மற்றவர்களுக்கு அவனே ஒற்றனைக் காட்டிக்கொடுத்தல் போல் ஆகும். எனவே அவ்வாறு செய்தல் கூடாது என்று சில இடங்களில் அரசனுக்கு புலவர்கள் அறிவுரை கூறும் விதமாகவும் சங்க இலக்கிய பாடல்கள் அமைந்துள்ளன.

**தூது**

தூது என்பது ஒரு செய்தியை ஒரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு அனுப்புவது ஆகும். இதனை இரண்டு வகைப்படுத்தலாம், அவை அகத்தூது, புறத்தூது ஆகும். அகத்தூது என்பது தலைவன், தலைவி இருவரிடையே நிகழ்வது. புறத்தூது அரசர்களுக்கிடையே, அல்லது அரசாங்கத்திற்கிடையே நிகழ்வதாகும்.

**“விடுமாற்றம் வேந்தர்க்கு உரைப்பான் வடுமாற்றம்**
**வாய்சோரா வன்க ணவன்” (குறள் - 689)**

வாய் தவறியும் இழிவான சொற்களைச் சொல்லாத உறுதியுடையவனே, தன் அரசன் கூறிய செய்தியை சிறிதும் மாற்றாமல் கூறுவான் என்ற கருத்தினை வெளிப்படுத்தும் விதமாக இப்பாடல் அமைந்துள்ளது. எனவே ஒற்றன் என்பவன் எதனையும் திரித்து சொல்லும் பண்பு கொண்டவனாக இருக்கக் கூடாது. எவ்வளவு துன்பம் ஏற்படினும் தன் நிலையிலிருந்து மாறாதவர்களாக இருக்க வேண்டும்.

**போர்**

போர் என்பது இருநாட்டு அரசர்களிடையே மன்னாசை காரணமாகவும், பொன்னாசை காரணமாகவும், பெண்ணாசை காரணமாகவும், நடைபெறும் சண்டையினை கூறலாம். இரண்டு மன்னர்களும் வெற்றி ஒன்றினையே குறிக்கோளாக கொண்டு போரிடுதல் ஆகும். பகைவர்களை வளைத்துப் போர் புரிவதற்கு ஏற்ற இடம் காண்பதற்கு முன் அவர்கள் மேல் எவ்வித மோதலையும் தொடங்குதல் கூடாது. பகைவரை எக்காரணம் கொண்டும் குறைத்து மதிப்பிடல் கூடாது. வெற்றிக்கு இடம் தேர்ந்தெடுத்தல் இன்றியமையாதது, என்ற கருத்தினை வள்ளுவர் பின்வருமாறு கூறியுள்ளார்.

**“தொடங்கற்க எவ்வினையும் எள்ளற்க முற்றும்**
**இடம்கண்ட பின்னல் லது”. (குறள் - 491)**

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

சங்க காலத்தில் அரசன் போரிடுவதற்கு முன் தன் நாட்டு மக்களையும், ஆநிரைகளையும், நோய்வாய்ப்பட்டோரையும் பாதுகாத்து பின்பு போரிடச்செல்வான். ஒரு நாட்டின் மீது போரிடுவதற்கு முன்பு பகைநாட்டு மன்னனுக்கு தன் தூதுவன் மூலம் செய்தி அனுப்புவான். ஆனால் இன்று எந்நாட்டு அரசும் முன்னறிவிப்பு கொடுப்பதில்லை. தன்னுடைய தாக்குதலை எந்தவித முன்னறிவிப்புமின்றி திடீரென்று நடத்துகின்றனர். அவர்களின் முதல் நோக்கமே மக்களை பிணையமாக வைப்பது தான் எனலாம்.

**நடுகல் வணக்கம்**

நடுகல் வணக்கம் என்பது போரில் இறந்த வீர மறவர்களின் நினைவாக கல்லினை நட்டு வழிபடும் முறையே நடுகல் வணக்கம் ஆகும். போர் வந்த போது உயிர்விட அஞ்சாமல் துணிவுடன் போர் செய்யும் வீரர், அரசரே சினம் கொண்டாலும் தம்முடைய சிறப்புக் குன்றாதவர் என்று வீரமறவர்களை வள்ளுவர் சிறப்பித்துக் கூறியுள்ளார்.

**"உயின்உயிர் அஞ்சா மறவர் இறைவன்**
**செறினும்சீர் குன்றல் இலர்" (குறள் - 778)**

பகைமன்னர்களிடம் தூது செல்லும் புலவர்கள் தம் மன்னனின் சிறப்பைக் கூறும் பொழுது அவன் செய்த போரினையும் கூறுவர். அவ்வாறு கூறும் பொழுது பகைவர்களே எம் தலைவனை எதிர்த்து முன்னே நிற்காதீர்கள். என் தலைவனை எதிர்த்து நின்று மடிந்து நடுகல்லாய் நின்றவர் பலர் என்ற செய்தியும் வள்ளுவத்தில் இடம் பெற்றுள்ளது.

**"என்னைமுன் நில்லன்மின் தெவ்விர் பலர்என்னை**
**முன்நின்று கல்நின் றவர்" (குறள் - 771)**

பண்டைத்தமிழர்கள் அறச்செலிற்கு எவ்வளவு முன்னுரிமை கொடுத்தனரோ அதே அளவிற்கு வீரத்திற்கும் முன்னுரிமை கொடுத்துள்ளனர். வீரமில்லாதவனை கோழையாக கருதும் வழக்கம் அன்று முதல் இன்று வரை சமூகத்தில் நிலைபெற்றுள்ள கருத்தாகும்.

**முடிவுரை**

- ➢ தன் நாட்டிற்கு வரும் ஆபத்தை முன்கூட்டியே அறிவதற்கு ஒற்றராய்தல் முறை என்ற ஒன்று அன்று முதல் இன்று வரை ஒவ்வொரு நாட்டிலும் நிலவிவரும் ஒரு சூழல் என்பதை வள்ளுவர் வழி அறியமுடிகிறது.
- ➢ தற்போதைய அரசியல் முறை (மத்திய, மாநில) போன்று பாண்டைய காலத்திலும் பேரரசன், சிற்றரசன் என பிரிந்து ஆட்சிபுரிந்ததையும் அறியலாம். இக்கட்டுரையின் மூலம் வள்ளுவர் கால அரசியல் நிலையை அறியமுடிகிறது.

**துணைநூல்கள்**

1. இரா. இளங்குமரனார், தொல்காப்பியம் தெளிவுரை, நான்காம் தமிழ்ச்சங்கம், 2018.
2. நா. கதிரை வேற்பிள்ளை, தமிழ் மொழி அகராதி, சாரதா பதிப்பகம்இ 2011.
3. க்ரியா, க்ரியாவின் தற்கால தமிழ் அகராதி, 1992.
4. செந்தமிழறிஞர் மாருதிதாசன், நர்மதாவின் தமிழ் அகராதி, நர்மதா பதிப்பகம், 2015.
5. இராஜமுத்திருளாண்டி, இலக்கியத்தின் மனித உரிமைகள, குமரன் பதிப்பகம், 2008.
6. மு.வரதராசனார், தமிழ் இலக்கிய வரலாறு, சாகித்ய அகாதமி, 2010.
7. யாழ். சு. சந்திரா, சிறுபஞ்சமூலம், செல்லப்பா பதிப்பகம், 2011.
8. அ. மாணிக்கம், திருக்குறள், தென்றல் நிலையம், 2013.
9. ஒளவை சு. துரைச்சாமி பிள்ளை, புறநானூறு, சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம், 2007.

**E-ISSN: 2581-7140**
**Special Issue I, August-2019** **Available at: www.ijtlls.com**

# வள்ளுவத்தில் பெண்கள்

## Women in Valluvam

**வே.நித்யப்பிரியா,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழியற்புலம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை-21.

## Abstract

*The paper unfolds on the theme 'women' as portrayed in Thiruvalluvar's "Thirukkural". It is considered as a diadactic work in any dimension. The need of writing such works are vital in all times. Valluvar's time is also a one which gave more importance to morals. Society was structured into a dominion of virtues. People were of good sense and most of them deployed just ways in their lives. In society, Women is considered as a divine one and her morals are considered as the karmic effect in one's life. Woman's life is considered as noble and maintained the perfection of her virtues. Her life from her birth and to her death is a saga in Tamil society. Therefore, the paper brings down the details found in "Thirukkural".*

**Keywords:** Women in Valluvam, Thiruvalluvar, Times of Thiruvalluvar

**முன்னுரை**

*திருக்குறள், பதினென்கீழ்கணக்கு* நூல்களில் ஒன்று. இது அறத்தை வழியுறுத்தும் நூல் என்றும் கூறலாம். திருக்குறள் முதலான அற இலக்கியங்கள் தோன்றுவதற்கும் அதற்கு பின்னால் தோன்றிய பிற்கால நீதி நூல்கள் தோன்றியதற்கும் அக்காலக்கட்டத்தின் பிரதிபலிப்பு எனலாம். இலக்கியம் ஒவ்வொரு காலக்கட்டத்திற்கும் ஏற்றவாறு ஒரே பொருண்மையில் அமைவதற்கு முக்கியக்காரணம் காலத்தின் தேவையாகும். அதாவது அக்காலக்கட்டத்தில் வாழும் மக்களின் தேவையை மையமிட்டது என்றே கூறலாம். இவ்வாறு சங்கமருவியக்காலத்தில் ஏற்பட்ட மக்களின் ஒழுக்க நிலையை மேம்படுத்துவதற்காகவே பிற்காலத்தில் அற இலக்கியம் தோன்றியிருக்கலாம் என்று உணரமுடிகின்றது. திருக்குறளை எந்த நிலையிலிருந்து பார்த்தாலும் அதாவது எந்த நோக்கில் ஆராய்ந்தாலும் அதற்கான பொருளைத் தரும் என்பதே நிதர்சனமான உண்மை. இத்தகையக் கண்ணோட்டத்துடன் திருவள்ளுவர் திருக்குறளில் பெண்ணை எத்தகைய நிலையுடன் பார்க்கின்றார் என்பதை ஆராய்வதே இக்கட்டுரையாகும்.

**வள்ளுவம் - பெண்**

பெண்ணின் நிலை காலத்திற்கு தகுந்தாற் போல் மாற்றம் பெற்று வந்துள்ளது. பெண் என்பவளை போற்றிப்புகழ்ந்த காலமும் உண்டு போகப்பொருளாக தூற்றி எறிந்த காலமும் உண்டு. இவையனைத்துமே சூழலை மையமிட்டது என்றே கூறலாம். மன்னர்களின் ஆட்சி மாற்றம், மக்களின் பொருளாதாரக் கட்டமைப்பு என மாற்றங்களுக்கு ஏற்ப பெண்ணின் சமூகமதிப்பு மாற்றம் பெற்று வருகின்றது. அச்சமும், நாணமும், மடனும், பகிர்ப்பு என பெண்ணுக்கான குணங்களாக வரையறுத்தார் தொல்காப்பியர். பின் சங்ககாலத்தில் சற்று மாறுப்பட்டு பெண்ணைத் தலைமைப்பாத்திரமாகக் கொண்டு தலைவி, நற்றாய், தோழி, செவிலி, பரத்தை என்ற கட்டமைப்பில் வைத்து பார்த்த நிலையும், அதற்கு பிற்பட்ட

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

காலங்களில் எல்லாம் அதற்கான நிலை வேறு வேறாக மாற்றமடைந்தது எனலாம். தாய்வழிச்சமூகத்தில் தொடங்கிய பெண்ணுக்கான சமுதாய வெளி பின்னர் புகை, மது, மாது அசைவம் அனைத்திற்குள்ளும் அடக்கப்பட்ட போகப் பொருளாக கொண்டு செல்லும் நிலைக்கு பெண்கள் தள்ளப்பட்டனர். நீதி இலக்கியம் உருவான நிலையும் இதற்காக மட்டுமே இருக்கமுடியும். சமூகத்தில் அந்தி பல்கிபெருகிய காரணத்தால் அதை கட்டுக்குள் கொண்டு வரும் நோக்கில் எழுந்திருக்கலாம். இவ்வாறு பெண்ணுக்கான சுதந்திரப் போக்கு இல்லாத காலங்களுக்கு பின்னர் தோன்றிய இலக்கியப் படைப்புகளில் பெண்ணுக்கு உரிமை வேண்டும் என பல கவிஞர்கள் கவிகளைப் பாடியுள்ளார்கள். இதை பாரதியார் தம் பாடல்களில்,

**“ஆணும் பெண்ணும் நிகரெனக் கொள்வதால்**
**அறவி லோங்கி இவ் வையம் தழைக்குமாம். (புதுமைப்பெண்)**
**பெண்மை வாழ்கென்று கூத்திடு வோமடா!**
**பெண்மை வெல்கென்று கூத்திடுவோமடா! (பெண்மை)**
**ஏட்டையும் பெண்கள் தொடுவது தீமையென்**
**றெண்ணி யிருந்தவர் மாய்ந்து விட்டார்.**
**வீட்டுக் குள்ளே பெண்ணைப் பூட்டிவைப் போமென்ற**
**விந்தை மனிதர் தலை கவிழ்ந்தார் கும்மி (பெண் விடுதலைக் கும்மி)**
**பட்டங்கள் ஆள்வதுஞ் சட்டங்கள் செய்வதும்**
**பாரினில் பெண்கள் நடத்த வந்தோம்.” (பெண் விடுதலைக் கும்மி)**

இவ்வாறு பெண்ணை முன்னிருத்தி அவர்களின் தேவையும், அவர் இவ்வாறெல்லாம் இருக்க வேண்டுமென அறிவுறுத்துகிறார், எனில் அவருக்கு முற்பட்டக் காலங்களில் அதற்கான மாறுபட்ட சூழல் நிலவிவந்துள்ளது என்றே கூற முடிகின்றது. இதே நிலைதான் இன்று வரை நீடிக்கிறது.

திருவள்ளுவர் இருநிலையில் பெண்களை அனுகியுள்ளார் எனலாம் ஒன்று இல்வாழ்க்கை மகளீர் மற்றொருவர் அறநிலையிலிருந்து சற்று குறைந்தவர்கள் என்ற நிலையில் கையாண்டுள்ளார். அறம், பொருள், இன்பம் என்ற மூன்று இயல்களில் ஒவ்வொரு இயல்களுக்கு தகுந்தவாறு பெண்ணை திருவள்ளுவர் முன்னிலைப்படுத்துகின்றார். சில இயல்களின் தலைப்பும் பெண்ணுக்கானதாக அமையப்பெற்றுள்ளது. எடுத்துக்காட்டாக பெண்வழிச்சேறல், வரைவின் மகளீர் என சில அதிகாரங்களில் குறிப்பிடுகின்றார். இல்வாழ்க்கை என்னும் அதிகாரத்தில் உள்ள பத்து குறளிலும் ஆண்மகன் இல்வாழ்கையில் எவ்வாறெல்லாம் இருந்தால் இல்லறவாழ்க்கை சிறக்கும் என்பதைக் குறிப்பிடுக்கின்றார்.

**“இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்**
**நல்லாற்றின் நின்ற துணை” (இல்லறம்-41)**

இல்லறத்தோடு கூடி வாழ்வான் என்று சொல்லப்படுவான், இயல்புடைய மூவருக்கும் நல் ஆற்றின் நின்ற துணைஅற இயல்புடைய மூவருக்கும் அவர் சொல்லும் நல்லொழுக்க நெறிக்கண் நிலைபெற்ற துணை ஆம் இதில் மூவர்க்கும் என்றும் குறிப்பிடும் இடத்தில் பெற்றோர், மனைவி, குழந்தைகள் என மூவருக்கும் துணையாக இருப்பது இல்லறத்தில் ஆண்மகனின் கடமையாகும் என்னும் பொருள் ஆண், பெண்ணுக்கு காவலானவனையும் ஆணுக்கு அடுத்த நிலையில் பெண் என்ற நிலை என்பதை அறியமுடிக்கின்றது. இந்த இயல் முழுவதும் இல்லறத்தில் எவ்வாறெல்லாம் செயல்பட வேண்டும் என்பதை தெளிவாக விளக்கின்றார். மேலும் வாழ்க்கை துணை நலம் என்னும் அதிகாரத்தில்,

**“மனைத்தக்க மாண்புடையாள் ஆகித்தற் கொண்டான்**
**வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.” (51)**

இல்வாழ்க்கைக்கு ஏற்ற நற்பண்பு உடையவளாகித் தன் கணவனுடைய பொருள் வளத்துக்குத் தக்க வாழ்க்கை நடத்துகிறவளே வாழ்க்கைத்துணை ஆவாள் என்கின்ற

**E-ISSN: 2581-7140**
**Special Issue I, August-2019** **Available at: www.ijtlls.com**

பொருண்மை ஆண்மகன் பொருள் ஈட்டுபவனாகவும், அத்தகையப் பொருள் செல்வத்தை வைத்து குடும்பத்தை வழிநடத்துபவளாக மட்டும்மே பெண் காட்டப்பட்டுள்ளார். தொடக்கக்காலத்தில் தாய்வழிச் சமூகச்சூழல் நிலவும் பொழுது ஆண் மகனுக்கான நிலையை விட பெண்ணுக்கான தலைமைப் பண்பு அதிகம். ஆணுக்கு சரிநிகராக வேட்டையாடி உணவு சேகரித்து வாழ்ந்த சூழல் நம்மிடமிருந்த பழக்கவழக்கத்தில் ஒன்று தான். காலநிலை மாற்றத்தில் மனைக்கு அழகாக மட்டுமே பெண் என்ற போக்கு உருவெடுக்க ஆரம்பித்தது அதை மையமிட்டதாகவே திருவள்ளுவர் கூறிப்பிடும் சில குறள்களும் அமைந்துள்ளது. அதே போல் ‘‘கற்பு’’ என்னும் கொள்கை முன்னிலைப்படுத்தப்படுவதையும் காணலாம்.

**‘‘பெண்ணின் பெருத்தக்க யாவுள கற்பென்னும்**
**திண்மை உண்டாகப் பெறின்’’ (54)**

இல்வாழ்க்கையில் கற்பு என்னும் உறுதிநிலை இருக்கப் பெற்றால் பெண்ணைவிட பெருமையுடையவை வேறென்ன இருக்கின்றது. என்று வள்ளுவர் கற்பை முன்னிலைப் படுத்துகின்றார். மேலும் கடவுளைத் தெய்வமாக தொழுது வாழ்பவள் மழை பெய் என்று சொன்னால் கூட பெய்யுமாம் என்றும், கணவனைப் பாதுகாத்து அவருக்கான புகழை பெற்றுத்தருதல் பெண்ணுக்கான குணங்களே அய்யன் வரிசைப்படுத்துகின்றார். பின்னர் அமைந்த அதிகாரங்களானப் புதல்வரை பெறுதலில் கூட பெண்ணுக்கான தனிப்பட்டக் குறள் எதுவுமின்றி பொதுதன்மையிலேயே எடுத்துரைக்கின்றார் இந்த அதிகாரத்தை அடுத்து அமைந்துள்ள விருந்தோம்பல் அதிகாரத்தில்,

**‘‘அகனமர்ந்து செய்யான் உறையும் முகனமர்ந்து**
**நல்விருந்து ஓம்புவான் இல்’’ (84)**

நல்ல விருந்தினராய் வந்தவரை முகமலர்ச்சி கொண்டு போற்றுகின்றவனுடைய வீட்டில் மனமகிழ்ச்சியும், திருமகளும் வாழ்வாள், என்னும் குறளின் விளக்கத்தில் போற்றுகின்றவன் என்று குறிப்பிடுவது கூட ஆண்மகனை மட்டுமே குறிப்பிடுக்கின்றார். இந்த அதிகாரத்திலும் பெண்ணுக்கான இடம் என்பது முற்றிலுமாக இல்லை என்றே கூறலாம். வீட்டிற்கு வருபவர்களை உபசரிக்கக் கூடியவள் பெண், ஆனால் பெண்ணை முன்னிலைப் படுத்தாமல் ஆணை முன்னிலைப் படுத்திய நிலை சிறிது சிந்திக்கத்தக்கதாக உள்ளது. இதே போல் பொருளதிகாரத்தில் வினைத்தூய்மை என்னும் அதிகாரத்தில்,

**‘‘துணைநலம் ஆக்கம் தருஉம் வினைநலம்**
**வேண்டிய எல்லாந் தரும்.’’ (651)**

ஒருவனுக்கு கிடைக்கும் துணையின் நலம் அவனுக்கு ஆக்கத்தைக் கொடுக்கும் அது போல அவன் செய்யும் வினை அவன் விரும்பிய எல்லாவற்றையும் கொடுக்கும். இங்கும் பெண்ணுக்கான நிலை ஆணுக்கான துணையாகவே கூறப்பட்டுள்ளது. இதே தாய்வழிச்சமூகத்தில் ஆடவருக்குப் பணிந்து நடக்கும்படி பெண்கள் கடவுளாற் படைக்கப்பட்டுள்ளார்கள் என்றும் அவர்கள் ஆண்களுக்குப் பணிந்து நடத்தலே இயற்கை விதியென்றும் நம்பப்பட்டு வருகின்றன. இதனால் ஆடவர் ஆளவும் பெண்கள் ஆளப்படவும் பிறதார்கள் என்னும் தவறான கருத்து மக்கட் சமூகங்களிடையே தோன்றி வலுவடைந்துள்ளது.’’ எனக் (ந.சி.க நூல்திரட்டு 5, பக்-3) குறிப்பிடுகின்றார். பெண் எத்தனை ஆண்களை வேண்டுமானலும் திருமணம் முடிக்கலாம், பெண்கள் வாரிசுக்காக ஆண்களை நாடியநிலை, தந்தையின் சொத்து மகனுக்கு கிடையாது தன்னுடை தங்கை அல்லது அக்காவின் குழந்தைகளுக்கு என பல்வேறு மாறுபட்ட ஒழுக்கலாறுகள் பின்பற்றப்பட்டுவந்துள்ளன. ஆனால் பின்னர் பயிர் தொழிலை ஏர் பிடித்து செய்து அதிக மகசூலை தரமுடிந்தது. சில காரணங்களால் பெண் வீட்டிலிருந்தால் தங்களுடைய அழகை மேம்படுத்த முடியும் என்பதற்காகவும், குழந்தைகள் பெற்று வழுவிலந்த உடல்தன்மை என்று காலச்சூழ்நிலை பெண்ணை வீட்டுக்குள் அடக்கும் நிலைக்கு தள்ளிவிட்டது.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**“கருமத்தால் நாணுதல் நாணுந்திருநுதல்**
**நல்லவர் நாணுப் பிற”** (1011)

நாணுதல் என்பது பெண்ணுக்கான குணமாக தொல்காப்பியர் தொல்காப்பியத்தில் குறிப்பிடுகின்றார். ஆனால் திருவள்ளுவர் தகாத நடத்தையில் ஈடுபட்டவனிடம் தான் நாணுதல் இருக்கும் என்று கூறி பின்னர் திருநுதல் அதாவது பெண் நாணும் நாணுதல் வேறு வகை என்று வேறுபடுத்துகின்றார். கேள்விக்கான இடத்தையும் கொடுத்து அதற்கான தீர்வையும் குறளிலேகொடுத்துள்ளார். வெட்கத்திலே அது வேறு வகையான வெட்கம் இது வேறு வகையான வெட்கம் என்று பிரித்துக்கூறியிருக்கின்றார்.

**“கண்டுகேட்டு உண்டுயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்**
**ஒண்தொடி கண்ணே உள.”** (1101)

இக்குறளில் பெண் எதற்கானவள் என்பதைக் கூறுமிடத்து விழியால் பார்த்து, செவியால் கேட்டு, நாவால் உண்டு, மூக்கால் முகர்ந்து உடம்பால் தீண்டி என் ஐம்பொறிகளாலும் அனுபவிக்கப்படும் இன்பம் ஒளிமிக்க வளையல்களை அணிந்த மனைவியிடம் மட்டுமே உண்டு எனக் கூறும் வள்ளுவர் பெண்னென்பவள் ஆடவர்க்கு கட்டுப்பட்டவளாக குறிப்பிடுகின்றார். அதே போல் காமத்து பாலில் உள்ள நலம்புணைந்துரைத்தல் என்னும் அதிகாரத்தில் பெண்ணுக்கான அழகை மேம்படுத்தி கூறுகின்றார்.

**“சாயலும் நாணும் அவர்கொண்டார் கைம்மாறா**
**நோயும் பசலையும் தந்து.”** (1183)

காமநோயையும், பசலையையும் எனக்கு தந்துவிட்டு என் சாயலையும் நாணத்தையும் அவர் எடுத்து சென்றுவிட்டார். என்னும் குறளில் நாணத்தை பெண்ணுக்கான குணமாக தெளிவாக குறிப்பிடுகின்றார். இவ்வியல் முழுவதும் காமத்தில் ஆண் பெண்ணுக்கான குணமாக தெளிவாக குறிப்பிடுகின்றார். இப்பால் முழுவதும் காமத்தில் ஆண் பெண்ணுக்கான நிலையை விவரிப்பதாக உள்ளது. இங்கு ஆண் பெண்ணுக்கானவள் என்று ஆணித்தரமாகவும், ஆணின் தேவைகான பொருளாக பெண் பார்க்கப்படுவதை விவிரிக்கின்றது. ஆனால் சில இடங்களில் பெண்ணுக்கான குரல் காணப்படுகின்றது அவை,

**“ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும் தன்மகனைச்**
**சான்றோன் எனக்கேட்ட தாய்”** (69)

தன் மகனை நற்பண்பு நிறைந்தவன் என பிறர் சொல்லக் கேள்வியுற்ற தாய், தான் அவளை பெற்றக் காலத்தில் உற்ற மகிழ்ச்சியை விடப் பெரிதும் மகிழ்வாள் இவ்வாறு ஈன்ற குழந்தை சான்றோரிடத்தில் ஈட்டித் தரும் மகிழ்ச்சி பெண்ணுக்கு பெருமை என்று குறிப்பிடுகின்றார்.

**முடிவுரை**

திருக்குறள் உலகம் போற்றும் பொதுமறையாகும். அத்தகைய சிறப்புமிக்க திருக்குறளில் அநேக இடங்களில் ஒரு ஆணுக்கான குறளாக காணமுடிக்கின்றது. ஏன் என்றால் மாசிலன், ஊர்ந்தான், அறத்தான், இல்வாழ்வான், வாழ்பவன், வினையான் ஓம்புவான் முகத்தான், இன்சொல்லன் என்ன குறள் முழுவதும் ஆணுக்கானதாக பெருகி காணப்படுகின்றது. சிற்சில இடங்களில மட்டுமே பெண்ணுக்கான நிலையை விவரிக்கும் இடங்களாக உள்ளன. அவை அக்காலக்கட்ட பெண்ணின் நிலையை வெளிப்படுத்துவதாக இருக்காலம் என்பதே உண்மை எனலாம்.

**நூல்கள்**

1. மு.வரதராசனார், தமிழ் இலக்கிய வரலாறு, சாகித்ய அகாதமி, 2010.
2. அ. மாணிக்கம், திருக்குறள், தென்றல் நிலையம், 2013.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies 
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140

Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

# உழவர் குலப் பண்பாடு

# The Tradition of the Farming People

சு. பாண்டி, முனைவர் பட்ட ஆய்வாளர்,
சைவ சித்தாந்தத் தத்துவத்துறை, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை.

## Abstract

*The research paper brings out the culture of the farming people. The facts related to the life, occupation, independent farm, dedication and hard work of the farming sect are given as examples with the evidences accumulated from "Thirukkural". For a society, food is considered essential and the pele who are doing is also essential. Tamil society gave more importance to agricultural folks because of their dedication in farming and their service to society. Valluvar has portrayed the qualitu of those men in his kurals. Hence, the paper brings down the facts related to the cultivating people found in "Thirukkural".*

**Keywords:** Tradition, Farming People, *Thirukkural*

### முன்னுரை

மனிதர்களின் வாழ்வியல் முறைகள் பழக்க வழக்கங்களின் அடிப்படையில் தோன்றியவையாகும். உணவு, உடை, உறைவிடம், மொழி, கல்வி, கலைகள், விருந்தோம்பல், நீதிநெறிமுறைகள், ஆட்சிச் சிறப்புக்கள், தலைவன், தலைவி வாழ்வியல் முறைகள் ஆகிய அனைத்தும் மனிதர்களின் சிறந்த பண்பாட்டில் வளர்ந்தவையாகும். தமிழர்களின் பண்பாட்டுச் சிறப்புக்களை சான்றோர்கள் பலர் அறிந்து பதிவு செய்துள்ளனர். தெய்வப்புலவர் திருவள்ளுவர் அறம், பொருள், இன்பம் என்னும் முப்பொருள் பண்பாட்டுச் சிறப்புக்கைள பதிவு செய்துள்ளார். பண்பாடு சிறந்து விளங்க உணவே அடிப்படையாகும். உணவை உற்பத்தி செய்பவர்கள் உழவர்கள் ஆவர். உழவர்களின் பண்பாட்டுச் சிறப்புக்களை சான்றோர்கள் பலர் பதிவு செய்துள்ளனர். இவற்றுள் திருவள்ளுவர் கூறும் உழவர் குலப் பண்பாட்டுச் சிறப்புக்களை இவ்வாய்வுக் கட்டுரை விளக்குகின்றது.

### மருத நிலமும் மள்ளர் குலமும்

தமிழக நிலம் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என அமைந்திருந்ததை பழந்தமிழ்ப் பாடல்கள் பதிவு செய்துள்ளன. மருதநிலம் வயலும் வயல் சார்ந்த இடமாக அமைந்துள்ளது. இயற்கையான ஆறுகள், குளங்கள், பொய்கை இவற்றுள் மருத மரங்கள் அமைந்த பகுதி மருத நிலமாகும். மருத நிலத்தில் செந்நெல், செங்கரும்பு, செங்கனிகள், செம்மலர்கள் ஆகியவற்றை விளைவித்தவர்கள் உழவர்களாகிய மள்ளர்கள் ஆவர். உழவன், உழத்தி, குடும்பன், மன்னன், மள்ளன், பள்ளன், வேந்தன் இவை குலப்பெயர்களாகவும், ஆத்தாப் பள்ளன், அம்மாப் பள்ளன், ஆயாப்பள்ளன், காலாடி, பண்ணாடி, கடையன், வாதிரியன், மூப்பன் ஆகியவை மள்ளர் குலத்தின் உட்பிரிவுகளாகவும் அமைந்துள்ளன. மள்ளர்கள் காவேரி, வைகை, தாமிரபரணி ஆற்றுப்பகுதியில் வாழ்ந்து வருபவர்கள். மருத நிலத்தை ஆட்சி செய்தவர்கள் மள்ளர்களான சேர, சோழ, பாண்டியர்கள் ஆவர்.
தொல்காப்பியத்தில்,

**'வேந்தன் மேய தீம்புனல் உலம்'** -தொல்.அகம். 951

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

எனத் தொல்காப்பியர் மருத நிலம், மருத நிலத்தின் வேந்தனின் சிறப்பை பதிவு செய்துள்ளார்.

மள்ளர்களின் சிறப்பை,

**"அருந்திறல் வீரர்க்கும் பெருந்திறல் உழவர்க்கும்**
**வருந்தகைத்தாகும் மள்ளரெனும் பெயர" - திவாகர நிகண்டு**
**"செருமலை வீரருந் திண்ணியோரும்**
**மருதநில மக்களும் மள்ளரென்ப" - பிங்கல நிகண்டு**

என்று 9, 10 –ம் நூற்றாண்டுகளைச் சேர்ந்த நிகண்டுகள், உழவர்களாகிய மள்ளர்களின் சிறப்பை பதிவு செய்துள்ளன.

மள்ளர் குலத்தின் சிறப்புக்களை,

**கவிகை மள்ளன் கைபட்டோரே - புறம். 8 : 5**
**களம் கொள் மள்ளரின் முழங்கும் அத்தம் - அகம். 227: 11**
**இனம் தேர் உழவர் இன்குரல் இயம்ப - அகம் . 314: 4**
**தார் புரிந்தன்ன வாளுடை விழவின்**
**போர்படு மள்ளர் போந்தொடு தொடுத்த - பதிற்றுப்பத்து : 63:13**
**மள்ளர்கள் மறுபடை மான யானைமேல்**
**வெள்ளிவேல் எறிவன போன்ற மேகங்கள் - கம்பராமாயணம் -4164**
**கொன்றவன் வேழும் வீழ்ப்ப மற்றுமோர் களிற்றிற் பாய்ந்து**
**நின்ற மாமள்ளர் கெல்லா நீண்முடி யிலக்க மானான் - சீவகசிந்தாமணி . 286**

எனப் பழந்தமிழ்ச் சான்றோர்கள் மள்ளர்களின் சிறப்புக்களை தெளிவாக உணர்த்தியுள்ளனர்.

தந்தை, தாய், குரு, தெய்வம், செந்தமிழ் மன்னர்களான சேர, சோழ, பாண்டியர்களை மதித்து, மற்றவர்களை மதிக்காமல் யாருக்கும் அடிபணியாத தேவேந்திரகுலத்தை,

**தந்தைதாய் குரு தெய்வமுஞ் செந்தமிழ்ப் பூசுரரின்றி**
**சதிராய்ப் பின்னுள்ளோர்களை மதியாதவன்**
**இந்திரன் குலத் தோன்றிய வந்த நாள் முதலாகவே**
**இலகுமேழூர்க் குடும்பன் நானே யாண்டே** - கட்டிமசிபன், பள்ளு – பாடல் - 14

என்று மள்ளர்கள் யாருக்கும் அடிபணியாமல் இருந்த சிறப்பைக் காணமுடிகின்றது.

மள்ளர்கள் சொந்தப் பண்ணை வைத்திருந்த செய்தியை,

**பைந்தமிழ் நன்னகர் தன்னிற்**
**சொந்தமாக வைத்த பண்ணைப்**
**பள்ளர் எங்கள் தாய்வழியும் தந்தைவழியும் -** திருமலைமுருகன் பள்ளு ப-14

பண்ணை வைத்திருந்த செய்தியை பாடல் வழி அறியமுடிகின்றது.

**திருவள்ளுவர் காட்டும் உழவர் குலப்பண்பாடு**

உலகில் வாழ்கின்ற மக்கள் பல தொழில்கள் செய்தாலும் உழவர்கள் செய்யும் ஏர்த்தொழிலின் பின்னே நிற்கின்றனர். இதனால் உழவுத் தொழிலே முதன்மையான தொழிலாகும். இதனைத் திருக்குறளில்,

**சுழன்றும்ஏர்ப் பின்னது உலகம் அதனால்**
**உழுந்தும் உழவே தலை** - குறள் 1031

என்று திருவள்ளுவர் உழவுத் தொழிலே முதன்மையானத் தொழில் என்பதை உணர்த்தியுள்ளார். உழவுத்தொழில் உடலை வருத்திச் செய்ய வேண்டிய தொழில். எனினும், அது மக்களின் உயிர்த் தொழிலாக விளங்குகின்றது. மன்னர் ஆட்சியும் மக்கள் வாழ்வும் உழுதொழிலைச் சார்ந்தே நடைபெறுகின்றது. கலையும், பண்பாடும் விளங்க உழுதொழிலே காரணமாகின்றது. உலக விளக்கத்துக்கு ஒளியாக விளங்குவதும் உழவுத்தொழிலே. இக்கருத்துக்களை **'செங்கோலை நடத்தும் கோல் ஏரடிக்கும் சிறுகோலே', ஏர் நடக்குமெனில்**

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**புகழ்சால் இயலிசை நாடகம் நடக்கும்', 'உலகெலாம் ஒளி விளங்கும் உழவருழும் உழவாலே'** என்ற தொடர்களால் வலியுறுத்துகின்றார் கம்பர்' என கந்தசாமி அவர்கள் வேளாண்மையும் பாண்பாடும் என்னும் நூலில் பதிவு செய்துள்ளார். உழவர்கள் உழவுத் தொழில் செய்து, உழவு செய்ய முடியாமல் வாழ்கின்ற அனைவரையும் உயிர் வாழச் செய்கின்றனர். இதனால் உழவுத் தொழில் செய்கின்றவர் உலக மக்களுக்கு அச்சாணி பொன்றவர் என்பதைத் திருக்குறளில்,

**உழுவார் உலகத்தார்க்கு ஆணிஅ∴து ஆற்றாது**
**எழுவாரை எல்லாம் பொறுத்து - குறள். 1032**

என்றுத் திருவள்ளுவர் உழவர்கள் உலக மக்களுக்கு உயிராக விளங்கியுள்ளனர் என்பதைக் கூறியுள்ளார். உழவர்கள் உலக மக்களுக்கு உயிர் போன்றவர்கள் என்பதை,

**எரு விட்டுழவுழுது**
**நான் பயிரேற்று – நெல்லே**
**இல்லாமல் ஆர் பிழைப்பார்**
**சொல்லுவீர் ஆண்டே - செண்பகராமன், பள்ளு – பாடல் - 13**

என்று செண்பகராமன் பள்ளுப் பாடலில் உழவர் குல மக்களின் சிறப்பை உணரமுடிகின்றது. உழவுத் தொழில் செய்து, உழவுத் தொழிலால் விளைந்த, உணவுப் பொருள்களை உண்டு வாழ்பவர்களே உரிமையோடு வாழ்கின்றவர் ஆவர். உழவுத் தொழில் செய்யாத மற்ற அனைவரும், வழிபாடு செய்து உண்டு பின் செல்லும் தன்மையுடையவர் என்பதைத் திருக்குறளில்,

**உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம்**
**தொழுதுண்டு பின்செல் பவர் - குறள். 1033**

என்று உழவர்களின் சிறப்பை திருவள்ளுவர் உணர்த்தியுள்ளார். நெல்வளம் உடைய தண்ணளி பொருந்திய உழவர், பல அரசரின் குடை நிழல்களையும் தம் குடையின் கீழ் காணும் தன்மை கொண்டவர்கள் என்பதைத் திருக்குறளில்,

**பலகுடை நீழலும் தம்குடைக்கீழ்க் காண்பர்**
**அலகுடை நீழ லவர் - குறள். 1034**

என்று உழவர்களின் குடையின் கீழ் இருப்பவர்கள், அரசரின் குடை நிழல்கள் என்பதை திருவள்ளுவர் விளக்கியுள்ளார். தனது கைகளால் தொழில் செய்து உணவு தேடி, உண்ணும் இயல்புடைய தொழிலாளர் பிறரிடம் சென்று இரங்க மாட்டார். தம்மிடம் இரந்தவர்க்கு ஒளிக்காமல் ஒரு பெருள் ஈவார் என்பதைத் திருக்குறள்,

**இரவார் இரப்பார்க்கு ஒன்றுஈவர் கரவாது**
**கைசெய்தூண் மாலை யவர் - குறள். 1035**

என்று உழவர் மக்களின் பண்பாட்டுச் சிறப்பை திருவள்ளுவர் விளக்கியுள்ளார். மக்கள் உயிர் வாழ்வதற்கு உணவு முக்கியமானதாகும். நிலத்தையும் நீரையும் கொண்டு உணவுப் பொருள்கள் விளைவிப்பவர் உடம்பையும், உயிரையும் சேர்த்தவராவர். உழவர்களே உலக உயிர்களை காப்பாற்றுபவர்கள். இந்த மெய்யியல் தன்மையை,

**நல்லிசை நிறுத்தல் வேண்டினும் மற்றதன்**
**தகுதிகேள்! இனி மிகுதி யான**
**நீரின்று அமையா யாக்கைக்கு எல்லாம்**
**உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே**
**உண்டி முதற்றெ உணவின் பிண்டம்**
**உணவு எனப்படுவது நிலத்தொடு நீரே**
**நீரும் நிலனும் புணரியோர் ஈண்ட**
**உடம்பும் உயிரும் படைத்திசினோரே - புறம். பா. 18**

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

என்று புறநானூற்றுப் பாடல் உணவு வழங்கியவர்கள், உயிரைக் கொடுத்தவர்கள் என்று உழவர் குல மக்களின் பண்பாட்டுச் சிறப்பை விளக்கியுள்ளதை அறியமுடிகின்றது.

உழவர்கள், உழவுத் தொழில் செய்யாமல் இருந்து விட்டால், விருப்பங்களையும் நீக்கிவிட்டு வாழ்கின்ற துறவிகளுக்கும் உயிர் வாழ்வு இல்லை என்பதைத் திருக்குறளில்,

**உழவினார் கைம்மடங்கின் இல்லை விழைவதூஉம்**
**விட்டேம்என் பார்க்கும் நிலை - குறள். 1036**

என்று விருப்பங்கள் அனைத்தையும் விலக்கி வாழ்கின்ற துறவிகளுக்கும், உழவர்கள் இல்லையேல் வாழ்க்கை இல்லை என்பதைத் திருவள்ளுவர் தெளிவுபடுத்துகின்றார். ஒரு பலம் புழுதி கால்பலம் ஆகும்படி உழுது காயவிட்டால், எருவு எதுவும் தேவையில்லை. அந்நிலத்தில் பயிர்கள் செழித்து விளையும் என்பதைத் திருக்குறள்,

**தொடிப்புழுதி கஃசா உணக்கின் பிடித்து எருவும்**
**வேண்டாது சாலப் படும் - குறள். 1037**

என்று பயிர்கள் செழித்து வளரும் முறையையும் திருவள்ளுவர் கூறியுள்ளதை உணரமுடிகின்றது. ஏர் உழுதலைவிட எரு இடுதல் நல்லது எனவும், இந்த இரண்டும் செய்து களை நீக்கிய பிறகு, நீர்ப் பாய்ச்சுதலை விடக் காவல் செய்தல் நல்லது என்பதைத் திருக்குறளில்,

**ஏரினும் நன்றால் எருஇடுதல் கட்டபின்**
**நீரினும் நன்று அதன்காப்பு -குறள். 1038**

என உழுதல், எருப்போடுதல், களை நீக்குதல், நீர்ப்பாய்ச்சுதல், காவல் செய்தல் இவை பயிர்களுக்கு மிகவும் பாதுகாப்பைத் தந்து செழித்து வளரும் என்பதைத் திருவள்ளுவர் குறிப்பிடுகின்றார். நிலத்திற்கு உரிமையுடையவன் நிலத்தைச் சென்று பார்க்காமல் இருந்தால், அந்நிலம் அவனுடைய மனைவியைப் போல் வெறுத்து அவனோடு பிணங்கிவிடும் என்பதைத் திருக்குறளில்,

**செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து**
**இல்லாளின் ஊடி விடும் - குறள். 1039**

என்று நிலவுடைமையாளன் நிலத்தைப் பாதுகாத்து வர வேண்டும் என்னும் முறைமையைத் திருவள்ளுவர் புலப்படுத்தியுள்ளதை அறியமுடிகின்றது. இயற்கை மட்டுமில்லாமல் செயற்கையாலும் பயிர்களுக்கு தீங்கு நேர்வது உண்டு. பறவைகளால், கால்நடைகளால், விலங்குகளால், ஏன் மனிதரால் பயிர்கட்கு அழிவு நேர்வதும் உண்டு. எருமை ஒன்று கயிற்றை அறுத்துக் கொண்டு சென்று நெற்கதிர்களை மேய்ந்து விட்டது. அத்தகைய ஊரை உடைய தலைவன் எனக்குப் பெருந்துன்பம் விளைத்துவிட்டான் என்பது ஐங்குறுநூற்றில்,

**கருங்கோட்டு எருமை கயிறுபரிந் தசைஇ**
**நெடுங்கதிர் நெல்லின் நாள் மேயல் ஆரும்**
**புனல்முற்று ஊரன் பகலும்**
**படர்மலி அருநோய் செய்தனன் எமக்கே – ஐங்குறுநூறு – 95**

என்றுத் தலைவன் தலைவி அகப்பாடல் வாயிலாக உழவர் குலத்தின் பண்பாட்டுச் சிறப்பைக் காணமுடிகின்றது. தன்னிடம் ஒரு பொருளும் இல்லை என்று எண்ணி வறுமையால் சோம்பியிருப்பவரைக் கண்டால், நிலமகள் தன்னுள் சிரிப்பாள் என்பதைத் திருக்குறளில்,

**இலம்என்று அசைஇ இருப்பாரைக் காணின்**
**நிலம்என்னும் நல்லாள் நகும் - குறள். 1040**

என்று ஒருபொருளும் இல்லாதவர்களின் நிலையைக் கண்டுத் திருவள்ளுவர் அறிவுறுத்தியுள்ளார்.

**உழைக்கும் உழவர்குலமே உயர்ந்த குலம்**

**உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம் - வீணில்**
**உண்டுகளித் திருப்போரை நிந்தனை செய்வோம்**

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

எனறு செந்தமிழ்க் கவிஞர் பாரதியார் உழவர்களின் உயர்ந்த நிலையை எடுத்துரைத்துள்ளார். உலகில் உள்ள மக்கள் பல தொழில்கள் செய்து வந்தாலும், மக்களின் உயிர் வாழ்வுக்கு உழவர்களின் உழவுத் தொழிலே அடிப்படையாக அமைகின்றது.

மனித வாழ்வுக்கு அடிப்படை உணவு. உணவு இல்லையெனின் மனித உயிர்கள் இல்லை. பகுத்துண்ணும் பண்பாட்டுச் சிறப்பை,

**உண்டால் அம்ம! இவ்வுலகம் இந்திரர்**
**அமிழ்தம் இயைவது ஆயினும் இனிதெனத்**
**தமியர் உண்டலும் இலரே - புறம் - 182**

என்று புறநானூற்றுப்பாடல் சிறந்த பண்பாட்டுச் சிறப்பை விளக்கியுள்ளது.

**செந்தமிழ் வேந்தர்கள்**

செந்தமிழ் வேந்தர்களாக இமானுவேல்சேகரன், பசுபதி பாண்டியன், முருகவேல்ராசன், ஜான்பாண்டியன், கிருஷ்ணசாமி, குருசாமி குடும்பன் போன்ற தேவேந்திர குல வேந்தர்கள் மருதநிலத்தையும், மள்ளர் குல மக்களையும் காக்கும் தளபதிகளாக விளங்கியுள்ளனர். தமிழர் நிலம், தமிழர்குலம், தமிழ்மொழி, தமிழர் பண்பாடு ஆகியவற்றைக் காக்கும் பொருட்டும், சமத்துவம். சகோதரத்துவம், சுதந்திரம் இவற்றை அடையும் நிலையில் போர்க்களத்தில் இன்று வரை போராடி வருகின்றனர். தாய்மொழித் தமிழையும், பண்பாட்டையும் காக்க, தமிழக முன்னேற்றக் கழகம், தமிழக மக்கள் முன்னேற்றக்கழகம், புதிய தமிழகம், தமிழக மருத மக்கள் முன்னேற்றக் கழகம், அம்மா பள்ளர், ஆத்தா பள்ளர், ஆயாப் பள்ளர் பண்பாட்டுக் கழகம், மருதம் மள்ளர் நாடு போன்ற மள்ளர்களின் பூர்வீக அடையாளங்களைக் கொண்டு செயல்பட்டு வருகின்றனர். உழவுத்தொழிலை உயிராகவும் மருத நிலம், மருத நில மக்களைக் காக்க போர்த்தொழிலை உயிராகவும் கொண்டு, தேவேந்திரகுல மக்களும், தேவேந்திர குல வேந்தர்களும் விளைநிலத்தில் வீரத்துடன் வாழ்ந்து வருகின்றனர்.

**முடிவுரை**

உதயசூரியன் இல்லையென்றால், உலகத்தில் உயிரினங்கள் வாழ முடியாது. உழவர்குலம் இல்லையென்றால் உலகத்தில் மனதகுலம் வாழ முடியாது. தமிழக நிலத்தில் மருத நிலத்தை உருவாக்கி செந்நெல்லையும், செங்கரும்பையும், செங்கனியையும், விளைவிப்பவர்கள் உழவர்கள். உழவர்களின் பண்பாடே. தமிழர்களின் பண்பாடாக விளங்கி வருகின்றது. உழவர்களின் பண்பாட்டை *தொல்காப்பியம்* முதல் இக்கால இலக்கியங்கள் வரை தெளிவாகக் காணமுடிகின்றது. இவற்றுள் உழவர்குலப் பண்பாட்டையும், உழவுத்தொழிலையும் தெய்வப் புலவர் திருவள்ளுவர் விளக்கியுள்ளதை அறியமுடிகின்றது.

**பயன்பட்ட நூல்கள்**

1. வரதராசனார் .மு., திருக்குறள் தெளிவுரை, கழக வெளியீடு, சென்னை.
2. சோமசுந்தரனார் .பொ.வே., ஐங்குறுநூறு, கழக வெளியீடு, சென்னை.
3. துரைசாமிப்பிள்ளை .ஔவை.சு., பதிற்றுப்பத்து, கழகவெளியீடு, சென்னை.
4. வேங்கடசாமி நாட்டார், அகநானூறு, கழக வெளியீடு, சென்னை.
5. துரைசாமிப்பிள்ளை .சு., புறநானூறு, கழக வெளியீடு, சென்னை.
6. வேங்கடராமன் .சு., பள்ளு இலக்கியங்களில் மள்ளர் மரபுகள், தேவேந்திர மன்றம், கோவை.
7. கந்தசாமி .இல.செ., வேளாண்மையும் பண்பாடும், வேளாண்மைப் பல்கலைக்கழகம், கோவை.
8. குருசாமி சித்தர், தமிழ் இலக்கியத்தில் சேர, சோழ, பாண்டிய மரபினர், மூவேந்தர் மறுமலர்ச்சிக் கழகம், சோழவந்தான்.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

# வள்ளுவம் காட்டும் பொருளியல் சிந்தனைகள்

# Economical Thoughts Designated by Valluvam

**திருமதி சு.பாண்டீஸ்வரி,** உதவிப் பேராசிரியர்,
பொருளியல் துறை, அய்யநாடார் ஜானகி அம்மாள் கல்லூரி (தன்னாட்சி), சிவகாசி.

## Abstract

*The research paper brings out the economical thoughts and ideas as portrayed in Thiruvalluvar's "Thirukural". The work is a treasure box of all virtues. One who masters him through the ways of thirukural will be the most successful and happiest man in the world. Rich facts are evinced in te work. For a society, economical growth is vital; Tamil people before his times and at his times were great thinkers of economical values and they lived as diasporas to bring wealth and fortune to their families. Hence, the paper brings down the economical details found in "Thirukkural".*

**Keywords:** Economical Thoughts, Valluvam, Thiruvalluvar

### முன்னுரை

*திரைகடல் ஓடி திரவியம் தேடு* என்பது தமிழில் வழங்கும் பழமொழி. பழமொழிகள் ஒவ்வொன்றும் பழமையான மொழிகள் மட்டுமன்று அவை ஒவ்வொன்றும் அனுபவ மொழிகள். வாழ்க்கை அனுபவங்களால் ஆனது. அனுபவங்கள் தான் வாழ்க்கையை அர்த்தப்படுத்துகின்றன. பொருள் நிறைந்ததாக மாற்றுகின்றன. பொருள் என்றவுடன்,

**"வாழ்வதற்குப் பொருள் வேண்டும், நாம்**
**வாழ்வதிலும் பொருள் வேண்டும்"**

என்று படித்த வாசகம் ஒன்று நினைவுக்கு வருகிறது. பொருளியல் சிந்தனைகள் குறித்து திருவள்ளுவர் மற்றும் பொருளியல் வள்ளுநர்கள் கூறும் கருத்துக்களை இக்கட்டுரையின் வாயிலாக காண்போம்.

### பொருள் பற்றி வள்ளுவர் கூற்று

மனிதன் வாழ்வதற்கு அடிப்படைத் தேவைகளில் ஒன்று பொருள் ஈட்டுதல். பொருள் இல்லாமல் எந்த நன்மையும் அடைய முடியாது. புறவாழ்க்கைக்கு அது இன்றியமையாதது. தீய வழிகளில் பொருள் ஈட்டாமல் அதை முறையாகத் திறன் அறிந்து பொருள் ஈட்டுதலே அறத்தையும் இன்பத்தையும் தரவல்லது என்று வழியுறுத்துகிறார் வள்ளுவர்.

**"அறன்ஈனும் இன்பமும் ஈனும் திறனறிந்து**
**தீதின்றி வந்த பொருள்"**

என்று கூறுகின்றார்.

### பொருளியல் தோற்றம்

கிரேக்கச் சொல் "Eco" என்ற அடிச்சொல்லிருந்தே "Economics" என்ற சொல் உருவானது. இச்சொல்லுக்கு குடும்ப நிர்வாகம் என்று பொருள். கிரேக்கச் சொல்லும் திருவள்ளுவர் பொருள் பற்றிக் குறிப்பிடும் சொல்லும் ஒன்றாகவே காணப்படுகிறது.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

தலைவியின் பொருளாட்சியில் தான் இல்லறமே சிறந்து விளங்கும். இதனை நம்நாட்டில் “நாட்டுக்கு அரசன்”, “வீட்டுக்கு மனைவி” என்ற பழமொழி இதனை விளக்கும்.

**பொருளியல் சிந்தனையின் வரலாறு**

பொருளியல் சிந்தனையின் வரலாறு என்பது பொருளியல் எண்ணங்கள் பழங்காலத்திலிருந்து இன்று வரை தோன்றி வளர்ந்த விதம் குறித்து விளக்குவது ஆகும். பொருளாதார வளர்ச்சிக்கும் பொருளியல் சிந்தனைகளின் வளர்ச்சிக்கும் வேறுபாடு உண்டு. பொருளியல் வளர்ச்சி ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சியைக் குறிப்பதாகும். பொருளியல் சிந்தனை என்பது பொருளியல் குறித்த எண்ணங்கள் எவ்வாறு உருவெடுத்து பின்பு இது ஒரு தனி இயலாக வளர்ந்தது என்பது குறித்து ஆகும்.

**பிளேட்டோவின் பொருளியல் கூற்று**

தத்துவ அறிஞர் பிளேட்டோ நீதிநெறி மற்றும் அரசியல் பிரிவுகளின் ஒரு அங்கமாக பொருளியலைக் குறிப்பிட்டுள்ளார். பிளேட்டோ எந்த ஒரு தனி மனிதனும், தானாக தன்னிறைவு அடைய முடியாது, தனி மனிதர்களுடைய தேவையை நிறைவு செய்வதற்காக நாடு உருவாக்கப்பட்டது என்று கூறுகிறார். பிளேட்டோ வேலைப் பகுப்பைப் பற்றியும் குறிப்பிடுகின்றார். ஒவ்வொரு தொழிலையும் வேறு வேறு பிரிவினர் செய்ய வேண்டுமென்றும் இதனால் அனைத்துப் பொருட்களும் ஏராளமாகவும் தரமானதாகவும் மலிவான செலவில் செய்ய முடியும் என்று குறிப்பிடுகிறார்.

**அரிஸ்டாட்டில் பொருளியல் கூற்று**

‘பொருளியல்’ என்பது தேவைகளை நிறைவு செய்வதற்காக செல்வத்தை நுகர்வது பற்றியது; ‘கிரிமாடிச்டிகிச்’ என்பது பணத்தின் மூலமோ அல்லது பரிமாற்றத்தின் மூலமோ சொத்து சேர்ப்பது பற்றி குறிப்பதாகும். பரிமாற்றம் இரண்டு வகையில் நிகழும். அவை இயற்கையானது மற்றும் இயற்கைக்கு மாறானது ஆகும். தமது தேவையை நிறைவு செய்வதற்காக செய்யப்படும் பரிமாற்றம் இயற்கையானது என்றும், சொத்து சேர்ப்பதற்காக செய்யப்படும் பரிமாற்றம் இயற்கைக்கு மாறானது என்றும் குறிப்பிடுகிறார் அரிஸ்டாட்டில்.

**தாமசு அகினோசு**

ஒரு பொருளின் பயனைப் பொருத்து அதன் விலை அமையும் என்று தாமசு அகினோசு தெரிவித்தார். இவர் ‘நியாய விலை’ என்று இதற்குப் பெயரிட்டு, இது பொருளின் மதிப்பை பிரிதிபலிக்கும் என்றும் கூறினார்.

**ஆடம் ஸ்மிதின் பொருளியல் கூற்று**

ஆடம் ஸ்மித் பொருளாதாரத்தின் தந்தை என அழைக்கப்படுகிறார். “நாடுகளின் செல்வம்” என்பது இவர் எழுதிய நூலின் பெயராகும். இந்நூலில் விலைகள் அல்லது பொருள்களின் மதிப்பு எவ்வாறு தீர்மானிக்கப்படுகிறது என்பதை விளக்குகிறார். இந்தியாவில் தங்கத்தையும் வெள்ளியையும் புதைத்து வைக்கும் வழக்கம் இருப்பது நாட்டின் வளர்ச்சிக்குத் தடையாக இருக்கும் என்று ஆடம் ஸ்மித் அந்தக் காலத்திலேயே கூறியுள்ளது வியப்பளிக்கிறது. “பொருளாதாரம் என்பது செல்வத்தைப் பற்றிய ஒரு அறிவியல்” என ஆடம் ஸ்மித் தனது நூலில் கூறுகிறார்.

**வள்ளுவர் கூறும் வாழ்க்கை நெறி**

திருவள்ளுவர் தம் முப்பாலிலும் தாம் பாடுவதற்குரிய பொருளாக மனிதனையே எடுத்துக் கொண்டார். மண்ணுலகில் தோன்றிய மனிதன் சிறப்பாக வாழ்ந்து, விண்ணுலகச் சிறப்பினை இந்த மண்ணுலகிலயே அடைய வேண்டும். நன்னூல் ஆசிரியர் பவணந்தியார் “அறம், பொருள், இன்பம், வீடு அடைதல் நூற்பயனே” என்றார்.

**திருவள்ளுவர் முப்பாலாகப் பகுத்துக்கூறிய வாழ்க்கை நெறி**

- தனி மனிதன், மணந்து கொள்ளாது வாழும் தனி வாழ்க்கை.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

- தன் மனைவியுடன் நடத்தும் காதல் வாழ்க்கை.
- கணவனும் மனைவியும் சேர்ந்து சமுதாயத்தில் வாழும் சமுதாய வாழ்க்கை.

**மனைவியைப் பற்றி வள்ளுவர் கூற்று**

திருவள்ளுவர் மனைவியைப் பற்றிக் குறிப்பிடுகின்ற போது, அவளுடைய மாண்புக்குப் பல காரணங்கள் அமைகின்றன. அவற்றுள் ஒன்று கணவனுடைய வருவாய்க்கு ஏற்றவாறு செலவு செய்வது இதனை ‘வளத்தக்காள்’ என்று குறிப்பிடுகின்றார். வளத்தக்காள் என்பதை வீட்டை நிருவாகம் செய்வது எனலாம். கணவனுடைய வருவாய்க்கு ஏற்பக் குடும்பத்தை நடத்துகின்றவளே உண்மையான பொருளியல் நுட்பம் அறிந்தவள் என்பது பொருள்.

**“ஆற்றின் அளவறிந்து ஈக அதுபொருள்**
**போற்றி வழங்கு நெறி”**

என்ற குறள் வருவாயின் அளவை அறிந்து மனைவி என்பவள் அதற்கேற்ப செலவு செய்ய வேண்டும் அதுவே பொருளைக் காப்பாற்றிக் கொள்ளும் வழியாகும்.

**பொருளை ஈட்டுதல்**

**“பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை**
**வழியெஞ்சல் எஞ்ஞான்றும் இல்”**

அறவழியில் பழிபாவத்திற்கு அஞ்சிப் பணம் சேர்த்து அதனைப் பலருக்கும் பகிர்ந்து அளித்து வாழ்ந்து வந்தால் ஒருவனுடைய சந்ததி வாழையடி வாழையாகத் தொடர்ந்து வரும். தனக்கு இன்பமும், தன்னைச் சார்ந்தவர்க்கும் குடும்பத்தார்க்கும் சமூகத்தார்க்கும் நலமும் பயக்கும்.

**பொருளை பகிர்தல்**

**“பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்**
**தொகுத்தவற்றுள் எல்லாம் தலை”**

திருவள்ளுவர் பொருள் பற்றிய தம் அரிய கருத்தினைத் தெரிவாக எடுத்துரைக்கின்றார். தேடிய பொருளைப் பகிர்த்துண்டு, பல உயிர்களையும் காப்பாற்றி வாழும் நெறியே சிறந்த நெறியாகும்.

**“சிறப்பினும் செல்வமும்ஈனும் அறத்தி னூங்கு**
**ஆக்கம் எவனோ உயிர்க்கு”**

என்கிறார். அதாவது அறம் மக்களுக்குச் சிறப்பையும் செல்வத்தையும் கொடுக்கும். எனவே அவ்வறத்தைக் காட்டிலும் நன்மை தருவது வேறில்லை எனக் கூறியுள்ளார்.

**முடிவுரை**

வாழ்க்கை பொருளால் ஆனது. பொருள் நிறைந்தது. மனிதன் இனக்குழுச் சமூகமாக வாழ்ந்த போது தன்னிடமுள்ள பொருளைக் கொடுத்துவிட்டுத் தனக்கு தேவையான பொருட்களைப் பெற்றுக்கொண்டான். அந்த பொருளை ஈட்டுவதற்காக மனிதன் இங்கேயும், திரைகடலும் ஓடியிருக்கின்றனர் இக்கட்டுரையின் வாயிலாக ‘மனிதன் வாழ்வதற்கும் பொருள் வேண்டும்’, ‘வாழ்வதிலும் பொருள் வேண்டும்’ என்று நம்மால் உணர முடிகிறது.

**பயன்பட்ட நூல்**

1. ஞா.ஆதவநேயப்பாவாணர், திருக்குறள் தமிழ்

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

# *திருக்குறள்* ஒரு கருத்துக்கருவூலம்

## *Thirukural* is a Treasury of Concepts

**ம.பாலகுருசாமி,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
அரசு கலைக் கல்லூரி, நந்தனம், சென்னை-600 035.

## Abstract

*The research paper portrays the Universal Diadactic Treatise "Thirukkural" as a treasury of concepts. It is a moral treatise rich in all sorts of life oriented ethics in high caliber. Human is not a one to enjoy all pleasures by giving tortures to others. Instead of it, he is a one of moral virtues. Tamil society is considered classical and noble for its rich diadactic works. Among the "Thirukural" stands par excellent in inculcating moral aesthetics. It was written before two thousand years back and its antiquity shows the standard of the people and their expectations in moral life and morale of the individual. Hence, the paper elicits the virtues bring into being in "Thirukkural".*

**Keywords:** *Thirukural*, Treasury of Concepts, Tamil Life

**முன்னுரை**

உலகில் தன் இன்பத்தை நாடுகிறவன் மனிதன் அல்ல. எல்லோரும் இன்புற்று வாழ, தீமை செய்வோரைக் கண்டால் திருத்த முயல்பவனே மனிதன். அவ்வகையில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே மனித வாழ்க்கை வளர்ச்சி பெற இலக்கியத்தை படைத்தார் திருவள்ளுவர்.

**மொழி**

மனிதன் கண்டுபிடித்த அரிய சாதனம் மொழி. மொழி இல்லையேல் மனித சமுதாயமே இல்லை. எனலாம். அந்தளவிற்கு மனித சமுதாயத்திற்கு மொழிக்குண்டான தொடர்பு மிகப்பெரியது. **"மொழியை யாரும் உருவாக்கவில்லை. எல்லோரும் உருவாக்கினார்கள்"**[1] என்பர் சமுதாயவியல் அறிஞர்.

சமுதாய நடைமுறைக்குரிய அடிப்படையான செய்தித் தொடர்பு சாதனமாக மொழி செயல்படுகிறது. மனித இனத்தின் சமூக அமைப்பு, வாழ்க்கைமுறை ஆகியவற்றை வெளிப்படுத்தும் சாதனமாக அமைகின்றது. மனித சமூகத்திற்கு மொழியின் பயன்பாடு பெரும் பங்காக இருந்துவருகிறது. மொழி என்னும் கருவி மனித சமுதாயத்தின் உயிர் மூச்சாகக் கருதப்படுகிறது.

> **"மொழி என்னும் கருவி சமூக வளர்ச்சிக்குப் பயன்படும் நுண்மையான கருவியாகும். மொழி தோன்றியிராவிட்டால் அறிவியல் வளர்ச்சியோ, ஆன்மீக வளர்ச்சியோ, பண்பாட்டு நிலைப்பாடோ, நாகரிகத் தொட்டில்களோ மக்கள் வாழ்வில் தோன்றியிருக்க முடியாது"**[2]

என்று கூறுவர்.

மனிதன் சமூகத்தில் ஒரு முக்கியமான அங்கமாக இருந்து வாழ்கிறான். 'மனிதன் ஒரு சமூகப்பிராணி' என்ற அரிஸ்டாட்டிலின் **(Aristotle)** கருத்திற்கேற்ப, தனித்து இயங்க

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

இயலாது. இந்தப் பண்புகளை இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன. மனித வாழ்வைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமென்றால் மக்கள் வாழ்க்கையைப் பற்றி தெரிந்துகொள்ள வேண்டும். இதை அக்கால இலக்கியங்கள் மூலம் அறியலாம்.

**"இலக்கியத்திற்கும் சமூகத்திற்கும் பிரிக்கப்படமுடியாத**
**உறவு உள்ளது உண்மையே"**[3]

என்பர் திறனாய்வாளர். சமுதாயத்தின் மூல வடிவம் சமூகமாகும்.

**பண்பாடு**

பண்பாடு மலர்ந்தபொழுது சமுதாயம் தோன்றியது. பண்பாடு என்பது மனிதநேயம் உள்ள ஒருவர் மற்றொருவருக்காக வாழப் பழகிய காலத்தில் தோன்றியது. **"பண்பெனப்படுவது பாடறிந்து ஒழுகல்"**[4] பண்பு எனப்படுவது உலக ஒழுக்கம் அறிந்து ஒழுகுதல் என்று நல்லந்துவனார் எனும் நற்பெரும்புலவர் தமது நெய்தல் கலியில் பண்பு பற்றி இயம்புகிறது. அதே போன்று உள்ளத்தில் அன்புடையவராய் இருத்தல், நல்ல குடியில் பிறத்தல் ஆகிய இரண்டும் ஒருசேரப் பெற்றவனும் சிறந்த பண்புடையவனே என்று குறள் விளம்புகிறது.

**"அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் இவ்விரண்டும்**
**பண்புடைமை என்னும் வழக்கு"**[5]

மேலும், பண்புடையவர்கள் வாழ்வதால்தான் இவ்வுலகம் அழியாமல் நிலைபெற்று இயங்குகிறது. இல்லையெனில் இவ்வுலக உயிர்கள் மண்ணின்கண் மாய்ந்துவிடுமாம் என்பதனை,

**"பண்புடையார்ப் பட்டுண்டு உலகம் அதுஇன்றேல்**
**மண்புக்கு மாய்வது மண்"**[6]

என்ற குறளில் விளக்குகிறார்.

**அறிவுடைமை**

அறிவு அழிவு வராமல் காக்கும் கருவியாகும். அவ்வறிவு மெய்ப்பொருள் காண்பதேயாம் என அறிவுக்கு இலக்கணத்தை வகுத்துக் கூறிய செந்நாப்புலவர்,

**"அறிவுடையார் ஆவ தறிவார் அறிவிலார்**
**அஃதறி கல்லா தவர்"**[7]

எனப் புகழ்கிறார். பிற உயிர்களுக்கு உண்டாகும் துன்பத்தைத் தமக்கு வந்தது போல நினைத்துக் காப்பாற்றா விட்டால் பெற்ற அறிவினால் என்ன பயன்? என்றும் கூறுகிறார்.

**"அறிவினான் அகுவது உண்டோ? பிறிதின்நோய்**
**தம்நோய்போல் போற்றாக் கடை"**[8]

சென்றவிடத்தில் செலவிடாது, நன்றின்பால் உய்க்கும் அறிவு, பிறர்வாய் நுண்பொருள் காணும் சிறப்புடையது என்று தெய்வப்புலவர் எடுத்துரைக்கும் கருத்துக்கள் சீரிய சிந்தனைத் தெளிவை உண்டாக்குவதாய் அமைந்துள்ளன.

**நிலையாமை**

உலகில் நிலையாமை என்று எதுவும் இல்லை. வினாடிக்கு வினாடி மாறும் இயல்புடையது. நாம் வாழும் வாழ்க்கை எந்த வினாடியிலும் முடியலாம். மனிதர்களுக்குள் இன்பமும், துன்பமும் மாறி மாறி வந்து கொண்டுதான் இருக்கின்றன. இதற்குத் திருவள்ளுவர், குறளில் ஒரு அதிகாரமே வகுத்துள்ளார்.

**"நெருநல் உளன்ஒருவன் இன்றுஇல்லை என்னும்**
**பெருமை உடைத்துஇவ் வுலகு"**[9]

என்று உரைக்கிறார்.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**கல்வி**

கல் என்னும் அடிச்சொல்லின் வழியாகப் பிறந்து, கல்வி எனப்பிரித்து, **"கல்"** என்பது **"தோண்டுதல்", "கல்லுதல்"** என்னும் பொருளை அளிப்பதாக அமைந்து உள்ளது. மனிதனிடம் புதைந்து கிடைக்கும் ஆற்றல்களையும், திறன்களையும் வெளிக்கொணர்ந்து மலர்ந்திடச் செய்யும் செயலே கல்வி.

கல்வி இன்றைய வாழ்க்கைக்கு அவசியம் தேவை. ஆதலால் எல்லோரும் கல்வி கற்க வேண்டும். கற்கும் நூல்களைக் குற்றமறக் கற்க வேண்டும். அவ்வாறு கற்ற பிறகு அதன் நெறியில் நிற்க வேண்டும் என்கிறார்.

**"கற்க கசடறக் கற்பவை கற்றபின்**
**நிற்க அதற்குத் தக"**[10]

இக்குறட்பாவில் துணை எழுத்து இல்லை. காரணம் கல்வி கற்றால் யாருடைய துணையும் தேவையில்லை என்பது இக்குறட்பாவின் ஆழ்ந்த கருத்தாகும்.

நாட்டை ஆளுகின்ற மன்னனுக்கு தன் நாட்டிலும் மட்டும் சிறப்பு. ஆனால் கல்வி கற்றவர்க்கு சென்ற இடமெல்லாம் சிறப்பினை தரும்.

**"கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு**
**மாடல்ல மற்றையவை"**[11]

என்கிறார் வள்ளுவர். கல்வி மனிதனை விலங்குப் பண்புகளிலிருந்து மாற்றி மனிதனாக்குகிறது.

**"ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு**
**எழுமையும் ஏமாப் புடைத்து"**[12]

என்று கல்வியின் சிறப்பைக் கூறுகின்றார் வள்ளுவர். இளமை, யாக்கை, செல்வம் போன்றவற்றின் நிலையாமையைக் கூறும் உலகம் கல்வியின் நிலைபேற்றைக் கூறும்போது ஏழு பிறவிக்கும் பாதுகாப்பாய் வரக்கூடியது என்று கூறுகிறது. கல்வி அறியாமை இருளை அகற்றுகிறது. மனிதனைப் பண்படுத்துகிறது. பகுத்தறிவை வளர்க்கின்றது. அதற்கு உறுதுணையாய் இருப்பது தாய்மொழிக் கல்வியே. தாய்மொழியில் கற்கின்ற போது தன்னம்பிக்கை பிறக்கின்றது.

**ஒழுக்கம்**

மக்கள் அனைவரும் ஒழுக்கத்தோடு வாழ வேண்டும் ஒழுக்கத்தோடு வாழ்ந்தால் அவர்கள் மேன்மை அடைவார்கள். அதனால்தான் ஒழுக்கம் உயிரைவிடச் சிறந்ததாகப் போற்றப்படுகிறது. ஒழுக்கம் இல்லாதவனுடைய வாழ்வில் உயர்வு இருக்காது. ஆகையால் எல்லோரும் ஒழுக்கத்தோடு வாழ வேண்டும் என்று விரும்பியவர்,

**"ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்**
**உயிரினும் ஓம்பப் படும்"**[13]

நல்லொழுக்கம் இன்பமான நல்வாழ்விற்குத் துணையாகும். தீயொழுக்கம் எப்போதும் துன்பத்தைத்தான் கொடுக்கும் என்பதை,

**"நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் தீயொழுக்கம்**
**என்றும் இடும்பை தரும்"**[14]

இக்குறளின் வழி அறிவுறுத்துகின்றனர். எல்லா மக்களும் ஒழுக்க நெறியிலிருந்து தவறாமல் வாழ வேண்டும்.

**கடமைகள்**

நல்ல மக்களைப் பெறுவதைவிடச் சிறந்த பேறு வேறொன்றும் இல்லை. அப்துல்கலாம், காமராசர் மற்றும் அன்னை தெரசா போன்றவர்களை ஈன்றெடுத்த அன்னையரை நாம் நினைத்துப் பார்க்கிறோம்.

**"தந்தை மகற்காற்று நன்றி யவையத்து**

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**முந்தி யிருப்பச் செயல்"[15]**

பிள்ளைகளுக்குப் பாலூட்டி, சோறூட்டி, அம்புலி மாமாவைக் காட்டி கதை சொல்லி, உண்பித்து வளர்க்கும் போதே நல்ல கல்வியை ஊட்டி நல்ல பண்பளானாக உயர்த்தி உத்தமனாக, நல்லறிவு உடையவனாக முன்னேற்ற வேண்டிய பொறுப்பு, தந்தைக்கும் தாய்க்கும் உண்டு. வீட்டிலிருந்துகொண்டு, தாய் கற்பிக்க, தந்தை உடனிருந்து அறிவாகிய ஒளியை ஊட்ட வேண்டும்.

**சான்றோரின் சிறப்பு**

கல்வியைத் திறம்படக் கற்று, உயர்ந்த பதவிகளை வகிப்போர், இவ்வுலகிற்கு ஒரு மாதிரியாக (Model) இருக்க வேண்டும். பூவோடு சேர்ந்து நாரும் மணம் பெறுவது போல, கற்றோருடன் அவரைச் சார்ந்திருப்போரும் நற்பண்புடையவராக இருந்தால் சமுதாயம் ஒரு பூந்தோட்டமாக மலரும். ஒரு சான்றோனுக்கு அமைய வேண்டிய ஐந்து முக்கிய குணங்களாக,

**"அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையோடு**
**ஐந்துசால்பு ஊன்றிய தூண்"[16]**

என்பனவற்றைத் திருவள்ளுவர் சுட்டுகின்றார்.

பிற உயிர்களிடத்து அன்பு செலுத்தி, தவறு செய்தால் வெட்கப்பட்டு, பிறருக்கு உதவி செய்து, பிறரின் துன்பத்திற்கு இரக்கம் காட்டி, எதற்காகவும் பொய் சொல்லாது வாழ்கின்ற உத்தமனாக ஒரு சான்றோனைப் படைக்க திருவள்ளுவர், உண்மையிலேயே ஒரு சமுதாய வழிகாட்டி.

மேற்கூறப்பட்டுள்ள ஐந்து குணங்களும் ஐந்து தூண்களைப் போன்று அமைந்து சான்றோனை அடையாளம் காட்டும் பண்புகளாக அமைகின்றன. இத்தகைய சிறப்புமிகு ஐந்து குணங்களையும் மேற்கொண்டு ஒழுகினால் பள்ளிக் கூடங்களும் கல்லூரிகளும் உண்மையிலேயே கலைக் கூடங்களாகிவிடும்.

**அறத்தின் சிறப்பு**

தர்மம் தலைகாக்கும் என்கிறோம். அறம் செய்ய வேண்டுமென்போம். திருவள்ளுவரின்,

**"அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்**
**இழுக்கா இயன்று அறம்"[17]**

என்னும் குறள், பொறாமை, பேராசை, கோபம், கொடிய சொல் ஆகிய நான்கையும் தவிர்த்து அறம் செய்ய வேண்டுமென வலியுறுத்துகிறது. இன்றைக்கு நிகழும் கொலை, கொள்ளை போன்ற நிகழ்ச்சிகள் இந்த நான்கு செயல்களின் அடிப்படையில் தோன்றுவன. இக்குறளின்படி மனிதன் திறம்பட வாழக் கற்று கொண்டால் மட்டுமே தர்மம் நிலைத்து நிற்கும். அத்தர்மத்தின் பயன் கிடைக்கும்.

**இனிய சொல்**

மக்கள் பிறரிடம் பேசும்பொழுது இனிய சொற்களைக் கூற வேண்டும். கடுஞ்சொற்கள் பிறர் மனதை வருத்துவன. தீயினால் சுட்ட புண்ணின் வடு மாறினாலும் ஒருவன் கூறும் தீய சொல் மனதைவிட்டு அகலாது துன்பத்தைக் கொடுக்கும். வாழ்நாள் முழுவதும் உள்ளத்தை உறுத்திக் கொண்டிருக்கும். தப்பித்தவறிக்கூட தீய பயனற்ற கடுஞ்சொற்களைப் பயன்படுத்தக் கூடாது.

**"இனிய உளவாக இன்னாத கூறல்**
**கனியிருப்பக் காய் கவர்ந்தற்று"[18]**

மரத்தில் பழங்கள் பழுத்திருக்கும்போது, அதனைப் பறித்துப் பயன்படுத்துவது இயல்பான ஒன்று. அதனை மரத்தில் விட்டு வைத்தால் அது அழுகிப்போய் கீழே விழுந்து பாழாகிவிடும். எனவே, வாய்க்கு ருசியைத் தரும் அந்தக் கனியைப் பறிக்கவேண்டுமே தவிர, ருசியற்ற காயைப் பறிக்கக்கூடாது. ஆகவே, நல்ல இனிமையான சொற்கள் இருக்கும்போது அதைக்

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

கூறாமல் தீய சொற்களைப் பயன்படுத்துவது அறிவற்ற செயல் என உணர்த்தியுள்ள திருவள்ளுவரின் திறம் வியப்பிற்குரியது.

**ஆண்மகனின் கடமை**

இல்லறத்தில் ஈடுபடும் ஒரு ஆண்மகன், தன் மனைவியிடம் அன்பு செலுத்தி பிறருடைய பசி முதலான துன்பங்களைத் தீர்த்து, தனது கடமைகளை நேர்மையுடன் செய்தல் அவசியம். அப்படி வாழ்ந்தால் மட்டுமே வாழ்வின் பண்பையும் பயனையும் அடைந்து வாழ முடியும்.

**"அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்**
**பிறன்பழிப்பது இல்லாயின் நன்று"**[19]

இல்லற வாழ்வில் ஈடுபடும் ஒருவன், பழிக்கஞ்சி அறம் செய்து உழைத்து குடும்பப் பொறுப்பினைத் தாங்கி நல்லது செய்து வாழ வழிவகுத்தார் வள்ளுவர்.

**பெண்களின் சிறப்பு**

ஆணைச் சிந்திக்கவைத்த வள்ளுவர், பெண்களையும் நெறிப்படுத்துகிறார். பெண்கள் தங்கள் கற்புக்குப் பங்கம் வராமல் தன்னையும் காத்து, தன்னை மணந்து கொண்டவனையும் பேணி பேசும் சொற்களை எச்சரிக்கையோடு பாதுகாத்து, சோர்வின்றி வாழ வேண்டுமென பொருள்பட

**"தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற**
**சொற்காத்துச் சோர்விலாள் பெண்"**[20]

என்னும் குறளை அமைத்துள்ளார்.

அடிமையாக வாழாது நேர்மையாக வாழ்ந்தால், ஒருவனின் முன்னேற்றத்திற்கு உந்து சக்தியாக, குடும்பத்தின் அமைதிக்கு அடிக்கல்லாக, குடும்ப வளர்ச்சிக்கு மூலகாரணமாக, வீட்டினுள் சோர்ந்து போகாமல் காக்கும் அச்சாணியாகப் பெண் அமைய வேண்டுமென வழிவகுத்துள்ளார்.

கற்புடைய மகளிர் மழை பெய்யச் சொன்னால் உடனே மழை பெய்யும் என்பது தமிழர்களின் பண்டுதொட்டே வந்த நம்பிக்கை.

**"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்**
**பெய்யெனப் பெய்யும் மழை"**[21]

எனும் குறள் பல கருத்து வேறுபாடுகளுக்கு இடந்தருவதாயுள்ளது. இக்காலப் பெண்ணியவாதிகள் இக்குறளைச் சுட்டிக்காட்டித் திருவள்ளுவரும் ஓர் ஆணாதிக்கவாதியே என்று கூறுகின்றனர்.

ஒரு சிலர் ஒரு நூலைப் படிக்கும்போது அதில் தங்களுக்குப் பிடிக்காத கருத்துக்கள் காணப்படின் அவை "இடைச்செருலாகக் இருக்கும் என்று கூறுவதுண்டு. ஆனால் திருக்குறள் ஒரு கட்டுக்கோப்பாக அமைந்துள்ள நூலாதலின் இங்கே இடைச்செருகலுக்கு இடமில்லை. எனினும் பல பாட பேதங்களுக்கு இடம் ஏற்பட்டுள்ளது. எடுத்துக்காட்டாக, 'ஆதிபகவன்' என்பது வடமொழித் தொடராதலின் ஒரு சிலர் பகவன் என்பதற்கு மாற்றாகத் தமிழ்ச்சொல்லான 'பகலவன்' என்ற சொல்லைப் பாட பேதமாக கொண்டுள்ளனர்.

**விருந்தோம்பல்**

வீட்டிற்கு வருகின்ற விருந்தினர்களை இன்முகத்தோடு வரவேற்று, அவர்கள் மனம் கோணாதபடி உபசரிக்க வேண்டும். விருந்தினர்களை முகமலர்ச்சியுடன் வரவேற்று உபசரித்தால், அவர்கள் வீட்டில் மனமகிழ்ந்து திருமகள் உறைவாள் என்கிறார்.

**"அகமனமர்ந்து செய்யாள் உறையும் முகமர்ந்து**
**நல்விருந்து ஓம்புவான் இல்"**[22]

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

விருந்தினர் வீட்டிற்கு வந்தால், அமிழ்தமாக இருந்தாலும் அதை அவர்களுக்கு உபசரித்துவிட்டுப் பின் எஞ்சியதைத்தான் வீட்டிலுள்ளோர் உண்ண வேண்டும் என்றும் கூறுகிறார்.

**கடவுள் நம்பிக்கை**

மனம், மொழி, மெய் இவற்றுக்கு அப்பாற்பட்டவராக கடவுளை நம்புவதும், அவருக்குப் பூசை, வழிபாடுகளைச் செய்வதும் ஒருவரின் நம்பிக்கையின் பாற்பட்டனவே. கடவுள் நம்பிக்கை இல்லாதவர்களும் பலர் உள்ளனர். திருவள்ளுவர் கடவுள் ஒருவர் உண்டு என்று நம்புகிறார். ஆனால் கடவுளுக்கு இப்படித்தான் வழிபாடுகள் செய்யவேண்டும் என்று கூறவில்லை. கடவுளின் எண்வகைக் குணங்களை எடுத்துக் கூறுவதன்மூலம் மக்களும் அக்கடவுள் பண்புகளைப் பெற வேண்டும் என்று விரும்புகிறார். முனிதன் தெய்வமாக உயர வேண்டும் என்பதே வள்ளுவரின் விழைவு. உயர்ந்த அறவாழ்வை மேற்கொள்பவன் தெய்வீக வாழ்க்கை வாழ்பனாகவே கருதப்படுவான். மண்ணகத்தை விண்ணகமாக மாற்றுவதே வள்ளுவரின் குறிக்கோள். இதனை,

**"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்**
**தெய்வத்துள் வைக்கப் படும்"**[23]

எனும் குறளில் வெளிப்படுத்துகிறது. திருக்குறளில் உள்ள மிகச்சிறந்த மணியான குறள்களுள் இதுவும் ஒன்று.

**முடிவுரை**

ஒரு நூலை நுணுகி ஆராய்ந்தால், அந்த ஆய்வின் முடிவாக சில உண்மைகள் வெளிப்படும். அவ்வுண்மைகளே நூல் வழங்கும் கருத்துகளாகும். பண்பாடு, அறிவுடைமை, நிலையாமை, கல்வி, ஒழுக்கம், கடமைகள், சான்றோரின் சிறப்பு, அறத்தின் சிறப்பு, இனிய சொல், ஆண்மகனின் கடமை, பெண்களின் சிறப்பு, விருந்தோம்பல் ஆகிய பண்புகளைப் பின் பற்றி நடந்தால் புகழ் என்னும் இசைவு தானே அவர்களையும் அவர்களின் குடும்பங்களையும் வந்து சேரும். குடும்பமும் மேன்மை அடையும் என்பது திருவள்ளுவரின் கருத்துக்கருவூலத்தின் வெளிப்பாடாகும்.

**குறிப்புகள்**

1. Albert G. Kellar, Science of Socitey. P.210.
2. சீ. குமரேசன், புதுமைப்பித்தன் படைப்பு -ஓர் ஆய்வு, ப .15.
3. கா. சிவத்தம்பி, இலக்கியமும் கருத்து நிலையும், ப.27.
4. கலித்தொகை, நெய்தற்கலி (16 : 8).
5. திருக்குறள், பண்புடைமை அதிகாரம் - குறள் : 992.
6. மேற்படி, குறள் : 996.
7. மேற்படி, அறிவுடைமை - குறள் : 427.
8. மேற்படி, இன்னா செய்யாமை - குறள் : 315.
9. மேற்படி, நிலையாமை - குறள் :336
10. திருக்குறள், கல்வி(அதிகாரம் - குறள்: 391)
11. மேற்படி, குறள்: 400.
12. மேற்படி, குறள்: 398
13. மேற்படி, குறள்: 131.
14. மேற்படி, குறள் : 138.




International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019
Available at: www.ijtlls.com



15. மேற்படி, குறள்: 67.
16. மேற்படி, குறள் : 983.
17. மேற்படி, குறள்: 35.
18. மேற்படி, குறள்: 100.
19. மேறபடி, குறள்: 49.
20. மேற்படி, குறள்: 56.
21. மேற்படி, குறள்: 55
22. மேற்படி, குறள்: 84.
23. மேற்படி, குறள்: 50.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

# திருக்குறளில் மனித வாழ்வியல்

## Human Life Ethics of in *Thirukkural*

**ச.பிரபாகரன்,** தமிழ் முனைவர் பட்ட ஆய்வாளர்,
அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரி (தன்னாட்சி), சிவகாசி.

### Abstract

*The paper discusses on the life related ethics as elucidated in the moral treatise "Thirukkural". Man has come to a living with moral aspects by his sense of ethical being. Tamil culture is a developed one in all human virtues. They give more importance to it. "Thirukkural" is rich with such ethics related to a well being. It mostly delineates about Charity, Wealth, Happiness and Liberation. These are the chief assets of an individual to lead a harmonious life. Today, the modern man suffers by the lack of such virtues. Hence, the paper elicits the virtues from "Thirukkural" to give rejuvenation for the people of our society.*

**Keywords:** Human, Life Ethics, *Thirukkural*

### முன்னுரை

தமிழில் உள்ள நூல்களிலேயே சிறப்பிடம் பெற்ற நூல் *திருக்குறள்* ஆகும். இது அடிப்படையில் ஒரு வாழ்வியல் நூலாகும். மனித வாழ்வின் முக்கிய அங்கங்களாகிய அறம் அல்லது தர்மம், பொருள், இன்பம் அல்லது காமம் ஆகியவற்றைப் பற்றி விளக்கும் நூலாகும். இத்தகைய சிறப்பு பெற்ற திருக்குறள் மனித வாழ்க்கையில் எவ்வாறு பயப்படுகின்றது என்பதை இக்கட்டுரை வழியாக காணலாம்.

### திருக்குறளின் சிறப்பு

திருக்குறளுக்கென்று தனிச் சிறப்பு உள்ளது. தமிழ் நெடுங்கணக்கின் முதல் எழுத்தாகிய 'அ' வில் ஆரம்பித்து தமிழ் மொழியின் இறுதி எழுத்தாகிய 'ன்' னுடன் முடிவடைகின்றது. வாழ்வின் எல்லா அங்கங்களையும் திருக்குறள் சிறப்பித்துக் கூறுவதால், அதைச் சிறப்பிக்கும் விதமாக, முப்பால், உத்தரவேதம், தெய்வநூல், பொதுமறை, பொய்யாமொழி, வாயுறை வாழ்த்து, தமிழ்மறை, திருவள்ளுவம் என்ற பெயர்களால் சிறப்பித்து அழைக்கப்படுகின்றது.

### அறமே சிறந்தது

மனிதனை தமிழ் இலக்கியங்கள் இன்புறுத்தி அதன் வழியாக அற ஒழுக்கத்தை உணர்த்தும் வலிமை உடையதாக விளங்குகின்றன. அற ஒழுக்கம் தான் மனிதனை விலங்குகள், பறவைகள், மற்ற பிற உயிர்களிடமிருந்து வேறுபடுத்திக் காட்டுகிறது. விலங்குகள் மனம் போன போக்கில் செயல்படும் குணமுடையன. ஆனால் மனிதன் அவ்வாறு செய்வதில்லை. எனவே மனிதன் என்பவன் அறத்தில் சிறந்து காணப்படுகின்றான் என்பதை திருக்குறள் எடுத்துரைக்கின்றது.

**"அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்**
**இழுக்கா இயன்றது அறம்"** (கு.35)

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

என்ற குறள் வழியாக திருவள்ளுவர் எடுத்துரைக்கின்றார். பொறாமை, ஆசை, சினம், கடுஞ்சொல் ஆகிய இந்த நான்கு குற்றங்களும் இடங்கொடுக்காமல் அவற்றைக் கடிந்தது ஒழுகுவதே அறமாகும் என்கிறார். அதனால் அறமே சிறந்தது என்று திருவள்ளுவர் திருக்குறள் வழியாக சுட்டிக்காட்டுகின்றார்.

**பெண்ணின் சிறப்பு**

பெண் என்றாலே சிறப்பு என்கின்றனர் நம் முன்னோர்கள் பெண் என்பவள், மகளாய், சகோதரியாய், தோழியாய், மனைவியாய் ஒவ்வொரு ஆணின் வாழ்க்கையிலும் ஒரு துணையாகவும், வாழ்க்கையை முன்னெடுத்து செல்பவளாகவும் காணப்படுகின்றாள். இத்தகைய பெண் எவ்வாறு வாழ வேண்டும் என்று திருவள்ளுவர் புலப்படுத்துகிறார் இதனை,

**“தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற**
**சொற்காத்துச் சோர்விலாள் பெண்” (கு.56)**

என்ற குறள் வழியாக அறியமுடிகின்றது. பெண்மையை பெருமைப்படுத்தும் விதமாக ஒரு கவிதை அமைந்துள்ளது,

**“பெண்மை என்றாலே**
**பொறுமைக்கு பூமியாய்....**
**பொருளுக்கு... கடலாய்....**
**கடமைக்கு நதியாய்....**
**அழகுக்கு நிலவாய்....**
**ஆடவருக்கு அரசியாய்....**
**சேய்க்கு தாயாய்....**
**பாரதி கண்ட புதுமை பெண்ணாய்....**
**பாரதத்தின் பாவையாய்.....”**

போன்ற சிறப்புகள் பெண்களுக்கு அமைந்துள்ளது.

**குழந்தைச் செல்வம்**

உலகில் உள்ள அனைத்து உயிர்களுக்கும் செல்வம் எது வென்றால் ‘குழந்தைச் செல்வம்’ தான். ஒரு ஆண், பெண் வாழ்க்கையில் பிறவிக் கடனாக கருதுவது இந்த குழந்தைச் செல்வத்தை பெறுவது தான். இத்தகைய குழந்தைச் செல்வத்தைப் பற்றி திருவள்ளுவர் கூறுகின்றார். அத்தகைய குழந்தைகள் நல்லவை, தீயவை எவையென்று அறிந்து நல்லவைகளை கற்றுக்கொள்ளும் குழந்தைகளை பெறுதல் சிறப்பாகும்.

**“பெறுமவற்றுள் யாமறிந்து இல்லை அறிவறிந்த**
**மக்கட்பேறு அல்ல பிற” (கு.61)**

என்ற குறள் வழியாக அறியமுடிகின்றது.

**அன்பற்ற வாழ்க்கை**

மனித வாழ்க்கையில் அன்பு ஒன்றே நிலையானது. யாருடைய வாழ்க்கையில் அன்பு இல்லையோ அவருடைய வாழ்க்கை பாலை நிலம் போன்றது. பாலை நிலத்தில் மரம் வளர்ந்தால் அதில் எந்த பயனும் கிடைக்காதோ அதைப் போல் உள்ளத்தில் அன்பு இல்லாதவர் வாழ்க்கை பாலை நிலத்தில் இருக்கும் காய்ந்த மரம் போன்று காட்சியளிக்கும் என்பதை திருக்குறள் வழியாக வள்ளுவர் சுட்டிக்காட்டுகின்றார் இதனை,

**“அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்**
**வற்றல் மரந்தளிர்த் தற்று” (கு.78)**

என்ற குறள் புலப்படுத்துகின்றது.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**விருந்தினர் உபசரிப்பு**

மனித வாழ்வில் தன் வீட்டிற்கு வரும் விருந்தினரை முக முலர்ச்சியுடன் வரவேற்று அவர்களுக்கு வயிறு நிறைய விருந்து படைத்து முகமலர்ச்சியுடன் அனுப்ப வேண்டும். சிலர் அனிச்சப்பூ முகர்தவுடன் எப்படி வாடிப்போகுமோ அதைப் போல் சிலர் வீட்டிற்கு வரும் விருந்தினருடன் முகத்தில் புன்னகையில்லாமல் வரவேற்றால் அனிச்சப்பூ எவ்வாறு முகர்ந்தவுடன் வாடிவிடுமோ அதைப் போல் வீட்டிற்கு வந்த விருந்தினரும் வாடிவிடுவார்கள். அதனால் வீட்டிற்கு வரும் விருந்தினரை முகமலர்ச்சியுடன் உபசரிப்பு செய்ய வேண்டும் என்கிறார் வள்ளுவர் இதனை,

**"மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து**
**நோக்கக் குழையும் விருந்து" (கு.90)**

என்ற குறள் வழியாக அறியமுடிகின்றது.

**இனிய சொல்**

இவ்வுலகில் மனிதன் என்பவன் தான் பல நிலைகளில் தனது தேவைக்கு ஏற்றாற் போல் பிறரிடம் பேசுகின்றான். அவ்வாறு பேசுபவர்கள், வஞ்சம் நிறைந்து காணப்படுகிறார்கள். ஆனால் மனிதன் என்பவன் தன்னைச் சுற்றி உள்ள மனிதர்களிடம் அன்பு கலந்த வஞ்சம் இல்லாத சொற்களை பயன்படுத்த வேண்டும் என்று வள்ளுவர் எடுத்துரைக்கின்றார் இதனை,

**"இன்சொல் ஈரம் அளைஇப் படிறுஇலவாம்**
**செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்" (கு.91)**

என்ற குறள் வழியாக எடுத்துரைக்கின்றார்.

**பிறர் மனை நோக்காமை**

பூமியில் வாழும் உயிர்களில் மனிதன் என்பவன் சூழலை கருதி சில தவறுகளை செய்கின்றான். அவ்வாறு செய்யும் தவறுகளில் மிகக் கொடுமையானது பிற மனைவியை தவறான எண்ணத்துடன் பார்ப்பதாகும். அவ்வாறு பார்ப்பவர்களுடைய வாழ்க்கையில் பகை, பாவம், அச்சம், பழி என இவை நான்கும் அவர்களை விட்டு நீங்காது என்று திருக்குறள் வழியாக வள்ளுவர் சுட்டிக்காட்டுகிறார் இதனை,

**"பகைபாவம் அச்சம் பழியென நான்கும்**
**இகவாவாம் இல்லிறப்பான் கண்" (கு.146)**

என்ற குறள் வழியாக அறியலாம்.

**முதன்மையான அறிவு**

பழிக்குப் பழி என்ற எண்ணத்துடன் வாழும் மனித சமூகத்தில் மனிதன் எவ்வாறு வாழ வேண்டும் என்ற கருத்தை திருக்குறள் தெளிவாக எடுத்துரைக்கின்றது. மனிதன் என்பவன் தனக்கு ஒருவன் தீமை செய்தால் அவர்களுக்கு தீமை செய்யாமல் நன்மை செய்ய வேண்டும். அவ்வாறு தீமை செய்யாதவர்கள் முதன்மையான அறிவை பெற்றவர்கள் முதன்மையான அறிவை பெற்றவர்கள் என்று வள்ளுவர் எடுத்துரைக்கின்றார் இதனை,

**"அறிவினுள் எல்லாந் தலையென்ப தீய**
**செறுவார்க்கும் செய்யா விடல்" (கு.203)**

என்ற குறள் வழியாக அறியமுடிகின்றது.

**நிலையாமை உடைய உலகம்**

உலகத்தில் தோன்றிய அனைத்தும் நிலையாமையானதாக உள்ளன. எல்லாம் மாயமெ என்று நம் முன்னோர்கள் கூறுவார்கள். நேற்று இருந்தவை இன்று நிலைப்பதில்லை, இன்று இருப்பவை நாளை நிலைப்பதில்லை இவ்வாறு நிலை இல்லாத உலகில் மனிதனும் நிலை இல்லாமல் இருக்கின்றான். நேற்று இருப்பவன் இன்று இருப்பதில்லை என்ற நிலையாமையை வள்ளுவர் புலப்படுத்துவதை,

E-ISSN: 2581-7140

Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**"நெருந லுளனொருவன் இன்றில்லை என்னும்**

**பெருமை யுடைத்திவ் வுலகு" (கு.336)**

என்ற குறள் வழியாக அறியலாம்.

**பேராசையை விட வேண்டும்**

மனிதன் என்பவன் ஆசையுடன் வாழ்பவன் ஆனால் ஆசை இருப்பினும் பேராசை இருக்க கூடாது என்பார்கள். இவ்வுலகில் எல்லாம் தனக்கு கிடைக்க வேண்டும் என்ற ஆசையில் பல தவறுகளைச் செய்கின்றான். அவ்வாறு செய்யும் தவறால் கிடைக்கும் பாவங்கள் அவனை விட்டுச் செல்லாது என்பார்கள். திருக்குறள் ஆசைகளைப் பற்றிக் கொண்டு விடாமல் வாழும் மனிதர்களை துன்பங்கள் என்றும் விட்டுச் செல்லாது என்ற கருத்தினை எடுத்துரைக்கின்றது இதனை,

**"பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்**

**பற்றி விடாஅ தவர்க்கு" (கு.347)**

என்ற குறள் புலப்படுத்துகின்றது.

**முடிவுரை**

மனித வாழ்க்கைக்கு ஒரு நூல் பயன்படுவதை வைத்து அந்நூலின் மதிப்பை தெரிந்துகொள்ளலாம் அவ்வகையில் திருக்குறள் மனித வாழ்க்கைக்கு எவ்வாறு பயன்படுகின்றது என்பதை இக்கட்டுரை வழியாக நம்மால் அறியமுடிகின்றது.

**பயன்பட்ட நூல்**

1. நீதிநூற்களஞ்சியம், பத்மதேவன், கொற்றவை பதிப்பகம், சென்னை, 1983.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

# திருக்குறளில் அறிவியலின் பன்முகம்

## Multifacet of Science in Thirukkural

**கு.பொன்னழகு,** முனைவர் பட்ட ஆய்வாளர்
தமிழியற்புலம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை – 21.

**Abstract**

*The paper brings out the multifaceted ability os science as portrayed in "Thirukkural". Tamil society is a developed society on the days of Valluvar when compared to thw west. West has not risen at that times but the scientific knowledge of the Tamil society is par excellent. Much more evidences are there in "Thirukkural. The society was well developed in scientific fields such as Astronomy, Water management and Medicine. The evidences prove that the methods practiced by them are highly useful in the development of the society. Hence, the paper brings down the science related details established in "Thirukkural".*

**Keywords:** Multifacet , Science, Thirukkural

**முன்னுரை**

காதல், வீரம், கொடை, முதலிய சிறந்த உணர்ச்சிகளிலும் இயற்கையின்பத்திலும் ஈடுபட்டிருந்த புலவர்களின் உள்ளம். அடுத்த சில தலைமுறைகளில் நீதிகளைப் பாடும் நிலைக்கு மாறியது. நாட்டில் களப்பிரர் என்னும் சிலர் புகுந்து நாட்டு மக்களின் அமைதியைக் கெடுத்தார்கள் என்று சிலர் கூறுவர். ஆகவே வாழ்க்கை தரும் இன்பங்களைப் பாடுவதற்கு வாய்ப்பு இல்லாமல் போயிவிட்டது. வாழ்க்கையே ஒரு சிக்கல் ஆகிவிட்டமையால் சமுதாயத்தில் எப்படி வாழவேண்டும்? என்ன? என்ன? நீதிகளைப் போற்ற வேண்டும், என்று எடுத்துரைக்க வேண்டிய கடமை புலவர்களுக்கு வந்து சேர்ந்த. அந்தக் காலத்தில் (கிபி. 100 - 500 வரையில்) இயற்றப்பட்ட சில நூல்கள் என்று குறிப்பிட்டார்கள். நீதி நூல்களுள் தலையாய நூலான திருக்குறளில் காணலாகும் பல கருத்துக்களை ஆராய்ந்து அவற்றிலிருந்து "திருக்குறளில் அறிவியலின் பன்முகம்" என்னும் தலைப்பில் காணப்படும் கருத்துக்களை போசுவதையே இக்கட்டுரை நோக்கமாகக் கொண்டுள்ளது.

**திருக்குறளில் பன்முகம்**

பன்முகம் ஸ்ரீ பன்-முகம், திருக்குறளில் பன்முகம் என்னும் போது திருக்குறளில் காணப்படும் அறக்கருத்துக்களினூடேயும் பல முகங்களை அந்நூலைப் படிக்கும்போது நாம்மால் கண்டுணர முடிகிறது. எவ்வகைச் சார்பையும் கடந்து மனித உள்ளத்தின் இயல்பைத் துருவி ஆராய்ந்து, உண்மையை மட்டும் தெளிவாக எடுத்துரைப்பது நூலின் மற்றொரு சிறப்பாகும். எந்தக் கட்டுப்பாடும் இல்லாமல் அடிப்படையான உண்மையைக் கண்டு உணரவும் உணர்த்தவும் அந்நூலுக்கு முடியும். அந்த வகையில் திருக்குறளின் பன்முகத்தினை இக்கட்டுரை விரிவாகக் காட்டுகிறது.

**திருக்குறளும் அறிவியலும்**

நம் அன்றாட வாழ்வில் அறிவியல் மிக இன்றியமையாத இடத்தைப் பெற்றுள்ளது.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com


“அறிவியல் இல்லாமல் வாழ்க்கை இல்லை” என்ற நிலை அனைவரும் ஏற்றுக்கொள்ளக் கூடியதே “அறிவின் நுண்ணிலை வளர்ச்சியே அறிவியல்” என்பதற்கேற்ப மனிதனின் அறிவு வளர வளர அறிவியலும் பல வளர்ச்சி நிலைகள் ஏற்பட்டுள்ளன. அத்தகைய மனிதனின் அறிவை அதுவும் நமது முன்னோர்களின் அறிவு வளர்ச்சியை திருக்குறள் நான்றாகவே நமக்கு எடுத்துக்காட்டுகிறது. இன்று சந்திரனில் மனிதன் உயிர்வாழ முடியுமா? என்று அறிஞர்கள் ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கும் கோள்கள் பற்றியும் கோள்களின் நிலைபற்றியும் வானியல் அறிவு விண்ணியல் அறிவு என்ற இருநிலைகளில் திருக்குறள் எடுத்தியம்புகிறது.

**திருக்குறளில் வானியல் அறிவு**

உலகில் தோன்றிய பல்வேறு அறிவியல் கல்விகளில் மிகத் தொன்மையானது. வானியல் கல்வி, மேலைநாட்டார், பதினைந்தாம் நூற்றாண்டில்தான் **“நிக்கோலஸ்கிராப்ஸ்”** என்பவர் உலகம் தட்டை இல்லை, உருணட்டையானது என முறையாகக் கணித்துக் கூறினர்.ஆனால் எவரும் ஏற்றுக்கொள்ளவில்லை பாதினாறாம் நூற்றாண்டில் வாழ்ந்த கலீலியே, உலகம் உருண்டையானது என்பதை தொலை நோக்கியால் கண்டுபிடித்துச் சொன்ன பிறகு தான் மக்கள் ஏற்றுக் கொண்டனர். மேலை நாட்டினர் கண்டறிந்ததற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே சொல்லியது உலகப் பொதுமறையான திருக்குறள்

**“சுழன்றும் ஏர்பின்னது உலகம் அதனால்**
**உழ்ந்தும் உழவே தலை” - குறள் - 1031**

என்னும் குறட்பாவில் உலகம் சுழல்கிறது எனக் கூறுகிறது. “உருண்டையான பொருள்தான் சுழலும்” என்பது அறிவியல் உண்மை. எனவே உலகம் உருண்டையாக இருக்கும் என்பதனை எந்தக் கருவியும் இல்லாத அந்தக் காலத்தில் வள்ளுவர் உணர்த்தும் தம் குறளில் உணர்த்தியுள்ளமை வியப்புக்குரியது. தானே ஒளிவிடக்கூடிய ஞாயிற்றை “நாள்மீன்” எனவும் ஞாயிற்றிடமிருந்து ஒளிபெற்று ஒளிவிடக்கூடியவற்றைக் “கோள்மீன்” எனவும் பண்டையத் தமிழர் குறிப்பிட்டுள்ளனர். திங்கள் தானாக ஒளிவிசுவதில்லை. இந்த வானியல் உண்மையைத் திருக்குறள் வெளிப்படுத்துகிறது.

**“மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல்**
**காதலை வாழி மதி” - குறள் - 1118**

இக்குறளில் “திங்களுக்குத் தானாக ஒளிவிடும் தன்மை இல்லை” என்னும் வானியல் உண்மையை அறியலாம். “ திங்களைப் பாம்பு கொண்டற்று” குறள் - 1146 என்னும் குறள் தொடர், திங்கள் மறைப்பு (சந்திரகிரகணம்) பற்றியதாகும்.

**திருக்குறளில் நீரியல் அறிவு**

“நீரின்றி அமையாது உலகு” (குறள் - 20) என்பதற்கேற்ப நம் வாழ்வில் அடிப்படைத் தேவைகளுள் ஒன்றான நீர் பற்றிய அறிவியல் கருத்தையும் திருக்குறள் நம்மிடம் பகர்கிறது. நீர் மழையாக மண்ணிற்கு வருவதும் ஆவியாகிய விண்ணிற்குச் செல்வதுமான சுழற்சி எக்காலத்தும் நிகழ்ந்து கொண்டிருப்பது இவ்வியக்கமே உலகை வளப்படுத்துகிறது. இந்நீர்சுழற்சி இயக்கம் இயற்கையாக நிகழக் கூடிய ஒன்றே, இவ்வியக்கம் இல்லை எனில் மழைவளம் குன்றும் வெப்பநிலை மிகும். புவியின் தட்பவெப்பநிலை மாறும். இச்சுழற்சி முறைதான் உயிர்கள் தழைத்திருப்பதற்கோர் காரணம். இவ்விளைவு நிகழவில்லையெனில் கடலும் வற்றும் இதனை,

**“நெடுங்கடலும் தன்னீர்மை குன்றும் தடிந்தெழிலி**
**தான்நல்கா தாகி விடின்” - குறள் - 17**

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

என்று கூறுகிறது. மழைவளம் குறைந்தால் இச்சமநிலை பிறழும் எனவே தான் மழையை அமிழ்தம் என்றார் திருவள்ளுவர். உணவு தருவதாலும் மழை அமிழ்தாகிறது உயிரைக் காப்பதாலும், உலகை அழிவினின்றும் தடுப்பதாலும் அமிழ்தாகிறது. இ∴து எத்துணை அறிவியல் கூர்ந்த சிந்தனை!

**திருக்குறளில் மருத்துவ அறிவு**

இன்றைய காலகட்டத்தில் நாகரிக வளர்ச்சியின் காரணமாக மக்களின் பழக்கவழக்கங்களில் மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன என்பது யாரும் மறக்க முடியாத உண்மையாகும். அவற்றுள் குறிப்பிடத்தக்கது உணவு முறை. மக்களின் உணவு முறை மாறும் போது பல புதிய புதிய நோய்கள் உண்டாவதும் உண்மையே. இத்தகைய நோய்கள் வராமலிருப்பதற்கு ஒருவன் எவ்வாறு உணவு முறைகளை மேற்கொள்ள வேண்டும்? என்று கூற விரும்பியே "மருந்து" என்னும் ஓர் அதிகாரத்தையே படைத்துள்ளார் திருவள்ளுவர். தற்போது வளர்ந்து வரும் அறிவியல் வளர்ச்சியால் நோய்களுக்கான மருத்துவ நூல்களை அறிஞர் பலர் படைத்தாலும் இன்றைய மருத்துவ நூல்களுக்கெல்லாம் முன்னோடியாக திருக்குறள் விளங்குகிறது.

உடல் உறுதியாக இருப்பதற்கு வாதம், பித்தம், சீதம், இம்மூன்றின் சமநிலையே காரணமாகும். அவற்றின் சமநிலை மாறும்போது நோய்மிகும்.(குறள், 941) அவற்றை சமப்படுத்த இயற்கை தரும் காய்கனிகளிலிருந்து மருந்து கண்டு உண்டனர் " மருந்தாகித் தப்பா மரத்தற்றால்" (குறள் 217) எனும் குறள் வரி தமிழ் மருத்துவத்தின் தொன்மையை எடுத்தியம்பும்.

இன்று பரவலாகப் பயின்றுவரும் "இயற்கை மருத்துவம்" என்னும் மருந்தில்லா மருத்துவ முறையை அன்றே நம் தமிழர் கண்டறிந்துள்ளனர்.

**"மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது**
**அற்றது போற்றி உணின்" (குறள் - 942)**

என்னும் திருக்குறள் இக்கருத்திற்கு அரண் சேர்க்கிறது.

மேலும் ஒரு மருத்துவன் தன்னிடம் வரும் நோயாளிக்கு எவ்விதம் மருத்துவம் செய்ய வேண்டும் என்பதைப் பற்றியும் ஓர் குறள் நமக்கு நவில்கிறது. நோய்யைக் குறிகளால் அறிந்து அதற்குரிய காரணத்தைத் தெளிந்து, நோயைத் தீர்க்கும் உபாயங்களையும் அறிந்து மருத்துவன் மருத்துவம் செய்ய வேண்டும் என்றும் மருத்துவ நூலைக் கற்றவன், நோயுள்ளவனுடைய வயது முதலியவற்றையும் நோயின் அளவையும் நோயுற்ற காலத்தையும் ஆராய்ந்து மருத்துவம் செய்ய வேண்டும் என்றும் ஒரு மருத்துவன் எவ்வாறு தன் கடமையைச் செய்ய வேண்டும் என்பதையும் ஓர் குறள் எடுத்துக்காட்டுகிறது.

**"நோய்நாடி நோய்முதல்நாடி அதுதணிக்கும்**
**வாய்நாடி வாய்ப்பச் செயல்" - குறள் - 94**

**"உற்றான் அளவும் பிணி அளவும் காலமும்**
**காற்றான் கருதிச் செயல்" - குறள் 949**

என்ற இரு குறட்பாக்களும் மேற்கண்ட கருத்தை வெளிப்படுத்துகின்றன.

**முடிவுரை**

திருக்குறள் மனிதவாழ்க்கையைச் செம்மைப்படுத்த எழுந்த நீதி நூல்களின் வரிசையில் முதன்மை பெற்றிருந்தாலும் அந்நூலில் மனித வாழ்வில் பயன்படுத்த வேண்டிய அறங்களைக் கூறியதோடு மட்டும் நில்லாமல் இன்றைய காலகட்டத்தில் குறிப்பாக அறிவியல் வளர்ச்சியின் பன்முகங்களான வானியல் நீரியல், மருத்துவம் ஆகியவற்றை இக்கட்டுரை மூலமாக அரிய ஓர் வாய்ப்பினை திருக்குறள் நமக்கு கொடுத்துள்ளது. இது மட்டுமில்லாமல் இன்னும்

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

**E-ISSN: 2581-7140**
**Special Issue I, August-2019** **Available at: www.ijtlls.com**

எத்தனையோ முகங்கள் அதற்கு உண்டு என்பதையும் அவற்றை அன்றாடம் நம் வாழ்வில் தினந்தோறும் தரிசிப்போம் என்றும் இக்கட்டுரையின் வாயிலாக உறுதிகொள்வோம்.

**பார்வை நூல்**

1. பரிமேலழகர் உரை, திருக்குறள்.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

# தமிழ்மறையும் புள்ளினமும்

# Ornithology and the Universal Treatise *Thirukkural*

**திருமதி.ச.மீனாட்சி,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
எஸ்.எ.்.ப். ஆர் மகளிர் கல்லூரி, சிவகாசி.

## Abstract

*The article discusses on the portrayal of birds found in "Thirukkural". Ornithology is the scientific term for the study of birds, its life, conservation and its related fields. In Tamil culture, ecosystem was considered vital to human life and they knew that the biological cycle will balance the daily life of all beings in the world. They rever them as gods even in their life. We can see these ornithological details in Valluvar's "Thirukkural". The paper elicits the definition to "Pullinam" (Birds) and speaks about Crow, Raven, Owl, Crane, Swan and Peacock. These birds qualities are shown as examples to lead a better life. Conservation of them and at present times is also discussed for clear understanding. Hence, the paper brings the details from "Thirukkural".*

**Keywords:** Ornithology, Universal Treatise, *Thirukkural*

**முன்னுரை**

தமிழ்த்தாய்க்கு சிறந்த அணிகலன்களை அணிந்துள்ள புலவர்களுள் வள்ளுவரும் ஒருவரே. இயற்கையோடு இயைந்த வாழ்வினைக் கொண்டவர். ஓரறிவு முதலாக ஆறறிவு ஈறாக உள்ள உயிரினங்களை கையில் கொண்டு நுட்பமாக மனிதனின் ஒழுக்கத்தை பறை சாற்றியவர் என்று கூறன் மிகையாகாது. தமிழ் நாட்டில் விலங்குகளை விட பறவையினங்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன. தமிழ் மறையில் புள்ளினங்கள் பெறும் முக்கியத்துவத்தினையும், வள்ளுவன் எடுத்துரைக்கும் புள்ளினப் பாதுகாப்பினையும் எடுத்துரைப்பதோடு தற்கால புள்ளினங்களின் பாதுகாப்பு மற்றும் இனஅழிவினையும் எடுத்துரைப்பதாக இக்கட்டுரை அமைகின்றது.

**புள்ளினம் - விளக்கம்**

**"யாதும் ஊரே யாவரும் கேளீர்"** என்ற வரிகளுக்கு இலக்கணமாகத் திகழ்வது புள்ளினங்களே. 'புள்' என்பதற்கு கழகத் தமிழ் அகராதி, "பறவை, வண்டு, நிமித்தம், கைவளை"[1] என்று பொருள் கொள்கின்றது. பறவையினம் மற்றும் பறவைகளின் கூட்டமே புள்ளினம் என்று அழைக்கப்படுகின்றது. அலைகடலில் மீன்களைத் தின்னுகின்ற பறவைகளின் கூட்டத்தினை 'புள்ளினம்' என்று நற்றிணை பதிவு செய்துள்ள முறையினை,

**"..... அலைக்குங் கடல்மீன் அருந்திப்**
**புள்ளினம் ........." (நற்.382:3-4)**

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. எனவே புள்ளினம் என்பது பறவைகளின் சிறப்புப்பெயர் என்பதை அறிய முடிகின்றது. பறவைகளின் இயல்பு வினையான பறத்தலிலிருந்து உண்டான

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

காரணப்பெயரே 'பறவை' ஆகும். இந்தியப் பறவையியலின் தந்தை என்று அழைக்கப்படும் சலீம் அலி, "இறக்கைகள் கொண்ட இருகாலியைப் பறவை"[2] என்று விளக்கம் அளிக்கின்றார்.

**தமிழ்மறை – புள்ளினங்கள்**

தமிழ்மறை அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று உறுதிப்பொருட்களை மையமாகக் கொண்டவை. பறவைகளின் வாழிடம், உண்ணும் உணவு, கூடுகட்டி வாழும் முறை, இனப்பெருக்கம் போன்றவற்றை பண்டை மக்கள் நன்கு அறிந்திருந்தனர். மேலும் புள்ளினங்களை கடவுளின் ஊர்தியாகவும் வணங்கினர். பறவைகளைப் 'புள்' என்ற சொல்லால் கூடாவொழுக்கம், நிலையாமை என்ற இரண்டு அதிகராங்களில் இரண்டு குறள்களைச் சுட்டியுள்ளார். மேலும், ஐந்து குறள்களில் ஐந்து புள்ளினங்களை பின்வருமாறு,

- **காகம்**
- **கூகை, காக்கை**
- **கொக்கு**
- **அன்னம்**
- **மயில்**

வகைப்படுத்தியுள்ளார். புள்ளினங்களின் செயல்பாடுகளை குறிப்பிட்டு மக்களை நெறிப்படுத்துகின்ற ஆளுமை திறன் உடையவராக வள்ளுவர் நம்மிடையே வலம் வருகின்றார்.

**காகம்**

காக்கைகள் தென்னிந்தியா முழுவதும் காணப்படுகின்ற பறவையினமாகும். உடல் முழுவதும் கருப்பாக இல்லாமல் கழுத்துப் பகுதி சாம்பல் நிறமாக இருக்கும். குணத்தின் அடிப்படையில் மக்கள் இதனை 'நல்ல காக்கை, மணியன் காக்கை' என்றெல்லாம் குறிப்பிடுகின்றனர். மனிதர்களின் வாழ்விடங்களைச் சார்ந்து வாழும் காக்கை எல்லாவற்றையும் தின்று வாழக்கூடிய ஆற்றல் பெற்றது. தமிழ்நாட்டில் இரு வகை காக்கைகள் உள்ளன.

1. **ஊர்க்காக்கை**
2. **அண்டங்காக்கை**

என்பதாகும். ஊர்க்காக்கையின் உடல் கரியதாகவும், கழுத்து மட்டும் சாம்பல் நிறமாகவும் காணப்படும். அண்டங்காக்கையின் உடல் முழுவதும் கருமையாகக் காணப்படும். சுகாதாரக்கேடு விளைவிக்கும் வண்ணம் நகர்புறத்தில் கிடக்கின்ற செத்த எலி, குப்பை கூளம், அழுகிய பழம், காய்கறிகள் போன்றவற்றைத் தின்று சுத்தம் செய்யும் பணியினையும் மேற்கொள்ளும். காகங்களுக்கு இயல்பாகவே வீடுகளில் உணவும் வைக்கப்படுகின்றது. காக்கைகள் கூடி உணவுண்ணும் முறையினை,

> **"காக்கை கரவா கரைந்து உண்ணும் ஆக்கமும்**
> **அன்ன நீரார்க்கே உள" (திருக்குறள்:527)**

என்ற குறள் விளக்குகின்றது. காகங்கள் பல்லுயிர் ஓம்பும் திறன் உடையது என்பதனை வள்ளுவம் விளக்குகின்றது. தனக்குக் கிடைத்த உணவினை தன்னைச் சார்ந்த பறவைகளை கரைந்து அழைத்து கூடி உணவினை உண்ணும் வழக்கம் உடையன. 'கரைந்து உண்ணும்' காகத்தின் இயல்பினைக் கூறி மனிதர்களிடம் விருந்தோம்பும் பண்பினை மேம்படுத்துகின்றார். மார்ச் முதல் ஆகஸ்ட் வரை மரங்கள், மின் கம்பங்கள் மற்றும் வீட்டு மாடப்புரைகள் ஆகிய இடங்களில் கூடமைத்து 4 முதல் 5 முட்டைகள் வரை இடுகின்றன. இன்றளவும் காகங்கள் இயல்பாக அனைத்து இடங்களிலும் காணப்படுகின்றது.

**கூகை காக்கை**

கூகைகள் அனைத்து கண்டங்களிலும் உலகம் முழுவதும் பரவிக் காணப்படுகின்றன. தமிழகம் எங்கும் பழைய கோட்டைகள், பாழடைந்த வீடுகள், புழக்கத்தில் இல்லாத கிணறு ஆகியவற்றில் பகலில் பதுங்கியிருந்து இரவில் வெளிப்படும் தன்மை உடையது. இரவு

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

நேரங்களில் மட்டுமே கூகை வெளிப்படும். எதிர்பாராது இரவில் இதனை எதிர்ப்படுவோர் அஞ்சி 'சாக்குருவி' என்று அழைப்பர். இரவில் மட்டும் வெளிப்படுவதால் இதனை 'பகற்குருடு' என்று அழைப்பர். கூகைக்கு வெவ்வேறு வகையான குரல்கள் உள்ளன. க.ரத்னம் கூகையின் இயல்பினை, "கதிரவனின் ஒளியைத் தாங்கும் ஆற்றல் இதன் கண்களுக்கு இல்லாததால் காக்கை முதலிய பறவைகள் தாக்கும் போது தன்னைக் காத்துக் கொள்ள இயலாததாக உள்ளது."[3] என்ற முறைகளில் குறிப்பிடுகின்றார். இக்கருத்தினை திருவள்ளுவர்,

**"பகல்வெல்லும் கூகையைக் காக்கை இகல்வெல்லும்**
**வேந்தர்க்கு வேண்டும் பொழுது" (குறள்:481)**

என்ற குறளில் குறிப்பிடுகின்றார். பகல் பொழுதில் காக்கை கூகையை வெல்லும். இரவு நேரங்களில் கூமை காக்கையை வெல்லும் திறனுடையது என்று குறிப்பிடுகின்றார். ஆண்டு முழுவதும் மரப்பொந்துகளிலும், பாழடைந்த கட்டிடங்களிலும் 4 முதல் 7 முட்டைகள் வரை இடுகின்றன. ஒரு நாட்டை ஆளும் மன்னன் பகலில் கரைந்து உண்ணும் காகத்தினைப் போல பல்லுயிர்களை ஓம்பும் திறனுடையவனாகவும், இரவில் சத்தமின்றி வலம் வரும் கூகையைப் போன்று கூரிய மற்றும் பரந்த பார்வை உடையவனாகவும் திகழ வேண்டும் என்பதனை வள்ளுவம் விளக்குகின்றது.

**கொக்கு**

கொக்குகள் கூழைக்கடா வரிசையில் ஆர்டிடே என்னும் குடும்பத்தைச் சார்ந்ததாகும். வளைவான தனது உருவத்தாலும், எழுப்பும் ஒலியினாலும் 'கொக்கு' என்ற பெயரினைப் பெற்றுள்ளன. பறவையியலின் தந்தை ஸ்லீம் அலி கொக்கின் பெயர் குறித்து "கொக்கு தொண்டைக் கட்டிக் காறியது போல் ஓர் ஓ எழுப்பும்"[4] என்று குறிப்பிட்டுள்ளார். கொக்கு வெண்மை மற்றும் பழுப்பு நிறம் கலந்த பறவையாகும். இவற்றின் நகங்கள் நீண்டு மெல்லியதாய் இருக்கும். கொக்கினை குளத்துக் கொக்கு, நுள்ளை மடையான், குருட்டுக் கொக்கு என்றெல்லாம் அழைப்பர். நீர் குறைந்த இடங்களில் கரையில் நின்று கொண்டு இரையைத் தேடும் பழக்கம் உடையது. பொறுமையாக நெடுநேரம் மீனிற்காக நீரைப் பார்த்துக் கொண்டிருக்கும் கொக்கை "பார்வல் கொக்கு" என்று பதிற்றுப் பத்து குறிப்பிடுவதை,

**"நீர்றன் மருங்கு வழிப்படாப் பாகுடிப்**
**பார்வற் கொக்கின் பரிவேட் பஞ்சாச்" (பதிற்று.21:26-29)**

என்ற பாடலடியால் அறியலாம். கூரிய பார்வையினை உடையது. இரைக்காக பொறுமையாக தேடும் கொக்கின் தன்மை அறியப்படுகின்றது. கொக்கின் வேட்டையாடும் திறனை வள்ளுவர்,

**"கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றுஅதன்**
**குத்து ஒக்க சீர்த்த இடத்து" (குறள்:490)**

என்ற குறளில் குறிப்பிட்டுள்ளார். கொக்கு தன் இரையை பருவம் பார்த்து கொத்தித் தின்னும் இயல்பினையுடையது என்று குறிப்பிடுகின்றார். பி.எல்.சாமி கொக்கு வேட்டையாடும் முறையினை, "இப்பறவை ஆடாது அசையாது நின்று கொண்டு வேட்டையாடும்"[5] என்று குறிப்பிடுகின்றார். பி.எல்.சாமியும் வள்ளுவரும் கொக்கின் இயல்பினை ஒன்றாக படைத்துக் காட்டியுள்ளனர். வள்ளுவர் வெற்றி பெறுவதற்கான காலம் வரும் வரை கொக்குப் போல பொறுத்தும் காலம் வந்தவுடன் கொக்கு தன் இரையை குத்தித் தின்பது போல் தன் செயலை விரைந்தும் முடிக்க வேண்டும் என்று குறிப்பிடுகின்றார். நீர்வளம் மிகுந்த பகுதிகளில் பரவலாகக் காண முடிகின்றது. இரவில் பெரிய மரங்களில் அடைகின்றது. தவளை, நண்டு, மீன், பூச்சி, புழு முதலியன இதன் உணவாகும். நவம்பர் முதல் ஏப்ரல் வரை மற்ற கொக்குகளோடு சேர்ந்து நீர் நிலைகளில் மரங்களில் கூடு அமைத்து 3 முதல் 5 முட்டைகள் வரை இடுகின்றன. இன்றும் பெரிய நகரங்களிலும் இதன் கூடுகளை மரங்களில் காண முடிகின்றது.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**அன்னம்**

அன்னப்பறவை 'Anatidae' குடும்பத்தைச் சேர்ந்தவையாகும். இவை பொதுவாக குளிரான நாடுகளிலேயே அமைதியான நீர் ஏரிகளில் வாழ்கின்றன. நீர் மற்றும் நிலங்களில் வாழக்கூடிய தகவமைப்பைப் பெற்றுள்ளன. எகினம், உன்னம் என்பன. ஆன்னத்தின் வேறு தமிழ்ப் பெயர்களாகும். இப்பறவைகள் வெயில் காலம் தொடங்கியதும் தமிழ்நாட்டை விட்டு வலசை செல்கின்றன. செப்டம்பர் தொடக்கத்தில் தமிழ்நாட்டிற்கு வரத் துவங்குகின்றன. அன்னம் என்பது பறவைகளை பொதுவாக குறிப்பிடுவதற்கு அமைந்த பெயராகும்.

இப்பெயர் தற்காலத்தில் தாரா, காட்டுவாத்து, கிளுவை, சிறவி என்று அழைக்கப்படுகின்றது. சங்க காலத்தில் அன்னம் என்று அழைக்கப்பட்ட பறவை பிற்காலத்தில் 'தாரா' என்று அழைக்கப்பட்டது. பி.எல்.சாமி "சங்க காலத்தில் அன்னமென்று சொல்லப்பட்ட பறக்கும் வாத்து இனத்தை கி.பி5 – ஆம் நூற்றாண்டில் தாரா என்றழைத்தனரென்பது ஏற்கனவே குறிப்பிடப்பட்டது."[6] என்று தன்நூலில் குறிப்பிடுகின்றார். வாத்து இனத்தைச் சார்ந்த பறவையே அன்னம் என்று அழைக்கப்படுகின்றது. வள்ளுவர் அன்னத்தின் தூவிகளை பெண்ணின் பாதத்திற்கு ஒப்புமைப்படுத்தும் பாங்கினை,

**"அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்**
**அடிக்கு நெருஞ்சிப் பழம்" (குறள்:1120)**

என்ற குறளால் அறியலாம். அன்னத்தின் தூவி மிகவும் மென்மையானது. அன்னத்தின் தூவிகளை விட பெண்ணின் பாதங்கள் மென்மையானது என்று வள்ளுவம் குறிப்பிடுகின்றது. பண்டை கால பெண்களின் வாழ்வியலை வள்ளுவர் அன்னத்தூவிகளின் மூலம் புலப்படுத்துகின்றார்.

**மயில்**

பறவைகளிலே பெருமை உடைய பறவை மயில். இறையோடும் இறையிலிச் சமயங்களோடும் தொடர்புடையது என்று கூறின் மிகையாகாது. தென்னிந்தியா முழுவதும் கோயில் மற்றும் மடங்களில் இதனைப் பேணி வளர்க்கின்றனர். இயற்கையில் வறண்ட காடுகளிலும் காட்டாற்றின் கரைகளிலும் மலைச்சரிவுகளிலும் காணப்படுகின்றன. குறிஞ்சி நிலப்புள்ளாகிய மயிலினை பெண்களின் சாயலுக்கு ஒப்பிடுவது புலவர்களின் மரபாகும். மயிலின் இறகு, கண் போன்றன பெண்களுக்கு உவமையாக வர்ணிக்கப்படுகின்றது. முதன் முறையாக தலைவியைக் கண்ட தலைவன் மயிலோ என்று மயங்குகின்ற பாங்கினை,

**"அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனம்குழை**
**மாதர்கொல் மாலும் என்நெஞ்சு" (குறள்:1081)**

என்ற குறளால் அறியலாம். மயில் என்றால் அழகு. ஆடலில் வல்லது. காட்சிக்கு இனியது. இத்தகைய பறவையினை பெண்களின் சாயலுக்கு உவமைப்படுத்தியுள்ளார். திருவள்ளுவர் விதைகள், தானியங்கள், நிலக்கடலை, பயிர்களின் முளை இளந்தளிர்கள், பூவரும்பு, தக்காளி, பாம்பு மற்றும் சிறுபூச்சிகளையும் உணவாகக் கொள்கின்றன. மயிலின் தோகைக்கு வெளிநாட்டவரிடம் நல்ல வரவேற்பு இருந்ததால் மயிலிறகுகள் அண்மைக் காலம் வரை ஏற்றுமதி செய்யப்பட்டன. மயிலிறகின் வலிமையினை,

**"பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டஞ்**
**சால மிகுத்துப் பெயின்" (குறள்:475)**

என்ற குறளடி விளக்குகின்றது. மயிலிறகை மென்மையானது என்று கருதி அளவுக்கு அதிகமாக வண்டியில் ஏற்றினால் வண்டியின் அச்சும் முறிய நேரிடும். வண்டியில் மயிலிறகுகள் ஏற்றுமதி செய்யப்பட்டன என்று வள்ளுவர் விளக்குகின்றார். மயிலிறகுகள் எதிர்மறை எண்ணங்களை நீக்கி நேர்மறை எண்ணங்களைத் தருகின்றது. கோடை மழை

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

பெய்யத் தொடங்கிய பின் ஏப்ரல் முதல் செப்டம்பர் வரையிலான காலமே இனப்பெருக்கம் செய்வதற்கு உகுந்த காலமாகும்.

**புள்ளினப் பாதுகாப்பு**

பண்டைத் தமிழர்களின் வாழ்வில் உயிரினங்கள் இன்றியமையா இடத்தினைப் பெற்றுள்ளன. வள்ளுவர் உயிரினங்களின் வாழ்வியலை பறை சாற்றுவது மட்டுமின்றி அவற்றின் பாதுகாப்பினையும் வலியுறுத்துகின்றார். வள்ளுவன் வழி தற்காலத்தில் புள்ளினங்களை,

- **சரணாலயங்கள்**
- **சட்டங்களும் வருவாயும்**

என்ற முறைகளில் பாதுகாக்கப்படுகின்றன. பறவைகள் வாழ்வதற்கு ஏற்ப சரணாலயங்களை அமைப்பதோடு சட்டங்கள் அமைத்து அவ்வுயிரினங்களை வேட்டையாடமல் காக்கப்படுகின்றன.

**சரணாலயங்கள்**

தமிழ்மறையை இயற்றிய பொய்யாமொழிப்புலவர் உயிரினங்களை பாதுகாக்க வேண்டும் என்று வலியுறுத்துகின்றார். ஒரு நாடு நலம் பெற வேண்மானால் அந்நாட்டு வன உயிரினங்கள் பாதுகாக்க வேண்டும் என்று குறிப்பிடுகின்றார். வள்ளுவர் வன உயிரினங்களை பாதுகாக்கும் முறையினை,

**“உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்**
**சேராது இயல்வது நாடு” (குறள்:734)**
**“பிணிஇன்மை செல்வம் விளைவு இன்பம் ஏமம்**
**அணிஎன்ப நாட்டிற்கு இவ்ஐந்து” (குறள்:738)**

என்ற குறளால் அறியலாம். நாட்டில் வாழும் உயிரினங்களை பசியின்றி, பிணியின்றி பாதுகாப்பதோடு பகையால் அழியாத வண்ணமும் காத்தல் வேண்டும் என்று குறிப்பிடுகின்றார். சரணாலயங்கள் பற்றி விக்கிப்பீடியா பின்வருமாறு, “விலங்குகள், தாவரங்கள், நிலப்பரப்பு மற்றும் வரலாற்று முக்கியத்துவமுள்ள பொருட்கள் போன்றவற்றை பாதுகாக்க அமைக்கப்பட்டுள்ளவை.”[6] என்று குறிப்பிடுகின்றது.

வனத்துறை அலுவலர்களின் அனுமதியின்றி எந்தவொரு விலங்கையும் பிடிக்க, கொல்ல தடை செய்யப்பட்ள்ள காட்டுப்பகுதியே சரணாலயங்கள் ஆகும். தற்காலத்தில் வனவிலங்குகள் மற்றும் பறவைகளை வேட்டையாடிக் கொன்று விட்டு ‘வீரம்’ என்று மகிழ்கின்றனர். இப்பறவைகளை இறைச்சிக்காகவும் மருந்துக்காகவும் வேட்டையாடுகின்றனர். இப்பறவைகளால் பறவைகள் வேட்டையாடப்படுகின்றன. இந்நிலை நீடிக்கக் கூடாது என்ற நோக்கில் இந்திய அரசம் மாநில அரசம் இணைந்து 247 வனவிலங்கு சரணாலயங்கள் மற்றும் 55 தேசீலப் பூங்காக்களை உருவாக்கி பராமரித்து வருகின்றன. பகையினால் அழியாத வண்ணம் உயிரினங்களை பாதுகாத்தல் வேண்டும் என்ற வள்ளுவரின் வாக்கிற்கு ஏற்ப தமிழக அரசு பனிரெண்டு நீராதரங்களை சரணாலயங்களாக அறிவித்துள்ளன. அவையாவன,

1. **பழவேற்காடு பறவைகள் சரணாலயம்**
2. **வெள்ளோடு பறவைகள் சரணாலயம்**
3. **கரிக்கிலி பறவைகள் சரணாலயம்**
4. **கரைவெட்டி பறவைகள் சரணாலயம்**
5. **உதயமார்த்ததாண்டபுரம் பறவைகள் சரணாலயம்**
6. **வடுவூர் பறவைகள் சரணாலயம்**
7. **சித்திரன்குடி பறவைகள் சரணாலயம்**
8. **கூந்தன்குளம் பறவைகள் சரணாலயம்**
9. **மேல்வல்வனூர், கீழ்செல்வனூர் பறவைகள் சரணாலயம்**
10. **கஞ்சிரன் குளம் பறவைகள் சரணாலயம்**

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

11. **வேட்டங்குடி பறவைகள் சரணாலயம்**
12. **வேடந்தாங்கல் பறவைகள் சரணாலயம்**

என்பனவாகும். அரசு சரணாலயமாக உருவாக்கப்பட்டுள்ள நீராதரங்களில் பறவைகள் பெரும்பான்மை வந்து செல்கின்றன. இச்சரணாலயங்கள் வலசை வரும் லட்சக்கணக்கான பறவைகளுக்கு வாழிடமாக அமைகின்றன.

**சட்டங்களும் வருவாயும்**

வன உயிரினங்களை பாதுகாப்பதற்கு சட்டங்களும் இயற்றப்பட்டுள்ளன. வனஉயிர் பாதுககாப்புச் சட்டம் 1972 – ஆம் ஆண்டு இந்தியப் பாராளுமன்றத்தால் இச்சட்டம் வனஉயிர்களை விலங்குகள், பறவைகள், பூச்சிகள், தாவரங்கள் முதலியவற்றை பாதுகாக்கின்றது. உயிரினங்களை வேட்டையாடுவதும், அழிக்கும் நடவடிக்கையில் ஈடுபடுவதும் தண்டனைக்குரிய குற்றமாகும் என்பதை இச்சட்டம் வலியுறுத்துகின்றது. ஜம்மு காஷ்மீரைத் தவிர இந்தியாவின் அனைத்து மாநிலங்களும் இச்சட்டத்தை பின்பற்றுகின்றது. வேடன் பறவைக பற்றி வள்ளுவர்,

> **“தவம்மறைந்து அல்லவை செய்தல் புதல்மறைந்து**
> **வேட்டுவன் புள்சிமிழ்த்து அற்று.” (குறள்:274)**

என்ற குறளில் குறிப்பிடுகின்றார். அனைத்தையும் துறந்து தவக்கோலம் பூண்டவர் தவறு செய்வது மறைந்து நின்று பறவைகளை வேட்டையாடுவதற்குச் சமம் என்று உரைக்கின்றார். தவக்கோலம் பூண்டவரின் ஒழுக்கத்தை வலியுறுத்துவதோடு உயிரினங்களை வேட்டையாடுவதும் தவறு என்று கண்டிக்கின்றார். வேட்டையாடுதல் தொடர்ந்தால் வன உயிரினங்கள் பாதிக்கப்பட்டு அழியத் தொடங்கிவிடும்.

இந்நிலையை மாற்றி அமைக்கவே தற்காலத்தில் வனஉயிர் பாதுகாப்புச் சட்டம் இயற்றப்பட்டுள்ளது. வன உயிர் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் ஆறு பட்டியல்கள் இடம்பெற்றுள்ள பாங்கினை,

1. **“பட்டியல் 1 மற்றும் 2 ன் படி இப்பட்டியலில் இடம்பெறும் உயிரினங்களை ஊறு விளைவிப்போருக்கு கடுமையான தண்டனை அளிக்கிறது.**
2. **பட்டியல் 3 மற்றும் 4 ன் படி இப்பட்டியலில் இடம்பெறும் உயிரினங்களை ஊறு விளைவிப்போருக்கு குறைவான தண்டனை அளிக்கிறது.**
3. **பட்டியல் 5 இல் உள்ள விலங்குகள் மட்டும் வேட்டையாட அனுமதிக்கப்படுகின்றன.**
4. **பட்டியல் 6 இல் உள்ள தாவரங்கள் வளர்க்கத் தடை செய்யப்பட்டுள்ளன.”[7]**

விக்கிப்பீடியா இணையதளம் பின்வருமாறு குறிப்பிடுகின்றது. மேலும், பிரிவு 9 என்ற சட்டத்திற்கு கீழ் வேட்டையாடுதல் தண்டனைக்குரிய குற்றமாகவும் கருதப்படுகின்றது. வன உயிரினங்களை பாதுகாப்பதால் அரசின் வருவாயும் அதிகரிக்கின்றன. என்பதனை,

> **“பொறை ஒருங்கு மேல்வரும்கால் தாங்கி இறைவற்கு**
> **இறை ஒருங்கு நேர்வது காடு” (குறள்:733)**

என்ற குறளடி விளக்குகின்றது. தற்காலத்தில் சரணாலயங்கள் அமைப்பதின் மூலம் நம்நாட்டின் அன்னியச் செலவாணி உயர்கின்றது.

**புள்ளினங்களின் அழிவு**

தன் வாழ்க்கை பிழைப்புக்காக ஓடும் மக்கள் தெரிந்தும் தெரியாமலும் இயற்கையை பாழ்படுத்துகின்றன. இத்தகைய பாதிப்பு இயற்கையைச் சார்ந்து வாழ்கின்ற உயிரினங்களையும் சேர்த்து பாதிக்கின்றன. தற்காலத்தில் உயிரினங்களின் பாதுகாப்பு கருதி வனவிலங்கு பாதுகாப்பு இடம், சரணாலயங்கள் என்று வனத்துறையினர் பல அமைப்புகளை நம் நாட்டிர் நிறுவி உள்ளனர்.

நாகரீக வளர்ச்சியில் நவீனத்துவம் காணவரும் மக்கள் இயற்கையையும் ரசிப்பதில்லை. புள்ளினங்களின் வருகையையும் எண்ணுவதில்லை. சுறுசுறுப்பிற்கு

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

அடையாளமாக பறவை இனங்களே சுட்டப்பட்டன. விடியற் காலைப் பொழுதில் உணவு தேடிச் செல்வது இருளும் நேரத்தில் கூடு திரும்புதல் இவை அனைத்தும் சிறந்த வாழ்வியல் முறைகளை நமக்கு கற்றுத் தருகின்றன. புள்ளினங்கள் இடும் எச்சங்களில் இருந்து மருத்துவச் செடிகளும், மரங்களும் வளரலாயின. மலைகளிலும் காடுகளிலும் பறவைகளால் ஆல், அரசு, புளி, வேம்பு என்று 80 சதவீத மரங்கள் பறவைகளால் தான் பரவலாக்கப்பட்டுள்ளன. இவற்றால் இயற்கையும் பாதுகாப்பாக இருந்தது. மழை வளமும் செழித்தது. மண்வளமும் அதிகரித்தது. நமது சோம்பேறித் தேவைக்கான கைபேசி, குளிர்ளாதனப் பெட்டி என விலை கொடுத்து விலை மதிப்பில்லா இயற்கையை நாமே அழித்துக் கொண்டிருக்கிறோம்.

இயற்கையைப் பாதுகாக்க சட்டங்களுடம் அமைப்புகளும் உருவானாலும் நடைமுறைக்கு அவை சாத்தியமல்ல. என நாமே புறம் தள்ளுகின்றோம். இயற்கைப் பாதுகாப்பு என்பது ஏட்டளவில் கவித்துவம் பெறுகிறதே தவிர அதன் உண்மைகளை நாம் அறிவதில்லை.

1. **பெருகி வரும் கட்டிடங்களால் ஓடு மற்றும் குடிசைப் பகுதிகளில் பறவைகளால் கூடு கட்ட முடியாமல் போனது.**
2. **செல்போன் டவர்களின் வருகை புள்ளினங்களின் உடல் இயக்கத்தை சிதைத்து, இனத்தை பெருக்க முடியாது முட்டைகளை சேதமடையச் செய்கின்றன.**
3. **பூச்சிக்கொல்லி மருந்துகளால் விளைவிக்கப்படும் தானியங்களை உண்டு வாழும் பறவைகளின் முட்டை கூடு வலுவற்றதாகியது. அடைகாக்க முடியாத வண்ணம் உடைந்து போயின.**
4. **தட்பவெப்பநிலை மாற்றத்தாலும், வேட்டையாடுவதின் காரணமாகவும் புள்ளினங்கள் தங்கள் வாழ்வியலை இழக்கின்றன.**
5. **அதிகரித்து வரும் வேதிப்பொருட்களின் பயன்பாடு மற்றும் மரங்களை அழித்தல் புள்ளினங்களின் வாழிடங்களை அழிப்பதற்குச் சமமாகின்றன.**

புள்ளினங்களை பாதுகாப்பதற்காக பல சரணாலயங்களை அமைத்தாலும் பார்வையாளர்களின் வசதிக்காக புள்ளினங்களுக்கு இடையூறு செய்யக்கூடிய பல செயல்பாடுகள் நிகழ்கின்றன. நாகரீக மனிதனின் நவீனத்துவ வளர்ச்சி புள்ளினங்களைவ வீழ்ச்சி அடையச் செய்கின்றது.

**முடிவுரை**

- தமிழ்மறை மனிதர்களை நெறிப்படுத்தும் உலகப்பொதுமறையாகும். அறம், பொருள், இன்பம் என்று பாகுபடுத்தி மனிதனின் வாழ்வியலை சிறப்பித்த வள்ளுவர் வன உயிரினங்களின் பாதுகாப்பினையும் அதனால் உண்டாகும் நன்மைகளையும் அறிந்துள்ளார்.
- புள்ளினங்களின் செயல்பாட்டினைக் கொண்டு மக்களுக்கு காலமறியும் திறனை கற்பிக்கின்றார்.
- காகத்தின் பண்புநலன்களைக் கூறி மக்களிடம் விருந்தாளிகளை அழைக்கும் திறனை மேம்படுத்துகின்றார்.
- கூகை காக்கையின் செயல்பாட்டினைக் கூறி கூகையைப் போன்று பரந்த மற்றும் கூரிய பார்வையினையும் காகத்தினைப் போன்று பல்லுயிர் ஓம்பும் திறனையும் உடையவனாக திகழ வேண்டும் என்று குறிப்பிடுகின்றார்.
- கொக்கினைப் போல பொறுமையுடையவனாகவும் இரையை குத்துவதுப் போல் விரைந்து தன் செயலை முடிக்கும் ஆற்றலுடையவனாகவும் மன்னன் திகழ வேண்டும் என்கின்றார்.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

- அன்னம் மற்றும் மயிலினை ஒப்புமையாகக் குறிப்பிட்டு பண்டை கால பெண்களின் வாழ்வியல் முறையினை பதிவு செய்துள்ளார்.
- அதிநவீன நாகரீக வளர்ச்சியால் சுற்றுச்சூழலை பாழ்படுத்தி வரும் மனிதர்களுக்கு வன உயிரினங்களை பாதுகாக்கும் முறையினையும், அவசியத்தையும் பறை சாற்றுகின்றார் என்பதனை இக்கட்டுரையின் வாயிலாக அறியலாம்.

**சான்றெண் விளக்கம்**

1. பரிமேலழகர் உரை, *திருக்குறள்.*
2. சேலை சகதேவ முதலியார் (தொ.ஆ), கழகத்தமிழ்க்கையகராதி, ப.273.
3. அலி.ச.முகமது, இயற்கை செய்திகள் சிந்தனைகள், ப.2.
4. க.ரத்னம், தமிழ் நாட்டுப் பறவைகள், ப.75.
5. ஸ்லீம்.அ, பறவை உலகம், ப.24.
6. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப.18.
7. https:\\ ta.m.wikipedia.org\wik (10.02.2019)
8. https:\\ ta.m.wikipedia.org\wik (10.02.2019)

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

# திருக்குறளில் நீர் மேலாண்மை

## Water Management in *Thirukkural*

**வே.முத்துமாரி,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ் உயராய்வு மையம், எஸ்.எ.்.ப்.ஆர். மகளிர் கல்லூரி, சிவகாசி.

## Abstract

*The article putforths the ideas related to the water management techniques which were on vogue at the times of valluvar and before him. Water is the elixir of life; without it no being in the universe can't live. Our earth is a planet bestowed with rain and fresh water; wherein it helps to cultivate grains for the human good. Tamil culture is known for its elite and classicness. They gave more importance to save water and built massive dams to preserve water. Rain is considered as blessing and the water management at the time of overflow in rivers are exemplanary in Tamil culture. Well, pond, lake, river canals, acidity of water and matters related to water management and crisis are finely portrayed in "Thirukkural". Hence, the paper brings the details of water management from "Thirukkural".*

**Keywords:** Water Management, *Thirukkural*, Thiruvalluvar

**முன்னுரை**

மனிதனின் அடிப்படை தேவைகளில் ஒன்றாக விளங்கக்கூடியது நீர். மனித வாழ்விற்கு மிகமுக்கியத் தேவையான நீரினைத் திறம்பட மேலாண்மை செய்வதற்கும், தேவைப்படும் காலங்களில் அந்நீரைத் தேக்கி வைத்துப் பயன்படுத்துவதற்குமான இடத்தினை, மக்கள் அமைத்து வாழ்ந்துள்ளனர். நாம் வாழும் உலகம் கடலால் சூழப்பட்டது. இதன்பொருட்டே பூமிப்பரப்பில் பெருமளவினதாக அமைந்திருக்கும் கடலைப் பற்றி சங்கப் புலவர்கள் மிகச்சிறப்பாக அறிந்து வைத்திருந்ததோடு, அதன் தன்மைகளையும், சிறப்புக்களையும், பெருமைகளையும் உணர்ந்திருந்தனர். மானுடப் பயன்பாட்டிற்குப் பயன்தரும் நீர், உயிரினங்களின் உடல் வளர்ச்சிக்கும், உணவுத்தேவைக்கும் அத்தியாவசியமான ஒன்றாக அமைகின்றது. அது உணவுத் தேவையை நிறைவு செய்வதற்கு மூலகாரணியாக அமையும் திறத்தினைக் கருதியே வள்ளுவப் பெருந்தகை நீரினை முதன்மைப் பொருளாக எண்ணி, நீரில்லாமல் இந்த உலகம் மற்றும் மனித வாழ்க்கையே இருக்காது என்று பதிவுசெய்துள்ளார். உலகப்பொதுமறையாக விளங்கக் கூடிய வள்ளுவத்தில் நீரினை முழுமையாகவும், முதன்மையாகவும் உரைக்கப்பெற்றதை எடுத்தியம்புவதாக இக்கட்டுரை அமைக்கப்பட்டுள்ளது.

**நீர் மேலாண்மை**

நீர் மேலாண்மை என்று சொல்லுகிறபோது நீர்நிலைகளை அமைத்தல், மழைநீரைச் சேகரித்தல், நிலத்தடி நீரை அதிகப்படுத்துதல், தடுப்பு அணைகள் அமைத்தல், ஒவ்வொரு சொட்டு நீரையும் முறையாகப் பயன்படுத்துதல், நீர்த்தேக்கங்களைச் சரியான அளவில் அமைத்தல், வெள்ளச் சேதங்களை முறியடித்தல் போன்ற பல கூறுகளை உள்ளடக்கியதாகும். மக்கள் தங்களது ஒவ்வொரு செயலிலும் நீரினை பாதுகாத்து

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

பயன்படுத்திய முறையே மேலாண்மைக்கு முக்கியத்துவம் வாய்ந்தது ஆகும். அத்தகைய நீர்ப் பாதுகாப்பு குறித்து தமிழ்மறையில் பொதிந்துள்ள கருத்துக்கள் கையாளப்பட்டுள்ளது.

**நீர் - நிகண்டு விளக்கம்**

உலகில் முதலில் தோன்றியது நீர் ஆகும். நீரினை முதன்மையாகக் கொண்டு ஓரறிவு உயிர் முதல் ஆறறிவு உயிர்கள் வரை மலர்ந்தன. அத்தகைய நீரினை பிங்கல நிகண்டு பல்வேறு பெயர்களில் குறிப்பிட்டுள்ளது. அவை,

**“ஆலமுஞ் சலமு மம்மு மறலும்**
**பாணியு மப்பும் பயமு முதகமும்**
**வயமு மயமும் வாரியும் விகடியும்**
**புனலுஞ் சலிலமும் புவனமும் மளகமுஞ்**
**சீவனமும் பானீயமுஞ் சிந்துமாங் குசமும்**
**வருணமு மம்பு மழையுங் கவந் தமுங்**
**கீலாலமு மேகமும் மகிலமுமி தடியும்**
**நீரமுந் தோயமும் வாரும் பதமுங்**
**∴ காரு மாரியுங் கமலமும் பயசுங்**
**கயமுஞ் சம்பரமுங் கம்மும் புட்கரமுஞ்**
**சீதமும் வசியுங் கோவுங் காண்டமுங்**
**கனவிர தமுஞ்சீ வனீயமு மலரு**
**நாரமு மமுதமு நீரென லாகும்.” (பிங்கல நிகண்டு – 57)**

**நீரின் தன்மைகள்**

நீருக்கு மூன்று தன்மைகள் உண்டு. நீரின் தன்மை வேதியியல் முறைப்படி PHஎன்ற அளவீட்டால் அளக்கப்படுகிறது. அதனை நீர் எண் என்று வைத்து கொள்வோம். நன்னீரின், அதாவது குடிப்பதற்கு ஏற்ற தண்ணீரின் நீர் எண் 7. இந்த நீர் எண் 7க்குக் குறைந்தால் அது அமில நீர் (Acidic) எனப்படும்.

நீர் எண் 7ஐ விட அதிகமானால் அது கார நீர் (Alkaline). இந்த நீரின் தன்மைகள்தான் உலகை இந்தப் புவியை அமைத்திருக்கின்றன, உருவாக்கியிருக்கின்றன. நீர் எண்களின் அளவு 1 முதல் 14 வரை என்று வரையறுக்கப்பட்டுள்ளது. நீர் எண் 1 முதல் 6 வரை அமில நீர். நீர் எண் 7 நன்னீர். நீர் எண் 8 முதல் 14 வரை கார நீர். இந்த மூன்று நிலைகளுக்கும் இடையில் பல இடைநிலைகள் உள்ளன. நன்னீரில் உள்ள ஹைட்ரஜன் அளவு குறைந்தால் நன்னீர் அமில நீராகவும், கூடினால் கார நீராகவும் மாறும்.

மனித உடலானது 55% முதல்78% வரையில் நீரால் ஆனது. இரத்தத்தில் 90% நீர்தான் உள்ளது. உடல் மட்டுமின்றி உலகிலும் நீரின் பெருக்கமே மிகுதியாகக் காணப்படுவதனை அறியமுடிகிறது.

**உலகப்பொதுமறையில் நீர்**

வள்ளுவர் உலகம் நீர் இல்லாமல் அமையாது என்னும் கருத்தினை வலியுறுத்துகின்றார். திருக்குறளில் நீரினை, வான்நீர், நிலநீர் என்று இருபெரும் பகுப்புகளாக பகுத்துள்ளார். வான்நீர் என்னும் பொழுது மழைநீரையும், நிலநீர் என்று சொல்லும் பொழுது கடல்நீர், ஊருணிநீர், ஊற்றுநீர் ஆகிய நிலைகளில் குறிப்பிட்டுக்காட்டப்பட்டுள்ளது.

**மழைநீரும் அறிவியலும்**

சூரிய வெப்பத்தால் நீரானது நீராவியாக மாறி மேலே சென்று மேகமாக மாறுகிறது. இந்தச் செயல் மீண்டும் மீண்டும் நடைபெறும்போது மேகத்தின் அடர்த்தி அதிகரிக்கிறது. இந்நிலையில் மேகங்கள் காற்றின் போக்கிற்கேற்ப செல்கிறது. இவ்வாறு செல்கிற மேகங்களை மலைகள் தடுக்கின்றன. மலைகளில் காணப்படும் தாவச் சூழல் காரணமாக அப்பகுதி குளிர்ச்சியாகக் காணப்படுகிறது இதனால் மேகங்களாகக் காணப்படும் நீராவியானது

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

குளிர்ச்சியடைந்து மழையாக பெய்கின்றது. அதேபோல ஒரு இடத்தில் வெப்பம் அதிகரிக்கும் போது அங்குள்ள வெப்பமானக் காற்று மேல்நோக்கி செல்கிறது. அவ்வெற்றிடத்தை நிரப்புவதற்கு குளிர்ந்த காற்று வந்து சேர்கின்றது. இவ்வாறு குளிர்க்காற்று வருவதும் மேகங்கள் மழைபொழிவதற்குக் காரணமாகிறது. காடுகள் மிகவும் அதிகமாக இருப்பதாலும் சுற்றுசூழல் குளிர்விக்கப்பட்டு மழைபெய்கின்றது. இவையாவும் மழை பொழிவிற்கான அறிவியல் காரணங்களாகும்.

**மழை**

வள்ளுவர் மழையினை அமிழ்து என்று வர்ணித்துள்ளார். உலக உயிர்கள் அனைத்தும் வாழ்வதற்கு மழை அடிப்படை என்பதனால் மழையை அமிழ்து என்று போற்றியிருக்கின்றார். அமிழ்து உண்டவர்கள் இறவாமல் வாழக்கூடியவர்கள் ஆவர். அதுபோல மழைநீரும் உலக உயிர்களை வாழச்செய்யக்கூடியதால் மழையை அமிழ்து என்று அறிவுறுத்துகின்றார்.

**“தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுவாள்**
**பெய்யெனப் பெய்யும் மழை.” (குறள் - 55)**
**“முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி**
**ஒல்லாது வானம் பெயல்.” (குறள் - 559)**

என்ற குறள்களின் வாயிலாக மழை கற்புக்கு நிகராக வைத்து போற்றப்படுகிறது. பருவமழை பெய்து மக்களைத் துன்பத்திலிருந்து பாதுகாப்பது சரியாகச் செயல்படும் போது, மக்களைக் காக்கும் அரசன் நீதிமுறை தவறி கொடுங்கோல் ஆட்சி நிகழ்த்தும் பொழுது மழையும் மக்களை துன்பநிலைக்கு ஆழ்த்தும். மழையானது கற்பிற்க்கும், அரசனுக்கும் உவமையாகக் கூறப்பட்ட பண்பினை அறியமுடிகிறது.

**“துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்**
**துப்பாய தூஉம் மழை.” (குறள் - 12)**

என்ற குறளின் வாயிலாக உலகில் உள்ள அனைத்து உயிர்களுக்கும் உணவினை விளைவிக்கப் பயன்படுவது மட்டுமின்றி தானும் உணவாக மாறும் தன்மை நீரிற்கு மட்டுமே உண்டானதாகும். மழையினால் விவசாயம் பெருகும். உணவு உற்பத்தியும் அதிகரிக்கும். நீர் அனைத்து விதமான செயல்பாட்டிற்கும் பயன்படும் மேன்மையினை அறிந்து கொள்ள முடிகிறது.

**கடல்**

வானிலிருந்து மண்ணிற்கு வரும் மழைநீர், மண்ணில் பல்வேறு தன்மைகளுக்கு, சூழல்களுக்கு உட்பட்டு அதன் நிலையை அடைகிறது. அவற்றுள் சூரியன் வெப்பத்தால் ஆவியாவதும், காற்றினால் நீராவியாக உறைந்திருப்பதும், பனிநீராக நிலவியிருப்பதும் நிலமும் நீரும் ஒன்றாகிப் போவதும் நிலத்திற்கும் நீருக்கும் உள்ள தன்மைகளால் ஏற்படுவனவாகும். இதனை,

**“நிலத்து இயல்பான் நீர்திரிந்து அற்றாகும் மாந்தர்க்கு**
**இனத்தியல்பது ஆகும் அறிவு” (குறள் - 452)**

என்னும் குறளின் வாயிலாக அறியமுடிகிறது. இவ்வுலகில் பெரும்பகுதி கடலால் சூழப்பட்டுள்ளது. மூன்றில் ஒரு பங்காக அமைந்திருக்கும் நிலப்பரப்பே மக்கள் வாழிடமாக அமைந்துள்ளது. இவ்வுலகம் கடலால் சூழப்பட்டிருந்தமையை நம் முன்னோர்கள் மிகச்சிறப்பாக அறிந்துவைத்துள்ளனர். இதனை,

**“பிறவாழி நீந்தல் அரிது” (குறள் - 8)**
**“பிறவிப் பெருங்கடல்” (குறள் - 10)**
**“விரிநீர் வியனுலகத்து” (குறள் - 13)**

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**"நெடுங்கடலும் தன்நீர்ம்மை" (குறள் - 17)**

**"கடல்சூழ் மண்டிலம்" (குறுந்தொகை - 137:7)**

**"இருள்நிற முந்நீர் வளைஇய உலகம்" (குறுந்தொகை – 293)**

என்ற அடிகளின் வாயிலாக அறியமுடிகிறது.

**"மாறாநீர் வையம்..." (குறள் - 701)**

என்ற தொடர்களால் அறிந்துகொள்ளமுடிகிறது. உலகிலேயே அகன்று விரிந்த நிலப்பரப்பினைப் கொண்டது கடல் என்ற கருத்தினைக் காட்டுவதாகவும், எந்நிலையிலும் வற்றாத நீர்மைத் தன்மை கொண்டது கடல் என்பதனை உணர்த்துவதாகவும் அமைந்துள்ளதை அறியமுடிகிறது.

**ஊருணி**

மக்கள் குடியிருக்கும் ஊரில் குடி தண்ணீர் கொடுக்கும் குளத்துக்குப் பெயர் ஊருணி. மக்கள் குடிப்பதற்காக அமைக்கப்பட்ட நீர்நிலை ஆகும். மழை பெய்து ஊருணி நிறைந்துவிட்டால் மக்கள் அனைவரும் நீர்ப்பற்றாக்குறை இல்லை என்னும் மனமகிழ்ச்சியில் திளைப்பர். மழையில் வந்த நீரைக் குளம் வெகு காலத்துக்கு வைத்து மக்கள் பயன்பாட்டிற்கு உதவும். நீர் வெயிலில் உலர்ந்து போகாமல் குளத்தில் தேங்கி நின்று மக்களின் தாகத்தினை போக்கும் நிலையில் காணப்பட்டது. ஆண்டு முழுவதும் கூட பயன்படுத்த ஏதுவாக அமையும். இதனை,

**"ஊருணி நீர்நிறைந் தற்றே உலகுஅவாம்**
**பேர்அறி வாளன் திரு." (குறள் - 215)**

என்ற குறளின் வாயிலாக அறியமுடிகிறது.

**"மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழற்**
**காடும் உடையது அரண்." (குறள் - 742)**

என்ற குறளின் வாயிலாக மணிபோல் தெளிந்த நீர்நிலைகளை உடைய அகழியும், வெளிநிலமும் மலையும் அணிகலன் போன்ற அழகிய நிழல் தரும் காடுகளையும் உடையதே சிறந்த அரண் ஆகும். இப்படிப்பட்ட இயற்கை அரண்களை உடைய நாடே பாதுகாப்பானது ஆகும். காடும், நீர்நிலைகளும் வாழ்ந்தால் நாடு செழிக்கும் என்பது நிதர்சனம்.

**ஊற்று**

பூமிக்கு அடியில் காணப்படக்கூடிய நீர் வெளிப்பெயர்வதாகும். நிலத்தின் அடியிலிருந்து நீர் ஊறுவது ஊற்று நீராகும். ஊற்று நீர் வற்றாது மக்களுக்கு பயன்தரக்கூடியதாகும். இதனை,

**"மறைப்பேன்மன் யான்இ.்.தோ நோயை இறைப்பவர்க்கு**
**ஊற்றுநீர் போல மிகும்." (குறள் - 1161)**

என்ற குறளின் வாயிலாக ஊற்றுநீர் பெருக்கத்தினை அறியமுடிகிறது.

**நீரின் முதன்மை**

வள்ளுவர் இந்த உலகினில் முதன்மையானதாக நீரினை வரையறுக்கிறார். நீர் மட்டும் இல்லையெனில் இந்த உலகினில் எந்த உயிர்களும் வாழ முடியாது என்று நீரின் முதன்மையினைக் கூறுகிறார். நீரின்றி அமையாது உலகு என்ற சொற்றொடர் உயிர்கள் நீரில் உற்பத்தியாகி வளர்ந்து பெருகின என்ற உண்மையினை உள்ளடக்கியது. நீரில் உயிர்கள் முதலில் தோன்றின, நீர் இல்லையெனில் உயிர்கள் தோன்றியிருக்க இயலாது என்பதனை உணர்த்துகின்றது.

**"நீரின்றி யமையாது லகெனின் யார்யார்க்கும்**
**வானின் றமையாது ஒழுக்கு" (குறள் - 20)**

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

என்ற குறளின் வாயிலாக நீர் இல்லாமல் ஓரறிவு முதல் ஆறறிவு வரை உள்ள உயிர்கள் வாழ முடியாது என்னும் கருத்து புலப்படுகிறது.

**நீரும் அமிழ்தும்**

உலக உயிர்கள் யாதும் வாழ்வதற்கு மழை இன்றியமையாதது ஆகையால் மழையை அமிழ்தம் என்று போற்றுகின்றனர்.

**"வான்நின்று உலகம் வழங்கி வருதலால்**
**தான்அமிழ்தம் என்றுணரற் பாற்று"** (குறள் - 11)

என்ற குறளின் வாயிலாக மழை பருவம் தவறாமல் பெய்வதால் மட்டுமே உலக உயிர்கள் எவ்வித இடர்பாடுகளின்றி வாழ முடியும். பருவம் தவறாமல் பெய்யும் மழையினை அமிழ்தமாக கூறுகின்றனர். அமிழ்து உண்டவர்களுக்கு இறத்தல் என்பது இல்லை. ஆனால் உலக உயிர்கள் இறப்பவை. உலக உயிர்க்ள நீர் இல்லையெனில் அழியும். அவ்வாறு மனிதனின் வாழ்வினை மேலும் சிறப்படையச் செய்யும் மழை நீரை அமிழ்தமாகக் கூறுகின்றனர்.

**நீர்த்துளியின் சிறப்பு**

விண்ணுலகில் உள்ள மழை நீர் மண்ணுலகினைத் தொடவில்லையெனில் ஒரு சிறு புல் கூட வளராது என்பதனை,

**"விசும்பின் துளிவீழின் அல்லாமற் றாங்கே**
**பசும்புல் தலைகாண்பு அரிது.** (குறள் - 16)

**"நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் தடிந்தெழிலி**
**தான்நல்கா தாகி விடின்."** (குறள் - 17)

என்ற குறளின் வாயிலாக மேகம் கடலிலிருந்து நீரைக் கொண்டு அதனிடத்தில் பெய்யாவில்லையெனில், பெரிய கடலும் தன் வளம் குன்றிப் போகும். மழை நீர்த் துளி மண்ணைத் தொடவில்லையெனில் மண்ணில் உள்ள அனைத்து உயிர்களும் பாதிப்படையும் சூழலினை அறியமுடிகிறது.

**நீரின்மையின் துன்பம்**

உலகில் நீர்வளம் பெருகிட முதன்மையானது மழை. மழை பொழிவது குறைந்தால் நாட்டில் வேளாண் தொழில் நடைபெறாது. அத்தகைய நிலையில் மக்கள் உணவின்றி பசிக்கொடுமையை அனுபவித்து வாழவேண்டிய நிலை ஏற்படும் என்பதை,

**"விண்இன்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்து**
**உள்நின்று உடற்றும் பசி."** (குறள் - 14)

**"கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே**
**எடுப்பதூஉம் எல்லாம் மழை"** (குறள் - 15)

என்ற குறள்களின் வாயிலாக அறியமுடிகிறது. நீரானது மழையாக பெய்து மக்களை வாழ வைத்தும், மழை பெய்யாத காலங்களில் மக்களின் வாழ்வினை நிலைகுலையச் செய்வதுமான நிகழ்வினை ஏற்படுத்துகிறது.

**"சிறப்பொடு பூசனை செல்லாது வானம்**
**வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு."** (குறள் - 18)

மக்கள் மழையின்றி பசித்துன்பத்துடன் காணப்படுகிற வேளையில் தேவர்களுக்கான விழா எடுத்து மகிழ்ச்சியாக வாழும் நிலையும் இராது.

**"தானம் தவமிரண்டும் தங்கா வியனுலகம்**
**வானம் வழங்காது எனின்."** (குறள் - 19)

மழை பெய்யாது மக்கள் துன்பத்தில் வாடும் நேரத்தில், தானம், தவம் ஆகிய இரண்டு அறச்செயல்கள் செய்து வாழும் பண்பு இன்றி மக்கள் வாழும் நிலை ஏற்படும். மக்களின்

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்


International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

வாழ்விற்கு மூலமுதற்பொருளாக விளங்கும் நீரின்றி மக்கள் துன்பப்படும் சூழலினை வள்ளுவர் எடுத்துரைக்கிறார்.

**முடிவுரை**

மக்கள் வாழ்வில் நீர் இன்றியமையாத ஒரு மூலப்பொருளாகும். நீரினை மக்கள் பெறக்கூடிய வழிமுறைகள் குறிப்பிடப்பட்டுள்ளது. முதன்மையாகத் திகழக்கூடிய நீரின் பயன்பாட்டு நிலை குறித்தும் தொகுத்துரைக்கப்பட்டுள்ளது. நீரினை மக்கள் வேளாண்மைக்கு பயன்படுத்தி வாழ்ந்த நிலையினை விளக்கப்பட்டுள்ளது. நீரின்மையினால் ஏற்ப்படும் துன்ப நிலையும் பதிவுசெய்யப்பட்டுள்ளது. அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சி பெற்ற காலகட்டத்தில் நீர்நிலைகளும் தங்களது புனிதத்தை இழந்து மாசுபட்டு சீரழியும் நிலைக்குள்ளாகி இருக்கிறது.

**பார்வை நூல்கள்**

1. பரிமேலழகர் உரை, திருக்குறள்.
2. பிங்கலமுனிவர், பிங்கலந்தை என்னும் பிங்கல நிகண்டு, கழக வெளியீடு, 1968, ப.14

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com


# திருக்குறள் காட்டும் காதல் நிலை

## The State of Love Revealed in *Thirukkural*

**வே.முரளிகிருஷ்ணன்,** முனைவர் பட்ட ஆய்வாளர்
அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரி, சிவகாசி.

**Abstract**

*The article brings out the impact of love and the state of love as evinced in "Thirukkural". It jots down the qualities of true love, exaggeration of love, sight of love, eye and love, lover's mind state, power of love, coitus, Time and love are briefed with facts taken from "Thirukkural". Love is the reason of all beings existence in the world. From the birds, animals and to the human beings, love is the immanent force that encompasses life a meaningful one. The influence and traits of love are widely seen in the universal work "Thirukkural". Therefore, the paper brings the facts on love and its qualities from the evidences collected from "Thirukkural".*

**Keywords:** State of Love, *Thirukkural*

**முன்னுரை**

திருக்குறளில் எல்லாப் பொருள்களும் அடங்கியுள்ளன. அவற்றில் இல்லாத பொருள்கள் இவ்வுலகத்தில் இல்லை.

**"எல்லாப் பொருளும் இதன்பால் உள, இதன்பால்**
**இல்லாத எப்பொருளும் இல்லையால் சொல்லால்**
**பரந்தபா வால் என் பயன்? வள்ளுவனார்**
**சுரந்தபா வையத் தணை"**

என்று மதுரை தமிழ்நாகனார் சிறப்பித்துக் கூறுகிறார். திருக்குறள் ஓர் உலக பொதுவியல் நூல். தமிழர் திருமுறை மனித வாழ்வின் மேன்மைகளை, வாழ்வியல் நெறிகளை மனித நாகரிகம் பிற நாடுகளில் தோன்றும் முன்னரே வகுத்துக்காட்டிய நூல். உலக மக்களின் மனதில் அன்றும், இன்றும், என்றும் நீங்காமல் நிலைத்திருக்கக் கூடியதும், தெய்வ நூல் என்று அழைக்கக்கூடியதுமாகிய இத் திருக்குறள் பழந்தமிழரின் முயற்சி, காதல், கல்வி, இல்வாழ்க்கை போன்றவைக்கு கருவூலமாகத் திகழ்கிறது. இத்திருக்குறளில் காணப்படும் காதல் கூறுகளை விளக்குவதாக இவ்வாய்வுக் கட்டுரை அமைகிறது.

**காதல்**

இரு உடல்களுக்குள் இருக்கும் ஒரு இதயம் காதல். காதல் சிறப்புரைத்தல் என்னும் அதிகாரத்தில் அத்தகைய தூய்மையான காதலின் உண்மைத் தன்மையினைக் காதலி எடுத்துரைப்பதாகத் திருவள்ளுவர் ஒரு குறட்பாவினை இயற்றியுள்ளார். தன் கண்ணுக்குள் இருக்கும் காதலர் மறைவார் என்பதை அறிந்து கண்ணை இமைக்காமல் இருக்கிறாள் அந்தக்காதலி. அதனை அறிந்த ஊர் மக்கள் அந்தக் காதலின் மகத்துவத்தை உணராமல் அவன் தன் காதலியைத் தூங்கவிடாமல் செய்யும் துன்பத்தை தருபவன் என்றும் அன்பில்லாதவன் என்றும் அவனை குறை கூறுகின்றனர் என்று தலைவி துயரப்படுகிறாள்,

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**"இமைப்பின் கரப்பாக்கு அறிவல் அனைத்திற்கே**
**ஏதிலர் என்னும் இவ்வூர்" (1129)**

**அன்பின் மிகுதி**

காதலர் எப்பொழுதும் என் கண்ணுக்குள் இருக்கிறார். ஆதலால் அவர் மறைவதை அறிந்து கண்ணுக்கு நான் மையும் தீட்ட மாட்டேன், கண்ணுக்கு மை தீட்டும் நேரம் அவர் மறையநேரும் என்பதை அறிந்து மை தீட்டுவதைத் தவிர்த்துக் கொண்டேன். மை தீட்டுகின்ற பொழுது ஒரு நொடியளவு கண்களை மூடினால் அவர் மறைந்துவிடுவாரோ என்று எண்ணி கண்ணுக்கு மை தீட்டுவதை நிறுத்திக்கொண்டேன்.

**அன்பின் பார்வை**

ஒத்த அன்புள்ள காதலனும் காதலியும் ஒரு மனதோடு பார்த்தால்தான் அன்பு மிகுதி அடையும்

**"நோக்கினால் நோக்கி இறைஞ்சினாள் அ.்.துஅவள்**
**யாப்பினுள் அட்டிய நீர்"**

காதலனை காதலி அன்புடன் அவனை பார்வை பார்க்கிறாள், பின்பு காதலன் பார்த்தவுடன் தலைகுனிந்து பணிவாக நிற்கிறாள். அவ்வாறு அவள் நிற்பது ஊற்றுநீர் போல எங்களின் அன்பு மிகுதியடைந்து பொங்கி வழிகிறது.

**கண்ணின் பார்வையே காதல்**

காதலனும் காதலியும் பேசிக்கொண்டால்தான் காதல் என்பது இல்லை, ஒருமித்த பார்வை இருந்தாலே அதை இப்பாடலடிகள் கூறுவதை,

**"கண்ணோடு கண்இணை நோக்குஒக்கின் வாய்ச்சொற்க்கள்**
**என்ன பயனும் இல"**

கருத்தொருமித்த காதலர் இருவரின் விழிகளும் ஒன்று சேர வேண்டும். இருவரின் கண்பார்வையுடன் ஒன்றோடொன்று சேர்ந்தாலே உயர்ந்த காதல் நிலையாகும். ஒத்த அன்புடைய காதலனும் காதலியும் ஒன்று சேர்ந்து வாய்பேச்சாலும் உடலாலும் ஒன்று சேர்ந்தால் தான் காதல் என்பது ஒன்றுமில்லை. இருவரின் கண்பார்வையே போதும்.

**காதலன் மனநிலை**

**"அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை**
**மாதர்கொல் மாலுமென் நெஞ்சு"**

ஒத்த உருவும் திருவும் பருவும் பண்பும் உடைய ஒருவனும் ஒருத்தியும் தம்முள் கண்டு மயங்குகின்றான். அந்த மயங்கிய ஒத்த நிலைமையைத் தலைவனே புலப்படுத்துகிறான். அணங்கோ மயிலோ என நெஞ்சம் மயங்குகிறது. இங்கு தலைவன் தலைவியின் அழகினைக்கண்டு செய்வதறியாது திகைத்து நின்றான். பிறகு அவள் பார்க்கிறாள். அவளது பார்வை கண்டு தலைவன் மிகவும் வருத்தம் அடைகிறான். பேண்தன்மையோடு அவளுடைய கண்கள் வருந்தும் வருத்தத்தில் அவன் அதை உணர்கிறான். பார்வை மட்டும் அல்லாது அதன் அழகையம் ரசிக்கிறான். உள்ளம் வெளியில் தெரிவதில்லை. ஆனால் கண் அந்த உள்ளத்தைக் காட்டி விடுகின்றன, அந்தக் குறிப்பின் மூலம் அவள் நெஞ்சத்தினை அறிகிறான். இங்கு தலைவன், தலைவி விருப்பம் இரண்டும் ஒத்திருந்தது. இதுவே ஒத்த அன்பு எனப்படும்.

இன்பம் மட்டும் அல்ல காதலில் துன்பமும் இன்பமாகத்தான் அமையும். களவியலில் உள்ள காதலர்கள் ஒருவர் துன்பம் அடைந்தாலும் மற்றொருவரிடம் அத்துன்பத்தைக் காட்டாது தன் அன்பர் மகிழ்ச்சியாக தன் துன்பத்தை மறைக்கிறார்கள். சான்றாக, சுந்தர காண்டத்தில்,

**"வன்பொறை நெஞ்சினன் வருத்தம் உன்னுவாள்**

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**என்புஉற உருகினன். இரங்கி ஏங்கினன்**

**துன்பமும் உவகையும் அமைந்த உற்றத்தான்"**

இங்கு சீதை இராவணனால் கவரப்பட்டு துன்புற்று இருக்கிறாள். ஆனாலும் இராமன் தேடிவருகிறான் என்றதும் தன் கவலை விடுத்து, இராமனைப்பற்றின கவலையை எண்ணி வருந்துகிறாள். அவருக்கு அனுமனிடம் தைரியம் கூறுகிறாள், இதுவே ஒத்த அன்பு.

**புணர்ச்சியில் மகிழ்தல்**

ஒத்த அன்புடைய தலைவனும் தலைவியும் புணர்ச்சி அடையும்போது அங்கு மகிழ்ச்சி ஏற்படுகிறது. அப்போது தலைவியை வருணிக்கும்போது உவமை காட்சியுடன் உயர்தி கூறப்படுகிறது. அது மட்டுமில்லாமல் சில இயற்க்கை பொருளுடன் ஒப்பிட்டும் வருணிக்கப்படுகிறது.

**"கண்டுகேட்டு உண்டுஉயிர்த்து உற்றுஅறியும் ஐம்புலனும்**

**ஒண்டொடி கண்ணே உள"**

தலைவன் அவளின் அழகை கண்களால் பருகி மகிழ்ச்சி எய்தினான். அவளிடம் பேசும் பொழுது அவளின் மொழி தேன் அலையைப்போன்று இன்பமாக இருந்தது. அதை காதால் கேட்டு களிப்புற்றேன். அவளின் இதழ்களை வருடினேன். அவளின் இதழை சுவைத்து இன்பம் எய்தினேன். துலைவியின் கூந்தல் மேகத்தை போன்று கருமையான கூந்தல் அவளின் கூந்தல் நல்ல நறுமணமாக இருந்தது. அதன் வாசனையை நுகர்ந்தேன். பின்பு அவளது மேனி முழுவதையும் தொட்டு தழுவினான். இன்ப வெறியூட்டமாக இருந்தது. பின்பு இன்பம் துய்த்தேன். அவள் என் ஐம்புலன்களுக்கும் அவள் எனக்கு விருந்தூட்டி மகிழ்ந்தால்.

**காதலின் வலிமை**

ஒருவருக்கு காதல்(காமம்) வந்து விட்டால் தாங்க துயரமோ அல்லது பருப்பொருளையோ அவர்களால் தாங்க முடியாது. மிகவும் மென்மையுடையவர்களாக இருப்பார்கள் என்பதை பாடல் காட்டுகிறது.

**"நெஞ்சத்தார் காதலவராக வெய்து உண்டால்**

**அஞ்சுதும் வேபாக்கு அறிந்து"**

தலைவி தலைவனை எப்போதும் தன் மனதில் நினைத்துக் கொண்டே இருக்கிறாள். இந்நிலையில் அவர் என் உடலோடு உடலாகவும் உயிரோடு உயிராகவும் என் மனதில் கலந்துவிட்டார். எனக்கு எந்த ஒரு துன்பம் என்றாலும் அவருக்கும் அத்துன்பம் நேர்ந்துவிடும் எனவே சூடான – வெய்ய உணவுகளை உண்டால் அவரது மேனி நோகும் என்று அஞ்சுகிறேன். எனவே சூடான பொருளை நான் உண்ண மாட்டேன் என்கிறாள் தலைவி.

**அலர் தூற்றல்**

ஒத்த அன்புடைய தலைவனும் தலைவியும் கூடலின் போது ஊரார் பார்த்துவிட்டால் பின்பு அவர்களை தவறாக பேசுவது இயல்பாகிவிட்டது. களவில் அலர்தூற்றும் போதுதான் காதல் வலிமை பெறுகிறது.

**"கண்டது மன்னும் ஒருநாள் அலர்மன்னும்**

**திங்களை பாம்பு கொண்டற்று"**

காதலி காதலனை ஒருநாள் பார்த்தாள். காதலி காதலனை பார்த்ததை ஊரார் பார்த்துவிட்டனர். இருவரைப் பற்றியும் ஊரார் அலர் தூற்றுகின்றனர். இவர்களின் செயல் பாம்பு விழுங்குவது போல உள்ளது.

**பொழுது கண்டு இரங்கள்**

**"காதலர் இல்வழி மாலை கொலைக்களத்து**

**ஏதிலர் போல வரும்"**

என் காதலரோடு நான் இன்ப வாழ்வு வாழ்ந்த நாள்களில் மாலை பொழுது இனிமை

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

பொழுதாக இருந்தது. எப்பொருளும் அழகாக இருந்தது, வெம்மைகூட குளிர்ச்சியாக இருநதது. எனது உயிர் இன்பமுற்றுத் தளிர்விட்டு வளரும்படியாக அமைந்தது. ஆனால் தலைவன் என்னை விட்டு பிரிந்து சென்றதிலிருந்து மாலை பொழுது எனக்கு துன்பமாக இருக்கிறது. குளிர்ச்சி உடைய நிலவுகூட வெம்மையாக இருக்கிறது. நான் பிரிவுத்துயரில் அழுந்திக்கிடக்கும் இத்துன்ப நாட்களிலோ கொலைக் களத்தில் உயிருண்ண வரும் பகைவர்போல வருகின்றது.

**முடிவுரை**

திருக்குறளில் காதல் நிலையை இக்கட்டுரை பதம் மட்டும் பார்க்கிறது. காதல் என்பது பார்வை என்னும் கருவிகள் மூலம் ஆரம்பித்து பின்பு தொடு உணர்வு வரை காதல் சென்றுவிட்டதை இக்கட்டுரை வாயிலாக அறிய முடிகிறது.

**பயன்பட்ட நூல்**

1. திருக்குறள் புதிய உரை, புலியூர்க்கேசிகன், பூம்புகார் பதிப்பகம், சென்னை.
2. திருக்குறள் - க.ப. அறவாணன், தாயமாள் அறவாணன் அறக்கட்டளை, சென்னை.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

# உலகப் பொதுமறையில் விளிமரபு

# Vizhi Marabhu (Rhetoric) in *Thirukkural*

**இரா.மேகலாராணி,** முனைவர்பட்ட ஆய்வாளர்,
தமிழ் உயராய்வு மையம், எஸ்.எ.்.ப்.ஆர். மகளிர் கல்லூரி, சிவகாசி - 626123.

## Abstract

*The article details the function of 'Vizhimarabhu' in "Thirukkural. It is a grammatical part in Tamil language. It is all about the art of rhetoric; discourse interpersonal and intrapersonal modes of expression in daily communication. From Tholkappiar to many of the scholars before "Thirukkural" emphasized the meaning and function of 'Vizhi marabhu'. Hence, the paper briefs down the themes related to 'Vizhi Marabhu' from the facts derived from supportind works and from the kurals collected from "Thirukkural".*

**Keywords:** Vizhi Marabhu (Rhetoric) , *Thirukkural*

மங்காப் புகழ் பெற்ற சங்க நூல்களை உள்ளடக்கிய இலக்கிய புலம் கொண்டது நம் தமிழ் மொழி. மொழியின் ஆற்றலுக்கும் இறவா பெருமைக்கும் முக்கியக் காரணம் அல்லதை தடுத்து நல்லதை உரைக்கும் மூத்தோர் பண்பே. தான் நெறியுடன் வாழ்வதோடு உடன் இருப்போர்களையும், அடுத்த தலைமுறையினர்க்கும் உரைக்கும் மாண்பு நம்மிடையே உள்ளது. இவ்வாறு நாம் கற்றதை மற்றோர்களுக்கு உரைக்கும் விளிப்பண்பினை உலகப்பொதுமறையின் வழி ஆராய்வதே இக்கட்டுரையாகும்.

**உலகப்பொதுமறை**

*பதிணென்கீழ்கணக்கு* நூல்களில் நீதி நூலாக தலைசிறந்து விளங்குவது *திருக்குறள்.* 133 அதிகாரங்களையும் 1330 குறளினையும் கொண்டு உள்ளது. அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கினையும் உரைப்பது. **வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ்நாடு**[1] **பா.க.** என்று பாரதியார் புகழும் பெருமைக்குரியது. உலகில் உள்ள பல மொழிகளில் மொழிபெயர்ப்பு செய்யப்பட்ட நூல். மூன்று காலத்திற்கும் பொருந்தி நிற்கும் நூல்

**விளி**

படர்க்கையில் இருக்கும் பெயர்களை எதிர்முகமாக அழைப்பதே விளி என இலக்கண ஆசிரியர்கள் கூறுகின்றனர். தொல்காப்பியர் முதற்கொண்டு வேறு பல இலக்கண ஆசிரியர்களும் விளியின் இலக்கணம் பற்றி பேசுகின்றனர்.

***தொல்காப்பியம்***

தொல்காப்பியர் வேற்றுமைகள் பற்றிய வரையறையை வழங்கவில்லை. ஆனால் எட்டாம் வேற்றுமையான விளி குறித்து தனி இயல் அமைத்து பேசுகின்றார். விளி என்பது ஏற்கும் எவ்வகைப் பெயரொடும் பொருந்தித் தோன்றுவது என்கிறார்.

**"விளி எனப்படுப கொள்ளும் பெயரொடு**
**தேளியத் தோன்றும் இயற்கைய என்ப**[2] **- தொ.சொ.118**

விளி எனப்படுப என்ற பன்மை விகுதியைக் கூறி விளி செய்யுளில் மாற்றங்களை

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

அடையும் என விளிக்கிறார். ஈறு திரிதல், ஈறு கெடுதல், பிறிது வந்தடைதல், ஈற்றயல் நீடல், இயல்பு போன்றவையே விளியின் மாற்றங்களாகும்.

**நன்னூல்**

தொல்காப்பியத்திற்குப் பின் 1600 வருடங்கள் கழித்து தோன்றிய நன்னூல் விளிக்கு சிறந்த விளக்கத்தை அளிக்கிறது. படர்க்கையில் இருக்கும் நபரை எதிர்முகமாக அழைக்கும் பாங்கினை விளி என்கிறது.

**"எட்டன் உருபே எய்து பெயப் ஈற்றின்**
**திரிபு குன்றல் மிகுதல் இயல்பு அயல்**
**திரிபும் ஆம் பொருள் படர்க்கையோரைத்**
**தன் முகமாக தான் அழைப்பதுவே[3] - ந.சொ.303**

மேற்கண்ட நூற்பா விளி வேற்றுமையின் இலக்கணம், செய்யுளில் அடையும் மாற்றங்கள் குறித்துச் சொல்கிறது. படர்க்கையோரை என்பது உயர்திணை மட்டுமின்றி அஃறிணைப் பெயர்களையும் குறிக்கின்றது.

**வீரசோழியம்**

வேற்றுமையை முதல் இயலாக அமைத்த வீரசோழியம் நூலானது விளி பற்றி சில செய்திகளைம் கூறுகின்றது. **"மாயா விளியினுருபுகள் பிற்றிவை முன்னிலைக்கண்ணேயாகும். முன்சொன்ன வேழ் வேற்றுமையு மெயல்லாவிடத்தும்[4] - வீ.சோ.36**

1. விளியானது முன்னிலையில் அமையும்
2. சுவ், ஆர், அர், ஆர்கள், கள், மார் ஆகிய முதல் வேற்றுமை உருபுகளை சில நேரங்களில் விளியும் பெறும்.
3. ஆய், ஆள், ஈ, ஏ, அ, ஆ, ஆன், ஒல், ஓய், ஈர் இவற்றின் அளபெடை ஆகியன விளியின் உருபுகளாகும்.

தொல்காப்பியம் மூன்று திணைகளிலும் விளி அமையும் நிலை குறித்து பேசியது. வீரசோழியம் முதல் வேற்றுமையுடனான ஒப்பீடு, விளிக்கு என தனி உருபுகள் பகுத்து ஆராய்ச்சி நூல் போன்று அமைந்துள்ளது.

**முத்துவீரியம்**

தொல்காப்பியத்திற்கு உரை விளக்கம் போன்று அமைந்த நூல் முத்துவீரியம். விளி பற்றிய தொல்காப்பியர் கூற்றை போற்றி ஏற்கிறது.

**"விளியெனப்படுப ஏற்கும் பெயரோடு**
**விளங்கத் தோன்றும் இயற்கைய வென்ப[5] - மு.வீ. 556**

பல இடங்களில் நூற்பாவின் வரிகளும், சொற்களும் மாற்றங்கள் இன்றி தொல்காப்பிய படிவம் போன்றே அமைந்துள்ளன.

**இலக்கண விளக்கம்**

தொல்காப்பியரின் கருத்துக்களையும், நன்னூலாரின் நூற்பா வரிகளையும் உள்ளடக்கியதாக இலக்கண விளக்கம் அமைகின்றது.

**"எட்டனருபே யெய்து பெயரீற்றின்**
**றிரிரு குன்றன் மிகுத லியலிபயற்**
**றிருபு மாம்பொருள் படர்க்கை யோரைத்**
**தன்முக மாகத் தானழைப் பதுவே[6] - இ.வி.205**

தொல்காப்பியர் மற்றும் பின் வந்தோரின் கருத்திற்கு வலு சேர்ப்பதாக இந்நூல் அமைந்துள்ளது.

**விளித்தல் வகைகள்**

நம் கருத்தை விரும்பிய நபரிடம் கூற விளிப்பது அன்றாட நிகழ்வு. ஆயின் நடைமுறை வாழ்வின் நாகரீக மாற்றங்களால் அவ்விளிப்பு பல விதங்களில் நடைபெறுகின்றது.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

1. **தான் பிறரை விளித்தல்**
2. **தன்னைத் தானே விளித்தல்**
3. **பிறர் தன்னை விளித்தல்**
4. **இருவர் வேறொருவரை விளித்தல்**

இவ் விளிப்பு முறைகளில் உலகப்பொதுமறையும் தன் கருத்தை எடுத்தாளுகின்றது.

**தான் பிறரை விளித்தல்**

ஒரு நபரை விளித்து செய்தியை கூறும் பொழுது அதன் அழுத்தமானது பல மடங்கு கூடுகின்றது. கருத்து மட்டுமின்றி கட்டளை பிறப்பிக்கும் நேரங்களில் ஒருவரை விளித்துக் கூறுவதால் கவனம் சிதறாமையும் கூடுதல் பொறுப்பும் உண்டாகிறது.

**“நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் தடிந்து எழிலி**
**தான்நல்காது ஆகி விடின்[7] - தி.கு.17**

பெரும்கடலும் மழை பொழியாவிடின் தன் நீர்மை குன்றிவிடும் என்கிறார் வள்ளுவர். **உவமையின் நோக்கம் இரண்டு. ஒன்று தெரிந்ததைக் கொண்டு தெரியாத ஒன்றை விளக்குவது. மற்றொன்று இலக்கியத்திற்கு அணி சேர்ப்பதாகும்[8] - தி.உ.ந.ப.4** கண்ணுக்குத் தெரியாத கடவுளை முதல் அதிகாரத்தில் உரைத்த வள்ளுவர் கண்ணுக்குப் புலப்படும் வான் சிறப்பினை அடுத்து உரைக்கிறார். கடலின் நீர்த்தன்மையை உரைத்தல் வழி மனிதன் தன் முயற்சியை கைவிடின் கடல் போன்ற அறியும் வற்றிவிடும் என்ற பொருளும் தோன்ற இடமுள்ளது.

**தனக்குத் தானே விளித்தல்**

உணர்ச்சிகள் அதிகமாக வெளிவரும் சமயங்களில் பிறரிடம் பேசும் நிலை குறையும். அதிக அளவு இன்பம், துன்பம், அச்சம், கோபம் போன்றவை ஏற்படும் பொழுது தனக்குத் தானே உரையாடிக் கொள்வர்.

**“மணத்துக்கண் மாசு இலன் ஆதல் அனைத்து அறன்**
**ஆகல நீர பிற”[9] - தி.கு. 34**

அறம் செய்பவன் மனதளவில் குற்றம் செய்யாது நேர்மையுடன் வாழ்பவன் ஆவான். **தூய்மை நோக்கோடும், தூயசெயல் நோக்கோடும் அறங்கரைபவர், ‘ மனத்துக்கண் மாசிலனாதல்[10] - வள்ளுவம்.ப.64** என்ற வ.சுப.மாணிக்கனாரின் வள்ளுவம் உரைப்பது இங்கு நோக்கத்தக்கது. தான் ஒரு கருத்தை உரைக்கும் முன்பு தன்னிடம் உள்ள பண்பை உற்று நோக்குதல் அவசியம்.

**பிறர் தன்னை விளித்தல்**

சாதனை, வெற்றி பெறும் சூழலில் பிறர் தன்னை வியந்து பேசுதல் உண்டு. கோப உணர்ச்சி மேலிடும் பொழுது தான் சொல்வது செய்யவில்லை எனில் பிறர் தன்னை இவ்வாறு அழைக்கலாம் என்பர். ஆகிய இரண்டு காரணங்களும் பிறர் தன்னை விளித்தல் வகையைச் சாரும்.

**“எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்**
**பண்புடை மக்கட் பெறின்”[11] - தி.கு.62**

பிறரால் பழிக்கப்படாத மக்களைப் பெறுபவனை எழு பிறப்பும் துன்பம் தொடராது. சமுதாயம் நம்மை நோக்கும் முறை நமது செயல்பாடுகளைக் கொண்டே. நல்ல குழந்தைகளை பெறின் உண்டாகும் நன்மை பிறர் நம்மை சிறப்பானவன் என்று விளிக்கவே.

**இருவர் மற்றொருவரை விளித்தல்**

ஒருவர் மீது வெறுப்பு ஏற்படும் பொழுது செய்தியை மற்றொருவரிடம் கூறுவது உண்டு. மேலும், இருவர் இணைந்து வேறொருவரின் நன்மை, தீமையை உரைப்பதும் இன்றளவும் உள்ளவையே ஆகும்.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

1. விருப்பமில்லாதவர் கேட்கும் கேள்விகளுக்கு அவர் கேட்க மற்றொருவரிடம் பதில் கூறுதல்
2. தூரத்தில் நிற்கும் நபரிடம் தன் கருத்தை ஜாடையாக மற்றவரிடம் பேசுதல்
3. ஒருவரின் வெற்றியை அவரோ அல்லது அவரின் சுற்றமோ கேட்க உரைப்பது

போன்ற முறைகளிலே இவ்வகை விளித்தல் நிகழ்கிறது.

**"ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும் தன்மகனைச்**
**சான்றோன் எனக்கேட்ட தாய்"[12] - தி.கு. 69**

தன் மகனை மற்றோர் புகழ்ந்து பேசுவதைக் கேட்பதைக் காட்டிலும் ஒரு தாய்க்கு வேறு என்ன இன்பம் இருக்கின்றது. சமுதாயத்தில் உள்ளோர் தன்னைச் சுற்றியுள்ளோர் மீதான கருத்தை அவர் இல்லாத நேரங்களிலும் உரைப்பது உண்டு என்பதை அறியமுடிகின்றது.

**தொகுப்புரை**

1. யாதும் ஊரே  யாவரும் கேளிர் என்பது பெரியோர் கூற்று. திருவள்ளுவர் தமிழ் இன மக்களுக்கு மட்டுமின்றி உலகம் முழுவதும் உள்ள அனைவருக்கும் கருத்துக்களை எடுத்துரைக்கின்றார்.
2. விளியானது படர்க்கையோரை அழைக்கும் தன்மையாகும்
3. விளிப்பற்றி பல இலக்கண ஆசிரியர்கள் தன் கருத்தை முன் வைக்கின்றனர். இதில் பெரும்பான்மை தொல்காப்பியத்தை அடியொற்றி அமைந்துள்ளது.
4. தொல்காப்பியத்திற்கு அடுத்து வந்த நன்னூல், முத்துவீரியம் மற்றும் பிற நூல்கள் ஆய்வு கண்ணோட்டத்துடன் விளியை ஆராய்கின்றனர்.
5. தன் வாழ்வின் நெறி தொடங்கி, பிறர் கடைபிடிக்க வேண்டிய முறை கூறி, தன்னை பிறர் விளிக்கும் விதத்தினையும், தான் இல்லா தருணம் தன் புகழை நிலை நாட்டுதல் வரை வள்ளுவர் விளிக்கிறார்.

**அடிக்குறிப்பு**

1. மகாகவிபாரதியார், பாரரியார் கவிதைகள், ப-20
2. தொல்காப்பியர், தொல்காப்பியம், நூ- 118
3. பவணந்திமுனிவர், நன்னூல், நூ-303
4. புத்தமித்ரனார், வீரசோழியம், நூ-36
5. முத்துவீர உபாத்தியாயர், முத்துவீரியம், நூ-556
6. வைத்தியநாத தேசிகர், இலக்கணவிளக்கம், நூ-205
7. திருவள்ளுவர், திருக்குறள், கு-17
8. சி.இராசேந்திரன், திருக்குறள் உவமைநயம், ப.4
9. திருவள்ளுவர், திருக்குறள், கு-34
10. வ.சுப. மாணிக்கம், வள்ளுவம், ப.64
11. திருவள்ளுவர், திருக்குறள், கு-62
12. மேலது-69

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

# குறள் கூறும் விருந்தோம்பல்

## Portrayal of Hospitality in *Thirukkural*

**நா. ரம்யா,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை, என்.ஜி.எம். கல்லூரி, பொள்ளாச்சி.

**Abstract**

*The article details the theme of 'Hospitality' in Tamil culture as per documented in "Thirukkural". Tamil people are known for their hospitality. Hospitality is considered as one of the virtues in one's life. It is the age old trend to treat the guest of relative with a rich hospitable sence by providing inch by inch importance to the comfort of the guest. The reality behind the good sense of generosity is largely seen in "Thirukkural". Domestic kindness, the vitalness of hospitality, hospitality as a saga, charity, devotion and hospitality are chosen as minor points to show the emphasis of hospitality in the work. Hence, the paper briefs down the themes related to it from the facts derived from the kurals collected from "Thirukkural".*

**Keywords:** Portrayal of Hospitality, Tamil Culture, Life, *Thirukkural*

தமிழர் பெரிதும் போற்றும் விருந்தோம்பல் என்னும் பண்பாடு அக்காலம் முதல் இக்காலம் வரை சிறந்து விளங்குகிறது. விருந்தோம்பல் என்பது இல்லற வாழ்வியல் நெறிமுறைகளில் ஒன்றாகக் கருதப்படுகிறது. அக்காலத்தில் விருந்தோம்பல் சாதி மதம் பார்க்காமல் நடைபெற்றதை தமிழ் இலக்கியங்கள் பல எடுத்துரைக்கின்றன. அவ்வரிசையில் திருக்குறளில் வள்ளுவர் குறிப்பிடும் விருந்தோம்பல் பற்றி காண்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**விருந்தோம்பல்**

விருந்தோம்பல் என்பது நமது உறவினர்களுக்கும் நண்பர்களுக்கும் நாம் விருந்து படைப்பதையோ, அல்லது நாம் அவர்களின் வீட்டிற்குச் சென்று உறவினர் நண்பர் என்ற முறையிலோ விருந்து உண்பது அன்று. விருந்தினர் என்றால் புதிதாக வரும் நபர்களை அழைத்து உணவு படைப்பதாகும் இன்னும் கூர்ந்து நோக்கினால் புதிதாக வரும் நண்பர்களை முகமலர்ச்சியுடன் வரவேற்று உணவளிப்பதே விருந்தோம்பலின் இயல்பாகும் பண்பாகும் இதனை வள்ளுவர்,

**"மோப்பக் குழையும் அனிச்சம் முகம்திரிந்து**
**நோக்கக் குழையும் விருந்து" (குறள் - 90)**

என்கிறார். அனிச்சமலர் என்பது மென்மையான தன்மை பொருந்தியது நுகர்ந்து பார்த்தால் கூட அனிச்சமலர் வாடிவிடும் அனிச்சமலரை விட மென்மையான உள்ளம் படைத்தவர் விருந்தினர் ஆவர், ஆகையால் விருந்தினரை முகமலர்ச்சியோடு உபசரிக்க வேண்டும் இல்லை எனில் அவரது உள்ளம் அனிச்சமலரைவிட வாடிவிடும் என்பதை இக்குறள் விளக்குகிறது.

**இல்லற விருந்தோம்பல்**

ஒருவர் ஒருத்தியை மணந்து இல்லறம் நடந்துவதன் நோக்கம், வீட்டிற்கு வரும் விருந்தினரை வரவேற்று உபசரிப்பதாகும். விருந்தோம்பல் ஓர் அறமாக கருதப்படுகிறது. வீட்டிற்க்குவருபவரே விருந்தினர் ஆவர் வீட்டிற்க்கு வரும் விருந்தினரை உபசரித்து மகிழாமல்

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

வெளியில் காக்க வைத்து தான் மட்டும் மனைவி மக்களோடு மறைவில் இருந்து உண்பது விருந்தோம்பலன்று அவ்வுணவு நஞ்சு போன்றது அவர்களை வரவேற்று உணவளித்து பின்பு உண்பது அமிழ்த்தை விட இனியதாகும் இதனை,

**“விருந்து புறத்தாத் தானுண்டல் சாவா**
**மருந்தாயினும் வேண்டல்பால் அன்று” (குறள்-82)**

என்னும் குறள் சுட்டுகிறது.

**மக்களின் தலையாய பண்பு**

அக்கால் மக்களின் தலையாய பண்புகளும் முதன்மையானது விருந்தினரை உபசரித்தல் என்பதாகும். மக்களுக்கு எவ்வளவு சுமைகள் இருந்தாலும் அவற்றையெல்லாம் இறக்கிவைத்து விட்டு தம்மை நாடி வந்த மனிதர்களுக்கு விருந்து உபசரிப்பர், இவ்வாழ்வில் ஈடுபட்ட தலைவனும், தலைவனும் அறவழியில் சேர்க்கும் பொருளை விருந்தினர்க்கு பயன்படுத்த வேண்டும் என்பதை

**“இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி**
**வேளாண்மை செய்தற் பொருட்டு” (குறள்-81)**

என எடுத்துறைக்கின்றார்.

**செல்வம் குறையாத விருந்தோம்பல்**

தன்னை தேடிவருகின்ற விருந்தினரை நாள் தவறாமல் உபசரிப்பதால் ஒருவனுடைய செல்வம் குறைந்து விடுவதில்லை அப்பண்பே அவனது செல்வத்தை பெருக்கும் என்பதை

**‘‘வருவிருந்து வைகலூம் ஓம்புவான் வாழ்க்கை**
**பருவந்து பாழ்படுதல் இன்று” (குறள் - 83)**

என எடுத்துரைகிறார் மலர்ந்தமுகத்துடன் விருந்தினரை உபசரிக்கும் ஒருவனது வீட்டில் செல்வம் பெருகும் என்பதும் தான் சேர்த்த செல்வத்தை நல்வழியில் செலவு செய்வதே மகிழ்ச்சியாகும் அம்மகிழ்ச்சியே சிறந்த செல்வமாகும்.

**விருந்தோம்பலின் சிறப்பு**

விருந்து உபசரிப்பதற்கு வயதுவரம்பு ஒன்றும் கிடையாது தலைவன் தலைவி விட்டில் இல்லா நேரத்தில் அவரது பிள்ளைகள் தம் வீட்டிற்கு வரும் விருந்தினரை உபசரித்தல் மிகவும் சிறப்பானதும் நற்பெயரைப் பெற்றுத்துருவதும் ஆகும்.

**விருந்தோம்பலின் வேள்வி**

விருந்தினரை இனியமுறையில் வரவேற்று அவர்களுக்குப் பசிநீங்க உணவளித்துப் போற்றிடும் வேள்வியில் ஈடுபடாதவர்கள் பின்னர் பொருட்களை வருந்திக் காத்து எந்த அறச்செயலையும் செய்யாதவர்களால் இழக்கும்போது பெரிதும் வருந்துவார்கள் இதனை,

**‘‘பரிந்தோம்பிப் பற்றற்றோம் என்பர் விருந்தோம்பி**
**வேள்வி தலைப்படா தார்” (குறள்-88)**

என்கிறார், பொருட்களைச் சிரமப்பட்டு தேடிடும் ஒருவன் அவனுடைய வாழ்வில் நல்ல அறங்களைச் செய்து இன்மையில் நன்மை பெற வேண்டும் என்ற குறிக்கோளுடன் செயல்பட வேண்டும் இவ்விதம் செய்யாமல் இருந்தோமானால் இறக்கும்போது எண்ணி எண்ணி வருந்த நேரிடும் ஆகவே நல்லறங்களைச் செய்து இன்மையில் மட்டுமின்றி மறுமையிலும் விருந்தோம்பலை செய்ய போற்றவோம் என்பது உணரத்தக்காகும்.

**பக்தியும் விருந்தோம்பலும்**

மனித வாழ்வில் எச்சுழலாயினும் இறைவன் அருளை நாடி வருவர் இறையன்பர்கள் இவர்களின் அடிப்படை நோக்கம் மற்றவர்களுக்கு உதவுவது ஆகும். அவ்வகையில் அனைவரும் ஏற்றுக்கொள்வது தானம் அதில் இறைவன் பெயரில் பல தானதர்மங்கள் செய்தாலும் அன்னதானமும் விருந்தினரை உபசரித்து உண்பித்தலுமே தமிழர் பண்பாடாக இருந்திருக்கின்றது இதனை,

E-ISSN: 2581-7140

Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**"செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான்**
**நல்விருந்து வானத் தவர்க்கு" (குறள் - 86)**

என்றுறைக்கின்றார் வள்ளுவர்

**முடிவுரை**

வளர்ந்துவரும் அறிவியல் உலகத்தில் விருந்தோம்பல் என்பது தமிழ்மொழியைப் போல நாள் தோறும் வளரவேண்டும் தமிழர் பண்புகளில் ஒன்றான விருந்தோம்பலின் சிறப்பினை உலகம் முழுவதும் உணர்ந்து பிறருக்கும் உணர்த்தி வாழ்வில் மேம்படைய செய்ய வேண்டும்

**பயன்பட்ட நூல்**

1. திருக்குறள் புதிய உரை, புலியூர்க்கேசிகன், பூம்புகார் பதிப்பகம், சென்னை.
2. பரிமேலழகர் உரை, திருக்குறள்.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

# திருக்குறளில் இல்லறம்

## Family in *Thirukkural*

**சா.ரெபேக்காள்,** முழுநேர முனைவர் பட்ட ஆய்வாளர்
அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரி (தன்னாட்சி), சிவகாசி

**Abstract**

*The research article evinces about 'family' as portrayed in "Thirukkural". Family is a one to cherish people with whole-hearted harmonious life. Life without a family is considered as a vaccum in life as per the laws of Tamil culture. The people of Tamil nadu gives much more importance to Family full of moral virtues. Life becomes meaningful to an individual after marriage; it is the time to prove him/her worthy of high qualities. Marriage, prosperous life, charity from home, the home maker, charity of the couple, discipline, philanthropy, benevolent children, hospitality, share and live are the themes briefed in the paper. Hence, the paper scrutinies the related facts from "Thirukkural".*

**Keywords:** Family, *Thirukkural*, Life, Tamil Family, Nobility of Family

**முன்னுரை**

*பதினெண்கீழ்கணக்கு* நூல்களில் மிக முக்கியத்துவம் வாய்ந்த நூல் *திருக்குறள்* ஆகும். பதினொரு நீதி நூல்களில் உலகப் புகழ் வாய்ந்த நூல் திருக்குறள். மனித வாழ்க்கைக்குத் தேவையான உகந்த கருத்துக்களை எடுத்துக்கூறும் வாழ்வியல் நூலாக திருக்குறள் விளங்குகிறது. பழந்தமிழ் இலக்கியங்கள் காதலையும் வீரத்தையும் மையமாகக் கொண்டு படைக்கப்பட்டன. இலக்கியங்கள் மாந்தரின் வாழ்க்கை முறையை இரண்டாகப் பகுத்தனர்.இல்லத்தில் நிகழும் காதல் சார்ந்த உணர்வுகளை அகம் என்றும், இல்லத்திற்கு வெளியே நிகழும் போர், கொடை, நட்பு ஆகியவற்றைப் புறம் என்றும் கொண்டனர். இலக்கியங்கள் வாழ்க்கையின் அனுபவப் பதிவுகளைப் பதிபலிப்பதாகவே உள்ளன. இந்நூலில் வாழ்வியல் கருத்துக்கள் விரவிக் கிடக்கின்றன. திருக்குறளில் இல்லற வாழ்வியல் பற்றி ஆராய்வதாக இவ்ஆய்வுக் கட்டுரை அமைகிறது.

**திருமணம்**

குடும்ப வாழ்க்கை திருமணத்திலிருந்தே தொடங்குகிறது. தலைவன் தலைவியின் அன்பு வாழ்க்கை களவு வாழ்க்கையிலிருந்தே தொடங்குகிறது. எனினும் ஊரறியச் செய்யும் மணத்தையே வள்ளுவர் போற்றியுள்ளார்.

**"உடம்போடு உயிரிடை என்ன மற்றன்ன**
**மடந்தையொடு எம்மிடை நட்பு" (குறள். 1122)**

என்ற குறட்பா சுட்டுகின்றன. தலைவன் தலைவியோடு கொண்ட நட்பு உடம்பொடு உயிர்க்கு உள்ள தொடர்புகள் எத்தன்மையானவையோ அத்தமையானவை எனக் குறிப்பிடுகிறார்.

**வளமான வாழ்வு**

இல்லறத்தார் அறத்தோடு பொருந்திய இன்பத்தை நுகர வல்லவர் அறம், பொருள், இன்பம் மூன்றும் இல்லற வாழ்வின் குறிக்கோளாகும்.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**"இன்பத்தின் இன்பம் விழையாதான் துன்பத்துள்**
**துன்பம் உறுதல் இலன்" (குறள்.629)**

என வள்ளுவர் வளமான வாழ்வினை விளம்புகின்றார். திருமணம் புரிந்து இல்லறம் நடத்துவது இன்பத்திற்காக மட்டுமன்று அறம் புரிவதற்காகவுமாகும்.

**இல்**

பண்டைத் தமிழர் அறந்தொடு பொருந்திய வாழ்வினை மேற்கொண்டனர். திருமண வாழ்வை இல்லறம் என்றனர். கணவனும், மனைவியும் இணைந்து இன்பம் துய்க்கும் அளவில் நில்லாமல் இல்லிருந்து அறங்களை புரிய வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்துகின்றன. திருக்குறளில் 'இல்' என்ற சொல் 59, 84, 143, 340, 1001, 1021, 1044, 1107 ஆகிய இடங்களில் வந்துள்ளன. 'இல்வாழ்வு என்ற சொல் 81, 'இல்லாள் என்ற சொல் 59, 903, 905, 906, 1039 ஆகிய இடங்களில் வந்துள்ளன. இல் + அறம் = இல்லறம் என்ற சொல் அமைப்பானது இல்லத்திலிருந்து அறவாழ்க்கை வாழ்வதையே குறிக்கிறது.

**"அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அ.்.தும்**
**பிறன்பழிப்பது இல்வாயின் நன்று" (குறள்.49)**
**"இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்**
**முயல்வாருள் எல்லாம் தலை" (குறள்.47)**

என்று குறிப்பிடுகிறார்.

**இல்லத்தலைவி**

இல்லறம் செம்மையாக நடைபெற அடிநாதமாக இருப்பவள் இல்லத்தலைவி ஆகும். மனைவி மாட்சியே இல்லறத்தை நல்லறமாக்கும். தன் கணவனை தெய்வமாக நினைந்து வணங்கும் பெண்கள், மழைப் பெய்ய வேண்டும் என்று வேண்டுபொழுது மழை பெய்யும் என்பதை,

**"தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்**
**பெய்யெனப் பெய்யும் மழை" (குறள்.55)**

என்ற குறளில் மூலம் இல்லத்தலைவியின் சிறப்பை சுட்டிக் காட்டுகிறார். மேலும், இல்லற அறத்தின் தலையாய அறம் அன்பே ஆகும். இதனை,

**"அன்பின் வழியாது உயிர்நிலை அ.்.தில்லார்க்கு**
**என்புதோல் போர்த்த உடம்பு" (குறள்.80)**

என்ற குறளின் மூலமாக விளக்கும் வள்ளுவர், உயிர் அன்புடன் இருக்க வேண்டும் என்றும், அன்பிற்கு உறைவிடம் பெண்ணே என்றும் சிறப்பிக்கிறார். இதனை,

**"முகத்தான் அமர்ந்து இனிதுநோக்கி அகத்தானாம்**
**இன்சொ லினதே அறம்" (குறள்.93)**

என்ற குறட்பா வழி இனிய சொற்களாலும் அன்பினாலும் குடும்ப உறுப்பினர்களையும் உறவினர்களையும் இணைக்கும் பாலமாக விளங்குபவள் பெண் என்று பெண்ணின் அன்பினைப் போற்றுகின்றார்.

**கணவன் மனைவி அறச்செயல்**

கணவன் மனைவி உறவு பல பிறவிகளில் தொடர்ந்து வருவது முன்னைப் பிறவிகளில் கணவன் மனைவியாக வாழ்ந்தவர்கள் ஊழின் வலிமையால் மீண்டும் கூடுகின்றனர். அவர்களுக்குள அன்பும் ஒழுக்கமும் இருப்பின் நல்லறமாக அமையும் என்பதை வள்ளுவர்,

**"அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**
**பண்பும் பயனும் அது" (குறள்.45)**

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

எனத் வள்ளுவர் எடுத்துரைக்கிறார். மேலும், ஒருவன் அறநெறியில் இல்வாழ்க்கை நடத்தினால் அவன் வேறு நெறியில் சென்று பெறத்தக்கது ஒன்றும் இல்லை என்பதை வள்ளுவர்,

**"அறத்தாற்றின் இல்வாழ்க்கை யாற்றின் புறத்தாற்றின்**
**போஒய்ப் பெறுவது எவன்" (குறள்.46)**

என்ற குறள் வழி அறத்தின் வழியே இலவாழ்க்கையை நடத்த வேண்டும் என்று குறிப்பிடுகிறார்.

**பிறர்மனை நாடாமல்**

இல்லறததின் மிகப்பெரிய வெற்றி பிறர்மனை நாடாமல் இருத்தலே ஆகும். பிறர் மனைவியை விரும்புபவன் குடிப்பழியை அடைவான் என்றும், பிறர் மனைவியை நோக்காதவனே அறநெறிப்படி இல்லற வாழ்வு மேற்கொள்வான் என்றும், பல்வேறு நன்மைகளை பெறுவான் என்றும் கூறுகிறார்.

**"பிறர்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு**
**அறனொன்றோ ஆன்ற ஒழுக்கு" (குறள்.148)**

பிறர்மனை நாடாமல் இருப்பவனே அறமும் ஒழுக்கமும் உடையவனாக இருக்க முடியும் எனத் வள்ளுவர் அறநெறிப்படுத்துகின்றார்.

**மக்கட்பேறு**

குடும்பம் ஒரு கோயிலாக மாற வேண்டுமானால் கணவன், மனைவி பிணைப்பு மட்டுமின்றி, நாம் பெறுகின்ற செல்வங்களிலேயே சிறந்த செல்வம் குழந்தைச் செல்வமாகும். இவ்வுலக வாழ்வும், மறுவுலக வாழ்வும் வளம் அடைய குழந்தைப்பேறு அவசியம் என்று எண்ணினர் குழந்தைப்பேறு இல்லாதவர்கனுக்கு மறுவுலக வாழ்வும் இல்லையென்று நம்பினர். உலகில் பெறக்கூடிய செல்வங்களில் எல்லாம் உயர்வானது மக்கட்பேறு. அதிலும் அறிவில் சிறந்த நன்மக்களைப் பெறுதலதான் உண்மையான செல்வம் என்கிறார். தனது குழந்தை சிறு கையினால் பிசைந்த கூழ் கூடப் பெற்றோர்க்கு அமுதாய் இனிக்கும் என திருவள்ளுவர் நம்புகிறார்.

**"அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்**
**சிறுகை அளாவிய கூழ்" (குறள்.64)**

என்ற குறள் உணர்த்துகிறது. தம் மக்களின் மழலை ச் சொல்லைக் கேட்டு அதன் இனிமையை நுகராதவரே குழலின் இசை இனியது என்றும் யாழின் இசை இனியது என்றும் கூறுவர் வள்ளுவர். இதனை,

**"குழல் இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்**
**மழலைச் சொல்ளோ தவர்" (குறள்.66)**

என்ற குறட்பா வழி குழந்தை செல்வத்தின் சிறப்பை அறிய முடிகின்றது.

**விருந்தோம்பல்**

விருந்து என்பதற்குப் புதுமை, புதியது எனத் தொல்காப்பியம் விளக்கமளிக்கிறது. புதிதாக வீட்டிற்கு வரும் நண்பர்களையும், உறவினர்களையும் விருந்தினர் என்பர். தமிழர்களின் தலைச்சிறந்த பண்பாடு விருந்தோம்பல் ஆகும். இல்லத்திற்குப் புதிதாக வருபவர்களை வரவேற்று, உபசரிக்கும் பாங்கே விருந்தோம்பல் எனப்படும். விருந்தோம்பல் என்பதை வள்ளுவர் மிகவும் வலியுறுத்திக் கூறுகிறார். ஒருவன் இல்லத்தில் இருந்து பல செல்வங்களைச் சேர்த்து வாழும் வாழ்க்கை எல்லாம் விருந்தினரைப் போற்றி உபசரித்து அவர்களுக்கு உதவி செய்வதற்கே என்கிறார். விருந்தினர் வீட்டின் புறத்தே இருக்க, தான் மட்டும் தனித்து உண்பது சாவா மருந்தாகி தேவர் அமிழ்தமாகியினும் விரும்பத் தக்கதன்று. நாள்தோரும் தனது இல்லத்திற்கு வந்த விருந்தினரைப் போற்றுகின்றவனுடைய வாழ்க்கையானது துன்பத்தால் கேடுறுவில்லை என்பதை,

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**"விருந்துபுறத் ததாத்தா னுண்டல் சாவா**
**மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று" (குறள் :82)**

என்ற குறட்பா விருந்தோம்பலின் சிறப்பை எடுத்துரைக்கின்றது. மேலும், கிறித்தவர்களின் விவிலியத்தில் **'அந்நியரை உபசரிக்க மறவாதிருங்கள் அதினாலே சிலர் அறியாமல் தேவ தூதரையும் உபசரித்ததுண்டு' (எபிரெயர்13:2)** என்ற வசனம் விருந்தோம்பலை வலியுறுத்துகின்றது.

**பகுத்துண்டு வாழ்தல்**

அக்கால மக்கள் ஒருவருக்கொருவர் கொடுத்து உதவி சமூக வாழ்க்கையைச் சிறக்கச் செய்தனர். இல்லாமையால் மன்னிடம் சென்று பரிசில் பெற்ற புலவர் கூடப் பொருள்களைப் பாதுகாத்து பதுத்துண்டு வாழும் பண்புடையவராகக் காணப்பட்டனர். இதனை,

**"தனக்கென வாழா பிறர்க்கு உரியாளன்" (அகம்.54:13)**

என்ற பாடல் அடி உணர்த்துகின்றது. மேலும், நம்முடன் நீண்ட நாட்களாக பழகியவர்கள் விடத்தைக் கொடுத்தாலும் அதை வேண்டாம் என்று கூறாமல் உண்பதுதான் பண்பாடு என்பதை,

**"முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பின்**
**நஞ்சும் உண்பர் நனிநா கரிகர்" (நற்.355)**

என்னும் அடிகள் மெய்ப்பிக்கின்றன. இதே கருத்தை திருவள்ளுவர்,

**"பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க**
**நாகரிகம் வேண்டு பவர்" (குறள். )**

என்ற குறளின் வழி நின்று விளக்கிக் காட்டுகிறார்.

**ஈகை**

ஈயும் நல்லியல்பு உள்ளவர்கள் பிறர்க்கு ஈதலையே ஈகை என்கிறோம். இவ்ஈகை குறித்து ஈகை மனம் உவந்து வழங்கப்படும் பொருள் உதவி, கொடை என்று க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி (புதிய பதிப்பு பக்.171) விளக்கம் தருகின்றது. ஈகை என்பது ஒரு மனிதனின் பண்பை மதிப்பிடுவதில் குறிப்பிடதக்க இடத்தைப் பெறுகின்றது இதனை,

**"வறியவர்க்கு ஒன்ற ஈவதே ஈகைமற்று எல்லாம்**
**குறிஎதிர்ப்பை நீரது உடைத்து" (குறள்.221)**

என்ற குறட்பா வழி அறிந்து கொள்ள முடிகின்றது. வறுமை உடையவர்க்குக் கொடுத்தல் ஈகை என்று சொல்லப்படுகின்றது. ஏனைய கொடைகள் எதிர்பார்த்துக் கொடுப்பன ஆகும் என்று ஈகையின் மதிப்பு பற்றிக் குறிப்பிடுகின்றது.

**ஒழுக்கம்**

ஒழுக்கம் என்னும் உயர்பண்பை ஒருவரையொருவர் வேறுபடுத்த காரணமாக அமைகின்றது. அவ்ஒழுக்கத்தினை எவ்வாறு பாதுகாக்க வேண்டுமென்பதை,

**"பரிந்தோம்பி காக்க ஒழுக்கம் தெரிந்தோம்பித்**
**தேரினும் அ∴தே துணை" (குறள்.132)**

என்னும் குறட்பா வழி அறிய முடிகிறது. மேலும், ஒழுக்க நெறியில் இருந்து தவறியவர்கள் மனித பிறவியில் வாழ்தல் கூடாது.

**"மான மழிந்தபின் வாழாமை முன்னினிதே" (இனியவை நாற்பது.12)**

என்ற அடிகள் வழி ஒருவனுக்கு ஒழுக்கமே உயிர்வாழ காரணமாகும். அத்தகைய ஒழுக்கப் பண்பினை இழந்தவன் வாழ்க்கை வாழ்வதே இழிவான செயலாகும் என்று இனியவை நாற்பதில் கூறப்பட்டுள்ளது.

**முடிவுரை**

பண்டைத் தமிழர்கள் அறத்தொடு பொருந்திய வாழ்வினை மேற்கொண்டனர். திருமண

E-ISSN: 2581-7140

Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

வாழ்வை இல்லறம் என்றனர். கணவனும், மனைவியும் இணைந்து இன்பம் துய்க்கும் அளவில் நில்லாமல் இல்லிருந்து அறங்களை புரிய வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்துகின்றன. இல்லத் தலைவியின் சிறப்பினையும் நாம் பெறுகின்ற செல்வங்களிலேயே சிறந்த செல்வம் குழந்தைச் செல்வத்தை இதன் வழி அறிய முடிகின்றது. ஒருவன் இல்லத்தில் இருந்து பல செல்வங்களைச் சேர்த்து வாழும் வாழ்க்கை எல்லாம் விருந்தினரைப் போற்றி உபசரித்து வாழ வேண்டும் என்று வலியுறுத்துகின்றது. அறநூல் வழி அக்கால மக்களின் வாழ்க்கை முறைகளையும் அறநெறிகளுடன் வாழ்க்கையை அமைத்துக் கொள்ளுதல் சிறப்பிற்கு உரியதாகும் என்பதை அறிய முடிகிறது. உலகம் போற்றும் வள்ளுவரும் அறத்தினை வெறும் ஒழுக்கவியலாக மட்டும் பாகுபாடு செய்யாமல் மாந்தர்கள் ஒருவருக்கொருவர் தம்மால் முடிந்த உதவிகளைப் பிறருக்குச் செய்ய வேண்டும் என்ற உயர்ந்த நோக்கத்தோடு அறத்தைக் கையாண்டுள்ளார். உணவு, உடை, உறையுள் இவற்றைக் கொடுத்து உதவுவதுதான் சிறந்த அறமாகும். தம்மை நாடி வருபவர்களுக்கு இல்லை என்று கூறாமல் முகம் மலர்ந்து தன்னிடம் இருப்பதை பகுத்துண்டு வாழும் பண்புடையவராகக் காணப்பட்டனர். ஒழுக்கம் உயிரினும் மேலாக வைத்து போற்றப்படுகிறது. ஒரு தனிமனிதன் ஒழுக்கத்துடன் வாழும் போது தான் அவனைச் சுற்றியுள்ள சமுதாயம் முன்னேற்றம் அடைய முடியும். இவ்வுலக வாழ்வை முறைப்படி வாழ்தல் சிறந்த அறச்செயலாகப் போற்றப்படுகிறது என்பதை இவ்கட்டுரை வழி அறிந்து கொள்ள முடிகின்றது.

**பயன்பட்ட நூல்கள்**

1. கு.வெ.பாலசுப்பிரமணியன், அகநானூறு, நியூ செஞ்சுரி புத்தக நிறுவனம், சென்னை.
2. மு.வ. திருக்குறள், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1985.
3. இனியவை நாற்பது - க.ப. அறவாணன், தாயமாள் அறவாணன் அறக்கட்டளை, சென்னை.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

# திருக்குறளில் சைவசித்தாந்தம் கூறும் பதி தத்துவம்

## 'Pathi' (Eternal Entity) Philosophy Substantiated by Saiva Siddantha in *Thirukkural*

**திருமதி வானதி பகீரதன்,** சிரேஷ்ட விரிவுரையாளர்,
சுவாமிவிபுலானந்த அழகியற் கற்கைகள் நிறுவகம், கிழக்குப்பல்கலைக் கழகம், இலங்கை.

## Abstract

*The research article shares the concept of 'Pathi' Philosophy as ascribed by the laws of Saiva Siddantha as widely seen in the Universal treatise "Thirukkural". Saiva Tradition holds of the importance on 'Pathi', 'Pasu' and 'Pasam' to the liberation of soul from the clutches of vices in life. Lord Shiva is the eternal power manifests all through compassion; the trust on his existence will lift the one who surrenders to Him. The paper take hold of 'Pathi' Philosophy to cater down the spiritual ideas in the maturation of the spiritual being to the union an individual with Almighty Shiva to attain liberation for to shatter away all karma in life and the related facts as seen in the holy"Thirukkural". Hence, the paper scrutinies the spiritual thoughts of Saiva Siddantha from "Thirukkural".*

**Keywords:** 'Pathi' Philosophy, Substantiation, Saiva Siddantha, *Thirukkural*

சைவ சித்தாந்தங்கள் பதி, பசு, பாசம் எனும் முப்பொருள்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றன. "பதி" என்பது இறைவனைக் குறிக்கும். எல்லா உயிர்களுக்கும் முதலானதும் எங்கும் பரந்ததும் எல்லாம் அறிந்ததுமாகிய பதி பேரறிவுடையது என்பதை சித்தாந்த சாத்திரங்கள் குறிப்பிடுகின்றன. அவை பதியாகிய இறைவனின் இயல்புகளையும், குணங்களையும் விளக்குவதோடு பதி என்பவர் "சிவன்" எனவும் அவர் உலகிலுள்ள அனைத்துப் பொருட்களிலும் உயிர்களுக்குள்ளும் வியாபித்துள்ளார் எனவும் கூறுவதோடு ஒரு கடவுட் கொள்கையையும் விளக்குகின்றது. சைவசித்தாந்தம் பதியின் இயல்புகளை சொரூப இலக்கணம், தடத்த இலக்கணம் என்ற இரு இறை தத்துவங்களாக விளக்குகின்றது. இவ்விரு தத்துவங்களுக்கும் திருக்கறளின் கடவுள்வாழ்த்து எவ்வாறு அடிப்படையாய் அமைந்துள்ளது என்பதைவிளக்குவதாக இக்கட்டுரை அமையும்.

"பதி" தத்துவத்தில் இறைவன் உருவம், குணங்குறி இல்லாதவனாகவும் ஒன்றாகவும் பலவாகவும் என்றும் உள்ளவராகவும் எல்லைக்குள் அடங்காதவராகவும் சிறியதிற் சிறியதாகவும் பெரியதிற் பெரியதாகவும் விளங்குவதாக குறிப்பிடப்படுகின்றது.

**"நிலவும் அருவுருவமின்றிக் குணங்குறிகளின்றி
நின்மலமாய் ஏகமாய் நித்தமாகி அலகிலுயிர்க் குணர்வாகி
அசலமாகி அகண்டி தமாயானந்த உருவாயன்றித்
நிகழ்வது தற்சிவம் என்பர்……" (சிவப்பிரகாசம்)**

இப்பாடல் இறைவனாகிய பதியே மேலானது அதற்கு அருவம், உருவம் என்பன இல்லை. அது நித்தியமானது. அதுவே சிவம் எனக் கூறுகின்றது. திருவருட் பயனும் இறைவன் குணங்குறிகள் அற்றவன் என்பதை விளக்குகின்றது.

**"அருவும் உருவும் அறிஞர்க்கறிவாம்**

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**உருவும் உடையான் உளன்" (திருவருட்பயன், பதிமுதுநிலை 5)**

திருக்குறளில் இறைவனுக்கு எண் குணங்கள் உண்டெனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

**"கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்**
**றாளை வணங்காத் தலை" (திருக்குறள், கடவுள் வாழ்த்து 8)**

எண்குணங்களையுடைய இறைவனின் திருவடிகளை வணங்காதவர்கயுடைய உடல் உறுப்புக்கள் பயனற்றவை என வள்ளுவர் குறிப்பிடும் போது இறைவனுக்கு எண் குணங்கள் உண்டென்பதை வலியுறுத்துகின்றார். சைவ சித்தாந்தம் இறைவனின் எண்குணங்களாக தன்வயத்தனாதல், தூய உடம்பினனாதல், இயல்பாகவே பாசங்களிலிருந்து நீங்குதல், இயற்கை உணர்வினனாதல், பேரறிவுடைமை, வரம்பில்லாத ஆற்றலுடைமை, அருளுடைமை, இன்ப வடிவினனாதல் என எண் குணங்களைக் குறிப்பிடுகின்றது. எனவே சித்தாந்த சாத்திர நூல்களில் விபரிக்கப்படும் எண் குணக் கோட்பாட்டுக்கு வள்ளுவரே வழிகாட்டி என்றால் மிகையாகாது.

இறைவன் நிலம், நீர், காற்று, ஆகாயம்,தீ என்ற ஐம் பூதங்களாகவும் பல கணங்களாகவும் விண்ணாகவும் மண்ணாகவும் சூடாகவும் குளிராகவும் இருப்பதோடு இயற்கைப் பொருட்கள் அனைத்திலும் உள்ளார் என்பதை சித்தாந்தக் கோட்பாடுகள் குறிப்பிட்டுள்ளதோடு இறைவன் பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் என பல்வேறு இறை வடிவங்களை எடுத்தாலும் எல்லாவற்றுக்கும் மூலமாயும் முதல்வனாயும் இருப்பவன் ஒருவனே என்ற ஏகதத்துவக் கொள்கையையும் தமது பாடல்களில் வெளிப்படுத்தியுள்ளமையை அவதானிக்கலாம்.

சைவசித்தாந்த சாத்திர நூலான திருவருட்பயனில் முதலாம் அதிகாரத்தில் பதிமுதுநிலையிலுள்ள பத்துக் குறள்களும் பதியின் இயல்புகளை தெளிவாகக் கூறுகின்றன. கடவுள் ஒருவர் இருக்கிறார் எனவும் அவர் அகரஒலி ஏனைய எழுத்துக்களை இயக்குவது போல உலகை இயக்குபவர் எனவும் அவர் உயிர்களுக்கு அருள் புரியும் கருணையுள்ளவர். பராசக்தியோடு பிரிவறவுள்ளார். பெரியதிற் பெரியதாகவும் சிறியதிற் சிறியதாகவும் உள்ளவர். பேரருளுடைய பதியை அன்பினாலன்றி அடைய முடியாது. ஆன்மாக்கள் ஈடேறும் வகையில் படைத்தல் காத்தல் முதலியவற்றைப் புரிகின்றார். எனவும் வடிவமில்லாத இவர் ஆன்மாக்கள் தம்மை வழிபட்டு உய்யும் வண்ணம் அவரவர்களின் பக்குவத்திற்கேற்ற வகையில் மூவகைத் திருமேனிகளை உடையவர். பதி தனக்கு மேல் ஒரு தலைவன் இல்லாதவர். தேவர்களிலும் காண்பதற்கு அரியவராகவும் விருப்பு வெறுப்பு அற்றவராவும் இருப்பார் எனக் கூறுகின்றது. இதனை,

**"தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத்தரும் சக்தி**
**பின்னமிலான் எங்கள் பிரான்"**
**"பல்லார் உயிருணரும் பான்மையென மேலொருவன்**
**இல்லாதான் எங்கள் இறை"**
**"எங்கும் எவையும் எரியுறு நீர்போல**
**தங்குமவன் தானே தனி" (திருவுருட் பயன் 1ம் அதிகாரம்)**

அகர உயிர் எழத்துக்கள் எல்லாவற்றுக்கும் முதலாக இருப்பது போல இறைவன் எல்லாவற்றுக்கும் முதன்மையாக உள்ளான் என்பதை திருவள்ளுவர் குறிப்பிடுகின்றார்.

**"அகர முதல எழுத்தெல்லாம்**
**ஆதிபகவன் முதற்றே உலகு"**

என்ற குறள் வழி தெளிவுபடுத்தியுள்ளார். அவரின் இக் கோட்பாடு திருவருட் பயனுக்கு "அகர உயிர்மேல் அறிவாகி எங்கும்நிகரில் இறை நிற்கும் நிறைந்து" என்றமுதற் குறளாக அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

சைவசித்தாந்தம் கூறும் பதியின் இயல்புகளுள் தடத்த இலக்கணம் குணங்குறிகளோடு கூடியநிலையாகும். அதாவது பதியாகிய இறைவன் தன்னியல்பான நிலையினின்றும் சாதாரண நிலைக்கு இறங்கி வந்து திருமேனி தாங்கும் நிலையைக் குறிக்கும். பதி ஆன்மாக்கள் மீது கொண்ட அளவற்ற கருணையினால் தன்நிலையிலிருந்து இறங்கி பல்வேறு உருவங்களை எடுத்து அருள் பாலித்தலாகும். ஆன்மாக்களை பாசபந்தத்திலிருந்து விடுவித்தற் பொருட்டு ஐந்தொழில்களையும் செய்வதற்குரிய வகையில் தன் திருவருளையே திருமேனியாகக் கொண்டு உருவம், குணம், குறி, செயல்களையுடைய மூர்த்திகளாக இருப்பது பதியின் இலக்கணமாகும்."பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்,அல்லற் பிறவி அறுப்பானே" என சிவபுராணம் கூறகின்றது. ஆன்மாக்கள் உய்வடைதற் பொருட்டு உயிர்கள் பிறவி எடுக்கப் பல்பிறவித் துன்பங்களைப் போக்குபவராக இறைவன் உள்ளார். இவ்வாறு அல்லலுறும் உயிர்கள் அன்பு வழிபாடு செய்தால் பதி அவர்களை நல்வழிப்படுத்துவார் என சைவசித்தாந்தம் கூறுகின்றது. இத் தத்துவக் கருத்துக்களுக்குத் திருக்குறள் கடவுள் வாழ்த்து அடிப்படையாய் அமைந்துள்ளதைக் காணமுடிகின்றது. இதனை

**"இருள் சேர் இரு வினையும் சேரா இறைவன்**
**பொருள் சேர் புகழ் புரிந்தார் மாட்டு" (திருக்குறள் கடவுள் வாழ்த்து 5)**

பதி விண்ணாகவும் மண்ணாகவும் உயிர்களுக்கெல்லாம் கண்ணாகவும் தாயாகவும் தந்தையாகவும் விளங்கும் பரம்பொருளாகவும் உள்ளது. இறைவன் இந்த அளவினை உடையவன் என நீள அகலங்களால், கால இட எல்லைகளால் அளவிட முடியாதவன் பிரம்மாவும் விஸ்ணுவும் அடிமுடி தேடியபோதும் கண்டறிய முடியாதவனாய் பின்னர் மிகப் பெரியபேருருக் காட்சியாக அவர்களுக்குக் காட்சியளித்தவன். மிகநுண்ணிய வடிவிலும் அவன் இருக்கின்றான் என்ற தத்துவத்தை சைவ சித்தாந்தம் விளக்குகின்றது. இறைவன் ஆன்மாக்களின் பொருட்டு அருள்புரிவதற்காக பல்வேறு வடிவங்களைத்தாங்கி வந்தாலும் அவன் ஒருவனே முழுமுதற்கடவுளாக உள்ளான் என்ற ஏக தத்துவக் கோட்பாட்டினையும் சைவ சித்தாந்தம் குறிப்பிடுகின்றது.

**"பெருமைக்கும் நுண்மைக்கும் பேரருட்கும் பேற்றின்**
**அருமைக்கும் ஒப்பின்மையான்" (திருவுருட்பயன் 1ம் அதிகாரம்)**

இக் கோட்பாட்டு உருவாக்கத்திற்கான அடிப்படைகளை திருக்குறளில் அவதானிக்க முடிகின்றது.

**"தனக்குவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க்கு அல்லால்**
**மனக்கவலை மாற்றலரிது" (திருக்குறள் கடவுள் வாழ்த்து 7)**

இக்குறள் இறைவன் எதனுடனும் ஒப்பிட்டுக் கூறமுடியாத பரம்பொருள் அவனை அடைந்தால் எமது கவலைகள் யாவும் நீங்கி விடும் என்பதையும் விளக்குகின்றது.

இறைவன் பிறப்பு, இறப்பு அற்றவன் வினைகளுக்கு ஆட்படாதவன் ஆனால் உயிர்கள் பல்வேறு பிறப்புக்களை எடுத்து துன்பத்தில் உழல்கின்றன. உயிர்கள் பல்வேறு பிறப்பெடுத்து படிப்படியாக முத்திப்பேற்றை அடைந்து இறைவனின் திருவருளுக்கு உரியதாகும் நிலையை சுத்த அவத்தை என சைவ சித்தாந்தம் கூறுகின்றது.திருக்குறளில் இறைவனது பாதங்களைச் சரணடைந்தவர்கள் பிறவி என்கின்ற பெரிய கடலை நீந்துவர் எனவும் இறைவனது பாதங்களைச் சேராதவர்கள் பிறவிப் பெருங்கடலை நீந்த மாட்டார்கள் எனவும் குறிப்பிடப் பட்டுள்ளது.இதனைபின்வரும் குறட்பாக்கள் மூலம் அறியமுடிகின்றது.

**"பிறவிப்பெருங்கடல் நீந்துவர் நீந்தார்**
**இறைவனடி சேராதார்" (திருக்குறள் கடவுள் வாழ்த்து 10)**
**"அறவாழி அந்தணன் தாள் சேர்ந்தார்க்கு அல்லால்**
**பிறவாழி நீத்தல் அரிது" (திருக்குறள் கடவுள் வாழ்த்து 8)**



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com



மலர்மீது உறைகின்ற இறைவனின் பாதங்களைச் சரணடைந்தவர்கள் இப்பூவுலகில் நீண்டகாலம் வாழ்வர் எனவும் வேண்டுதல் வேண்டாமை இல்லாதவனாகிய பதியின் அடியைச் சேர்ந்தவர்களுக்கு ஒருபோதும் துன்பம் ஏற்பட மாட்டாது எனவும் இறைவனின் பாதங்களைத் தொழாதவர்கள் எத்தகைய கல்விகற்றும் பயனில்லை எனவும் ஐம்பொறிகளின் வழியாக வருகின்ற ஆசை இல்லாதவனாகிய இறைவனின் பொய் அற்ற ஒழுக்கநெறியில் நிற்பவர்களே நீண்டகாலம் வாழ்வர் எனவும் குறிப்பிடும் வள்ளுவரின் தத்துவம் சைவ சித்தாந்த சாத்திர நூல்களுக்கு அடிப்படையாகவும் வழிகாட்டியாகவும் அமைந்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

**உசாத்துணை நூல்கள்**

1. மயில்வாகனம் இரா, சைவசித்தாந்த கைநூல், 1997.
2. இராம சுப்பிரமணியம் வ.த, பன்னிரு திருமுறைத்திறன், தொகுதி II, 1994, தமிழ்நிலையம், சென்னை.
3. இ.ரகுபரன். க, சம்பந்தர் படைப்பாளுமை, 2012, இந்து சமய கலாச்சார அலுவல்கள் திணைக்களம், கொழும்பு.
4. சாந்தி நாவுக்கரசன், தோருமாரிகரன், மூவர் தமிழ்நெறி ஆய்வழ்வர் சிறப்பு மலர், 2013, இந்து சமய கலாசார அலுவல்கள் திணைக்களம், கொழும்பு.
5. திருக்குறள் பரிமேலழகர் உரை, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

# குறளில் இசைக்கருவிகள்

## Musical Devices in Kural

**த.விஜயலட்சுமி,** முழுநேர முனைவர் பட்ட ஆய்வாளர்,
அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரி, சிவகாசி.


## Abstract

*The article presents the role of 'Music' and the musical devices used in Tamil culture and as registered in the holy treatise "Thirukkural". Tamil Language is classified into three major domains; 'music' is the middle asset of Tamil Language and its rich Literature. It quotes the meaning of music and the norms of it. As per the Tamil musical devices record, there was two hundred and fifty instruments in vogue. Only few are existing now. Parai, Kulal, Yaal are the chief devices mainly used in social occasions of Tamil culture. Hence, the paper gathers the evidences and use of such musical devices with reference to additional works and the facts evinced in"Thirukkural".*


**Keywords:** Musical Devices, Kural, Thiruvalluvar, Harmony

**முகவுரை**

முப்பொருளையும் முறை தவறாது முறையிட்டுக் காட்டுவது *திருக்குறள்.* மனித வாழ்வில் உடலோடு கொண்ட உணர்வாக உதிரத்தில் உறைந்து வாழ்வது இசை. குறளில் பறை, யாழ், குழல் போன்ற இசைக்கருவிகள் பற்றிய குறிப்புகள் இடம்பெறுகின்றன. இதனை முகவுரையாகக் கொண்டு இக்கட்டுரை நகர்கின்றது.

**இசைக்கருவிகள்**

இசையை இசைப்பதற்கும், இசையை மேலும் செறிவூட்டவும் பலவகைக் கருவிகள் துணைக் கருவிகளாகப் பயன்படுத்தப்பெற்றன. இசைக்குத் துணைக்கருவிகளாக இருந்த இக்கருவிகளே இசைக்கருவிகள் ஆகும். பல்வகை இசைக்கருவிகளே புதிய பல இசைப்பாணிகளை உருவாக்குவதில் இன்றியமையாத இடத்தைப் பெறுவதாகப் பனிதர் செல்லத்துரை குறிப்பிடுகின்றார். ஐந்நூறு இசைக்கருவிகளுக்கு மேலாக இந்தியாவில் இருக்கின்றனவாம். அவற்றில் தமிழ்நாட்டில், நூல்களில் கூறப்படுவன மற்றும் வழக்கில் உள்ளன ஏறக்குறைய இருநூற்றம்பது இசைக்கருவிகள் என்று தமிழர் தோற்கருவிகள் நூல் உரைக்கின்றது.

**பறை**

பண்டையத் தமிழனின் வாழ்வில் நீங்காது இடம்பெற்ற இசைக்கருவிகளுள் ஒன்று பறையாகும். அரிப்பறை, உடுக்கை எனும் இடைச்சுருங்குபறை, ஏறங்கோள் எனும் ஏறுகோட்டுப்பறை, ஒருவாய்க்கோதை (ஒருகட்பறை), கணப்பறை, கிணை, கோட்பறை, சிறுபறை, தடாரிப்பறை, தண்டோல், தண்ணுமை, திமிலா, துடி, தொண்டகச் சிறுபறை, படலிகை, பறை, பெரும்பறை, பாகம், பேரி, மகுளி, மொந்தை போன்ற பறை வகைகள் இசை நூலான பஞ்ச மரபு வாயிலாகச் சுட்டப்பெறுகின்றன. அவை அமைப்பு மற்றும் ஒலியின் அடிப்படையில் வகைமை செய்யப்பெற்றுள்ளன.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

பொதுவாகப் பறைகள் ஒரு செய்தியினை அறிவிக்க இயக்கப்பெற்றன. நாடு காக்கும் வீரர்கள் பறையொலி கேட்டவுடன் வீரவுணர்வு கொண்டு போர்களம் சென்றனர். போருக்காக அடிக்கப்பெற்ற போர்ப்பறை 'பேரிகை' எனப்பெறுகின்றது. இராமயணம் போன்ற நூல்களில் இவ்விசைக் கருவி குறிப்பிடுகின்றது. காவல் தொழிலில் பறைக்கருவி பெருமளவில் பயன்படுத்தப்பட்டது. நீர்நிலைக் கரையினைக் காத்து நின்ற வீரர்கள் வெள்ளம் வந்ததும் ஊருக்கு அதைப் பறையறைந்து தெரிவித்து, அக்கரையை அடைக்க ஆட்கள் வருமாரு ஏவினர். இச்செய்தியை பரிபாடல் வழி அறியமுடிகிறது.

முல்லை நிலத்தில் திருமண நிகழ்வினை உறதி செய்த நிலையிலும் பறையிசை இயக்கப்பெற்றது. இதனை,

**"செல்லக பாணியேம் என்றார் அறைக**
**என்றார் பாரித்தார் மாணிழை**
**ஆறாகச் சாறு" (கலி.102-34)**

என்று *கலித்தொகை* குறிப்பிடுகின்றது. நல்ல நிகழ்வின் அறிகுறியாகவும் இடர்களைச் சரிசெய்யவும் பறையிசை ஒலிக்கப்பெற்றன. மேலும் உயிர் இழப்புகளின் இல்லங்களிலும் பறையொலி எழுப்பப்பெற்றது. இதனைச் சாப்பறை என்பர்.

**"ஓர்இல் நெய்தல் கறங்க ஓர்இல்" (புறம்.194:1)**
**"சென்றே எறிய ஒருகால் சிறு வரை**
**நின்றே எறிய பறையினை**
**நன்றேகாண் முக் காலைக்**
**கொட்டினுள் மூடிதீக் கொண்டு எழுவர்**
**செத்தாரைச் சாவார் சுமந்து" (நாலடியார்.24)**

இறப்பு நிகழ்ந்த வீடுகளில் சாப்பறையொலி ஒலிக்கப் பெற்றதை அறியமுடிகின்றது. குறளும் இப்பறை பற்றிய செய்தியைக் குறித்துச் செல்கின்றது. நலன் புனைந்து உரைத்தல் என்னும் பகுதியில் தலைவியின் நலனைச் சுட்டுகையில் சாப்பறையினைச் சுட்டுகிறது.

**"அனிச்சப்பூக் கால்களையால் பெய்தாள் நுசுப்பிற்கு**
**நல்ல படாஅ பறை" (குறள்.1115)**

பூக்களிலேயே மிக மென்னையானப் பூ அனிச்சம் பூ. அப்பூவை காம்புகளைக் கிள்ளாமல் அதனோடு சேர்த்துச் சூடிக்கொண்டாள். அதனால் காம்பின் கூடுதல் எடையினைத் தாங்காது அவளது இடை முறியும் நிலை நேரும். அப்பொழுது நல்நிகழ்வின் அறிகுறியாக ஒலிக்கும் நல்ல பறை ஒலிக்காது. சாப்பறை ஒலிக்கும் என்று குறிப்பாகச் சுட்டப்பெறுகின்றது.

தம்மிடம் யாரிடமும் சொல்லாதே என்று நம்பிச் சொல்லப்பட்ட இரகசியங்களை இடந்தோறும் தாங்கிக் கொண்டு சென்று பிறரிடத்துச் சொல்லிப் பரப்பிடுபவர் கயவர். அக்கயவர், அனைவருக்கும் தெரிவிப்பதற்காக ஒலிக்கப்படும் பறைக்கருவியைப் போன்றவர்கள்.

**"அறைபறை அன்னர் கயவர் தாம்கேட்ட**
**மறைபிறர்க்கு உய்த்துரைக்க லான்" (குறள். 1076)**

இங்கு கயவர்களின் செயல் பறையொலி எழுபப்படும் நோக்கச் செயலுக்கு ஒப்புமை செய்யப்பெறுவதை அறியலாம்.

பேசும் கண்களைக் குறிப்பறிதல் அதிகாரத்தில் படம் பிடித்து விளக்குகிறார். பேசாமல் பறையடிப்பது போன்று, தலைவியின் காதலை வெளிப்படுத்தும் கண்களை 'கண் விதுப்பு அழிதல்' என்னும் அதிகாரத்தில் பேசிச் செல்கின்றார். தலைவியின் உள்ளத்தில் உள்ள காதலை ஊரார் அறியா வண்ணம் மறைத்தல் எளிதன்று. தலைவியின் கலங்கிய கண்களும் பொலிவிழந்த முகமும் இளைத்த மேனியும் காட்டிவிடும். குறிப்பாக தலைவியின் கண்ணீர் பலரும் அறிய பறையறைவது போன்று அறிவித்துவிடுமென்று குறள் கூறுகின்றது.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**"மறைபெறல் ஊரார்க்கு அரிதுஅன்றால் எம்போல்**
**அறைபறை கண்ணார் அகத்து" (குறள். 1180)**

இங்கு கண்கள் தலைவியின் காதலை ஊரார்க்கு அறிவிக்கும் பறையாக உரைக்கப்படுகின்றது.

**குழலும் யாழும்**

குழலிசை பற்றிய செய்திகளை சங்க இலக்கியம் சிறப்பாகப் பேசி நகர்கின்றது. இயற்கையோடு இயைந்து வாழ்ந்த பண்டையத் தமிழினம் இயற்கையின் ஒலிக்கு ஏற்ப இசைக்கருவிகளைப் படைத்து, அவற்றின் ஒலிகளை ஒப்புமை செய்தும் உரைத்துள்ளது. விளாம்பழத்தின் ஓட்டில் தோன்றிய துளையின்கண், வெப்பத்தோடு வீசுகின்ற மேல்க் காற்றுப் புகுந்து ஒலியெழுப்புகின்றது. அவ்வொலி ஆயர் இசைக்கும் குழலிசை போன்று இருந்ததுவென ஆக்கள் எண்ணியதாக அகநானூறு குறிப்பிடுகின்றது. இதனை,

**"பொரிஅறை விளவின் புன்புற விளைபுழல்**
**அழல்எறி கோடை தூக்கலின் கோவலர்**
**குழலென நினையும் நீர்இல் நீள்இடை" (அகம்.219:14-16)**

என்ற அடிகளால் அறியலாம். குழலிசையின் பொதுவான பண்பே வருத்தத்தைத் தருவது என்பதை, **"பகலிடைக் கண்ணியன் பைதற் குழலன்" (கலி.101:39)** என்ற அடி சுட்டி நிற்கின்றது. களவு மற்றும் கற்பு வாழ்வின் பல்வேறு நிலைகளில் குழலிசை வெவ்வேறு மன உணர்வுகளை ஏற்படுத்திச் செல்வதை சங்க இலக்கியப் பாக்களில் காணமுடிகின்றது. ஆயர்களின் குழலோசை மாலைப் பொழுதின் வருகையை அறிவிக்கும் தூதுவாகக் குறளால் குறிப்பிடப்படுகின்றது. தலைவன் தலைவி சேர்ந்திருந்த காலங்களில் குழலோசை தேனாக இனித்தது. தலைவனைப் பிரிந்து, பிரிவில் வாடும் தலைவிக்கு அவ்வொலியே அவளை நெருப்பாகச் சுடுகின்றது. அதுவே, தலைவியைக் கொல்ல வரும் படையாகவும் அமைவதையும் அறியமுடிகின்றது.

**"அழல்போலும் மாலைக்குத் தூதுஆகி ஆயன்**
**குழல்போலும் கொல்லும் படை" (குறள்.1228.)**

இக்குறளில் குழலொலி சூழலுக்கு ஏற்ப இனிமையாகவும் நெருப்பாகவும் கொல்லும் படையாகவும் இருப்பதை விளக்கிக்கொள்ள முடிகின்றது.

நரம்புக் கருவியான யாழினை இன்பக் குறியீடாக இலக்கியங்கள் பதிவு செய்கின்றன. யாழிசைக்கு அசுணமா என்னும் விலங்கு தன்னை மறந்து மயங்கும் சிறப்பினை நற்றிணை எடுத்துரைக்கிறது. இரங்கல் உணர்வு வெளிப்படுவதற்கும் யாழே வேறொரு கண்ணோட்டத்தில் உவமையாகிறது. இதனை

**"பிரிவுண்ட புணர்ச்சியுள் புல்லார மாத்திரை**
**அருகுவித் தொருவரை அகற்றலின் தெரிவார்கண்**
**செயநின்ற பண்ணினுட் செவிசுவை கொள்ளாது**
**நயநின்ற பொருள்கொடப் பரியறு நம்பினும்**
**பயனின்று மன்றம்ம காமம்" (கலி 142 : 15)**

என்ற அடிகளால் அறியலாம்.

இத்தகைய பல்வேறு கோணங்களில் பேசப்பெறும் குழலிசையும், யாழிசையும் இனிமை என்பார்கள் மனிதர்கள். அவர்கள் யாரெனில் தங்களது குழந்தைகளின் மழலைச் சொற்களைக் கேளாதவர்கள் என்று குறள் பேசுகின்றது. குழலொழியும் யாலொழியும் மழலைச் சொற்களுக்கு ஒப்பானது அன்று என்று கூறுகிறது.

**"குழலினிது யாழினிது என்பர்தம் மக்கள்**
**மழலைச்சொல் கேளா தவர்" (குறள் 66)**

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

என்ற குறளால் அறியலாம்.

**நிறைவுரை**

தகவலை அறிவிக்கும் பறையிசை போன்று தலைவியின் கண்கள் அவளது காதலை பறை சாற்றுகின்றன. கண்களும் பறையிசையும் நோக்கின் அடிப்படையில் ஒப்புமை செய்யப் பெறுகின்றன.

இரகசியமான மறைபொருளை ஊரார்க்கு அறிவிக்கும் கயவர்களும் பறையிசையும் ஒன்றாகப் பேசப்படுகின்றன. தலைவியின் நலனைப் புகழ்ந்து உரைத்தலில் இறப்பு நிகழ்வின் பொழுது சாப்பறை கொட்டும் வழக்கினையும் குறள் பேசிச் செல்கின்றது.

ஆயர்களின் குழலொலி மாலைப் பொழுதின் வருகையை உரைக்கும் தூதுவனாகவும் இனிமையாகவும் நெருப்பாகவும் கொல்லும் படையாகவும் பிரிவில் வாடும் தலைவிக்கு அமைவதைக் காணமுடிகிறது. குழலிசையும் யாழிசையும் மழலைச் சொற்களுக்கு ஈடாகாது என்பதையும் இக்கட்டுரையின் வாயிலாக அறியலாம்.

**பார்வை நூல்கள்**

1. திருக்குறள் - க.ப. அறவாணன், தாயமாள் அறவாணன் அறக்கட்டளை, சென்னை.
2. கு.வெ.பாலசுப்பிரமணியன், கலித்தொகை, நியூ செஞ்சுரி புத்தக நிறுவனம், சென்னை.
3. கு.வெ.பாலசுப்பிரமணியன், அகநானூறு, நியூ செஞ்சுரி புத்தக நிறுவனம், சென்னை.
4. கு.வெ.பாலசுப்பிரமணியன், பரிபாடல், நியூ செஞ்சுரி புத்தக நிறுவனம், சென்னை.
5. கு.வெ.பாலசுப்பிரமணியன், புறநானூறு, நியூ செஞ்சுரி புத்தக நிறுவனம், சென்னை.
6. கு.வெ.பாலசுப்பிரமணியன், நாலடியார்,நியூ செஞ்சுரி புத்தக நிறுவனம், சென்னை.
7. தமிழர் தோற்கருவிகள் - தமிழ்நேசன், சென்னை.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com


# திருக்குறள் புலப்படுத்தும் செயல்வகைமைகள்

## Types of Action Depicted by *Thirukkural*

**முனைவர் பொ.வெங்கடேஸ்வரி,** உதவிப்பேராசிரியர்,
இளங்கலைத் தமிழ்த்துறை, அய்யநாடார் ஜானகிஅம்மாள் கல்லூரி (தன்னாட்சி), சிவகாசி.

### Abstract

*The paper presents the importance of action as depicted in "Thirukkural". Society is an order created with the setup of formulated responsibilities of work designated in accordance to the talent, capacity and skill of individuals in it. Every one has to realize his/her responsibility to act with the moral ethics laid to it. Such society will be strong and responsible in all cadres. Tamil society is one society; the times of valluvar gave much more importance to action of good deeds. It focuses on the action of the king, minister, merchant and common man with the evidences in Kural. Hence, the paper gathers the evidences and use of such actions in life from "Thirukkural".*

**Keywords:** Types of Action, Depiction, *Thirukkural*, Life Deeds

**முன்னுரை**

*பதினெண்கீழ்க்கணக்கு* நூல்களுக்கும் ஒட்டுமொத்த தமிழ் இலக்கியத்திற்கும் பெருமை சேர்த்த இலக்கியம் திருக்குறளாகும். அறத்துப்பால்,பொருட்பால்,காமத்துப்பால் என மூன்று பால்களும் மானுடம் செழிக்கும் விழுமியங்களைப் பொதிந்து வைத்துள்ளது. தான் தோன்றிய காலத்தின் பிரதிபலிப்பை மட்டுமல்லாது உலகம் உள்ளவரையான மனித சமூகத்தின் பிரதிபலிப்பையும் திருக்குறள் கொண்டிருப்பது வியப்பிற்குரியதே. அறத்தையும் இன்பத்தையும் நிலைநிறுத்துவது பொருளாகும். எனவேதான் வள்ளுவர் அறம், இன்பத்தைவிட பொருளுக்கு 70 அதிகாரங்களை அமைத்துள்ளார். பொருட்பாலில் நிலவுடைமைச் சமுதாயப் படிநிலைகளிலுள்ளார் அனைவருக்குமான செயல்வகைமைகளைப் பட்டியலிட்டுள்ளார். அவ்வகையில் தெரிந்து செயல்வகை, வினை செயல்வகை, பொருள் செயல்வகை, குடிசெயல்வகை என நான்கு அதிகாரங்கள் புலப்படுத்தும் செயல்களின் பரிணாமங்களையும் அச்செயல்களால் விளையும் தனிமனித, சமூக விழுமியங்களையும் ஆய்வதே இவ்ஆய்வுக் கட்டுரையின் நோக்கமாகும்.

**செயல்வகைமைகள்**

சமுதாயத்தில் வாழும் மக்கள் அனைவருக்கும் தன் தகுதிக்கேற்றவாறு அவர்களுக்கென்று கடமைகள் வரையறுக்கப் பெற்றிருந்தன. ஒரு மனிதனின் செயலே அவனது வாழ்வையும் அவனது சுற்றுச்சூழலையும் தீர்மானிக்கின்றன. எனவே சொல்லும் செயலும் இன்றியமையாதனவாகும். நிலவுடைமைச் சமுதாயப் பின்புலத்தில் தோன்றிய திருக்குறள் சமுதாயக் கட்டமைப்பை நிலைநிறுத்தும் அரசர், அமைச்சர், வணிகர், சாதாரண குடிமக்கள் என நால்வகைப் பிரிவினருக்கான செயல்வகைகளை வரையறுத்துள்ளார். பொருட்பாலில்,

**அரசருக்கு – தெரிந்து செயல்வகை**

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**அமைச்சருக்கு – வினை செயல்வகை**
**வணிகருக்கு – பொருள் செயல்வகை**
**குடிமக்களுக்கு – குடி செயல்வகை**

என நான்கு அதிகாரங்களில் செயல்வகைமைகளையும் அச்செயல்கள் யார்யாருக்கானவை என்பதையும் வகைபாடு செய்துள்ளார். அரசன் தன் வலிமையினையும் பகைவரது வலிமையினையும் நிர்வாகத்திறனையும் தெரிந்திருக்க வேண்டும் என்பதாலேயே தெரிந்து செயல்வகையை அரசனுக்கும் நாட்டு மக்களின் பாதுகாப்பும் படைவலிமையும் அமைச்சரின் செயல்வன்மையே நிர்ணயிக்கும் என்பதால் வினைசெயல் வகையை அமைச்சருக்கும் வணிகச் சமுதாயத்தினரால் பொருள்பரிவர்த்தனையும் நாட்டின் செல்வ வளமும் பாதுகாக்கப்படுவதால் பொருள் செயல்வகையை வணிகருக்கும் சமுதாயத்தின் அடிப்படை அலகான குடும்பம் சிறப்பாக இயங்கினால் தான் சமுதாயம் செழுமையுறும் என்பதால் குடிசெயல்வகையை குடிமக்களுக்கும் வகுத்துள்ளமை ஆராய்தற்குரியதாகும்.

**செயலின் தன்மைகள்**

சமுதாயம் படிப்படியான பரிணாம வளர்ச்சி பெற்று அறிவார்ந்த சமூகமாக நிலைபெறுவதற்கு அச்சமுதாயத்தில் சிந்தனை, சொல், செயல் ஆகிய மூன்றும் சிறப்புற்றிருக்க வேண்டும். சிந்தனை தோன்றினால்தான் அதற்கான சொல்லும் செயலும் வெளிப்படும். சிந்தனையே செயலாக வடிவம் பெறுகிறது. மேலும் செயல் என்பது அரிதானது. எல்லோராலேயும் செய்ய முடியாது. அறிவும் வலிமையும் காலமும் அறிந்தோராலேயே சிறந்த செயல்களைச் செய்யமுடியும் என்பதை,

**"சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்**
**சொல்லிய வண்ணம் செயல்" (திருக்குறள். 664)**

என்ற குறள் குறிப்பிடுகிறது. அத்தகைய செயலைச் செய்து முடிப்பதில் கவனமாய் இருந்து துணிந்து செய்ய வேண்டும். செயலைச் செய்யத் தொடங்கிய பின் பின்வாங்கக்கூடாது என்பதையும்

**"எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்**
**எண்ணுவம் என்பது இழுக்கு" (மேலது.467)**

என்ற குறள் புலப்படுத்துகிறது. செயல் வலிமையோடும் காலத்தோடும் தொடர்புடையதாகையால் எவை காலம் தாழ்த்திச் செய்ய வேண்டும் எவை விரைந்து செய்யவேண்டும் என்பதை ஆராய்ந்து செய்ய வேண்டும் என வள்ளுவர் வலியுறுத்துகிறார். செயலானது பொருள், கருவி, காலம், செயல், இடம் ஆகிய ஐந்து கூறுகளை அடிப்படையாகக் கொண்டது. எனவே இவ்வைந்தையும் நுண்ணிதின் உணர்ந்து செயலாற்ற வேண்டும்.

**அரசனின் செயல்திறம்**

அரசன் மக்களுக்குக் கடவுளாக விளங்கினான். அதனால் தான் வள்ளுவர் அரசனை 'இறை' என்று குறிப்பிட்டுள்ளார். அரசன் தன் நாட்டு மக்களைக் காக்கும் கடமைப்பட்டவனாக இருந்தமையால் அவனுக்கு அறிவும் வீரமும் இன்றியமையாத பண்புகளாயின. அறிவில்லாத செயல்புரியும் மன்னன் இகழப்பட்டதை,

**"அறிவறை போகிய பொறியறு நெஞ்சத்து**
**இறைமுறை பிழைத்தோன் வாயிலோயே" (சிலம்பு)**

என்ற அடிகள் தெளிவுபடுத்துகின்றன. அரசன் எக்காலத்திற்கும் பயன்தரும் செயல்களைச் செய்ய வேண்டும் என்று எதிர்பார்க்கப்பட்டது. அமைச்சர், புரோகிதரோடு ஆராய்ந்து தம்முடைய அறிவால் யோசித்துச் செய்தால் அரசனுக்கு முடியாத செயல் என்று எதுவுமில்லை என்று அரசனுக்கான செயல்திறனை,

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**“தெரிந்த இனத்தொடு தேர்ந்துஎண்ணிச் செய்வார்க்கு**
**அரும்பொருள் யாதொன்றும் இல்” (திருக்குறள். 462)**

என்ற குறள் புலப்படுத்துகிறது. அரசன் மிகத்தேர்ந்த செயல்களைச் செய்பவனாக இருந்தால் மட்டுமே மக்களைக் காப்பாற்ற முடியும் என்பதால் அவன் செய்யக்கூடாத செயல்களைச் செய்தாலும் செய்யவேண்டிய செயல்களைச் செய்யாமல் விட்டாலும் அழிவு நேரிடும் என்பதால் அரசனுக்கான செயல்வகை முதலாவதாகவும் முதன்மையானதாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது எனலாம்.

**அமைச்சனின் செயல்வன்மை**

அரசனின் நிர்வாகத்திறனைச் செயல்படுத்தும் வல்லமையும் பொறுப்பும் அமைச்சருக்குரியது. எனவே அமைச்சன் அரசனுக்கும் நாட்டிற்கும் இன்றியமையாதவனாக இருந்தான். ஆராய்ந்து துணிந்து முடிவெடுக்கும் வல்லமை பெற்றவனாக அமைச்சர் விளங்கவேண்டும் என்பதை,

**“சூழ்ச்சிமுடிவு துணிவெய்தல் அத்துணிவு**
**தாழ்ச்சியுள் தங்குதல் தீது” (மேலது, 671)**

என்ற குறளால் அறியலாம். தனது நாட்டின் படைவலிமையையும் பகைவர் நாட்டின் வலிமையையும் உணர்ந்தவனாக விளங்கும் அமைச்சன் எந்தச்சூழலில் எவ்வகையான செயல்செய்தால் நன்மை பயக்கும் என்பதை அறிந்து செய்பவனாக இருக்கவேண்டும். வலிமையோடு இருக்கும்போது போராலும் வலிமை இல்லாதபோது பகைவர்க்குப் பணிந்தும் செயலாற்றும் அமைச்சனின் திறத்தை,

**“உறைசிறியார் உள்நடுங்கல் அஞ்சிக் குறைபெறின்**
**கொள்வர் பெரியார்ப் பணிந்து” (மேலது, 680)**

என்ற குறள் வலியுறுத்துகிறது.

**பொருள்சேர்க்கும் முறைகளும் வகைமைகளும்**

அறத்தோடு பொருள் சேர்ப்பதே இன்பத்தைப் பயக்கும் என்று நம்பப்பட்டது. எனவே அறத்தோடு வராத பொருளைத் தவிர்த்துப் பகைவரின் செருக்கை அடக்கும் பொருளைச் சேர்க்கும் முறையை,

**“செய்க பொருளை செறுநர் செறுக்கறுக்கும்**
**எ஺கதனின் கூரிய தில்” (மேலது, 759)**

என்ற குறள் குறிப்பிடுகிறது. பொருள் அன்பையும் அருளையும் வளர்க்கக்கூடியது. தான் நினைத்த இடத்திற்குச் சென்று செயலாற்றும் திறன் பெற்றமையால் அப்பொருளை வணிகர்கள் அறத்தோடு ஈட்டினால் இன்பம் தானாகக் கிடைக்கும். எனவே பொருளீட்டும் முறைகளை அறிந்து வணிகர்கள் செயல்பட வேண்டும். வணிகர்களின் துலாக்கோல் நேர்மையாக இருந்தால்தான் மன்னனின் அரசும் நேர்மையானதாக இருக்கும் என்பதால்தான் வள்ளுவர் பொருளின் இன்றியமையாமையையும் வள்ளுவர் வலியுறுத்துவதை,

**“ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு எண்பொருள்**
**ஏனையி ரண்டும் ஒருங்கு” (மேலது, 760)**

என்ற குறள்கள் வெளிப்படுத்துகின்றன.

**குடிமக்களும் செயல்திறமைகளும்**

நாடு சிறந்து வியங்க வீடு சிறப்பாக அமைய வேண்டும். ஒவ்வொரு குடியில் பிறந்தவருக்கும் தன் குடியை உயர்த்தும் பொறுப்புண்டு. விடாமுயற்சியோடும் நல்ல அறிவோடும் செயலாற்றுபவரின் குடி உயரும் என்பதை,

**“ஆள்வினையும் ஆன்ற அறிவும் எனஇரண்டின்**
**நீள்வினையால் நீளும் குடி” (மேலது, 1022)**

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

என்ற குறள் உணர்த்துகிறது. தன்குடியை உயர்த்தும் எண்ணம் கொண்டு தன் துன்பத்தையும் காலத்தையும் பார்க்காமல் உழைப்பவருக்குத் தெய்வமும் துணைநிற்கும் என்று கருதப்பட்டது. பிறன்மனை நோக்காதவனைப் 'பேராண்மை' மிக்கவன் என்று குறிப்பிடுவது போல குற்றம் இழைக்காமல் தன் குடியை உயர்த்த நினைப்பவன் 'நல்லாண்மை' மிக்கவன் என்று வள்ளுவர் குறிப்பிடுவதை,

**"நல்லாண்மை என்பது ஒருவற்குத் தான்பிறந்த**
**இல்லாண்மை ஆக்கிக் கொளல்" (மேலது, 1026)**

என்ற குறள் தெளிவுபடுத்துகிறது. குடியை உயர்த்தும் செயல்புரிபவன் அரசனாலும் சமுதாயத்தினராலும் சிறப்புச் செய்யப்பெற்றான். எனவே ஒருவரை உயர்த்துவதும் தாழ்த்துவதும் அவரவர் செய்யும் செயல்களே ஆகும். இக்கருத்தை நாலடியாரும்,

**"நல்நிலைக்கண் தன்னை நிறுப்பானும் தன்னை**
**நிலைகலக்கிக் கீழ்இடுவானும் நிலையினும்**
**மேல்மேல் உயர்த்து நிறுப்பானும் தன்னைத்**
**தலையாகச் செய்வானும் தான்" (நாலடியார். 248)**

என்ற அடிகளில் புலப்படுத்துகின்றன.

**தெளிவில்லாத செயல்களின் விளைவுகள்**

செயலே ஒருவரை இல்லத்திலும் சமுதாயத்திலும் நிலைநிறுத்துகிறது. சமுதாயத்தில் இன்றியமையாத மனிதர்களின் செயல்களே அச்சமுதாயத்தின் உயிர்ப்பைத் தீர்மானிக்கின்றன என்பதால் ஒவ்வொருவரும் கவனமாகச் செய்தல் வேண்டும். தெளிவில்லாத இழிவு தரும் செயல்களை அறிவுடையோர் செய்வதற்கு அஞ்சியுள்ளனர். மேலும் செயலின் முடிவு குறித்து ஆராயாமல் ஒரு செயலைச் செய்தால் அது பகைவர்க்கு வெற்றியை உண்டாக்கிவிடும் என்பதை உணர்ந்து செயலாற்ற வேண்டும் என்பதை,

**"வகையறச் சூழாது எழுதல் பகைவரைப்**
**பாத்திப் படுப்பதோர் ஆறு" (திருக்குறள். 465)**

என்ற குறளால் அறியலாம். எனவே அவசரப்படாமல் தான் செய்யும் செயல்களால் முக்காலத்திற்கும் ஏற்படும் பயன்கள், அதில் வரும் இடையூறுகள் குறித்து ஆராய்ந்து செய்தால் மட்டுமே வாழ்வு உய்வுபெறும் இல்லையெனில் வீடும் நாடும் நலிவுறும் என்று வள்ளுவர் எச்சரித்துள்ளமையை அறியமுடிகிறது.

**அறிவார்ந்த செயல்கள்**

செயல்கள் மனிதனின் ஆளுமையையும் ஆற்றலையும் தீர்மானிக்கின்றன. எனவே அனுபவசாலிகளின் கருத்தை அறிந்தும் செயலை முடிக்கும் வகையறிந்தும் செய்தல் வேண்டும். அறிவுடையோர் ஒரு செயலைச் செய்யும்போதே அதனோடு இன்னொரு செயலையும் முடித்துவிடுவர். எனவே 'ஒரே கல்லில் இரண்டு மாங்காய்' என்று கூறுவதுபோல ஒரே சமயத்தில் இரணடு செயல்களை முடிக்கும் அறிவார்ந்தவரின் செயல்வன்மையை,

**"வினையால் வினையாக்கிக் கோடல் நனைகவுள்**
**யானையால் யானையாத் தற்று" (மேலது, 678)**

என்ற அடிகளில் அறியலாம் தன் வலிமை குன்றும்போது பகைவரைப் பணிந்தாவது தான் கருதிய செயலைச் செய்து முடித்திட வேண்டும். இவ்வாறு காலம், இடம், வலிமை ஆகியவற்றை அறிந்து செய்யும் செயல்களே அறிவார்ந்த செயல்கள் எனப்பட்டது.

**முடிவுரை**

அறிவின் வெளிப்புற அடையாளம் செயலாகும். செயல்களாலேயே ஒரு மனிதன் மதிப்பிடப்பெறுகிறான். சமுதாயத்தில் ஒவ்வொரு மனிதருக்கும் கடமைகள் இருந்தன. அக்கடமைகளைத் தம் அறிவுத்திறத்தால் சிறப்பான செயல்களாக உருமாற்றியவர்கள் வெற்றி

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

கண்டனர். மன்னராட்சிக் காலத்தில் எழுந்த திருக்குறள் நாடாளும் மன்னனுக்கும் நாட்டை நிர்வகிக்கும் அமைச்சருக்கும் பொருட்செல்வத்தை உருவாக்கும் வணிகருக்கும் குடியை உயர்த்தும் குடிமக்களுக்குமான செயல்வகைமைகளையும் அச்செயல்கள் சிறப்பாகச் செய்யப்படுவதற்கான வழிமுறைகளையும் புலப்படுத்தியுள்ளது.

**துணைநூற்பட்டியல்**

1. புலியூர்க்கேசிகன் (ப.ஆ.,) திருக்குறள் பரிமேலழகர் உரை, பூம்புகார் பதிப்பகம், ஆறாம்பதிப்பு, 1993.
2. க.ப. அறவாணன் (உ.ஆ.,) நாலடியார், தமிழ்க்கோட்டம், சென்னை, முதற்பதிப்பு, 2010.
3. ஞா.மாணிக்கவாசகன் (உ.ஆ.,) சிலப்பதிகாரம் தெளிவுரை, உமா பதிப்பகம், சென்னை, 2001.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies 
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140

Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

# வள்ளுவத்தின் வழி குற்றமும் தண்டனையும்

## Crime and Punishment in Terms of Valluvam

**வீ.வெள்ளைத்துரைச்சி,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
எஸ்.எ.ஃ.ப்.ஆர் மகளிர் கல்லூரி, சிவகாசி.

## Abstract

*The paper presents the way of identifying crime and the moral punishment given to the criminal as per the light of "Thirukkural". Society ought to be considered developed when the crime rate is in control. Tamil society is a highly objective one in dealing with crime and the punishment given to the culprit. "Thirukkural" considers stealing, lust on other women, liquor taking, prostitution, non-vegetarianism as severe crimes and offenses. It has its norms and punishment to quit away such vehement crimes. For most of the cruel crimes capital punishment was given to the criminal. Hence, the paper gathers the quotes and use of such meanings to prove the mode of punishment from the "Thirukkural".*

**Keywords:** Crime and Punishment, Valluvam, Tamil Society

**முன்னுரை**

பண்டைத் தமிழ் மக்களின் நாகரிகத்தையும், தொன்மை, பெருமை முதலியவற்றையும் சித்தரிக்கும் கருத்துக் கருவூலங்களாகக் கொண்டு திகழ்வது செவ்விலக்கியங்கள் ஆகும். இச்செவ்விலக்கிய நூல்களில் ஒன்று திருக்குறள் ஆகும். இந்நூல் மனித உறவுகள், உணர்வுகள், சமூக இணக்கங்கள், அற விழுமியங்கள் ஆகியவற்றை எக்காலத்திற்கும் பொருந்தும் வகையில் மொழிகின்றது. இவற்றின் பாடுபொருள் அறம், பொருள், இன்பம், வீடு ஆகும். சமுதாயத்தில் உறுப்பினராக வாழும் மக்கள் தங்களது வலிமையைப் பிறருக்கு எதிராகப் பயன்படுத்தும்போது அது குற்றமாகக் கருதப்படுகிறது. அவ்வாறு செய்த குற்றத்திற்கு தண்டனையும் வழங்கப்பட்டது. தங்களுடைய கடமையிலிருந்து தவறிய மக்களும் குற்றம் புரிந்தவர்களாகக் கருதப்பட்டு தண்டனை வழங்கப்பட்டது. ஒரு காலத்தில் குற்றமாகக் கருதப்பட்ட செயல்கள் மற்றொரு காலத்தில் குற்றமாகக் கருதப்படாமல் இருக்கலாம், ஒரு காலத்தில் குற்றமாகக் கருதப்படாத செயல்கள் மற்றொரு காலத்தில் குற்றமாகக் கருதப்படலாம். ஆக குற்றம் என்பது அவ்வவ் காலத்தில் வாழும் இலக்கியங்கள் காலத்தைக் காட்டும் கண்ணாடி, அதனால் திருக்குறளில் பதிவு செய்யப்பெற்றுள்ள குற்றங்களும், அதற்குரிய தண்டனைகளும் அக்காலத்தில் குற்றங்கள் நடைபெற்றன எனவும், அதற்கு தண்டனை வழங்கப்பட்டன என்பதையும் உறுதி செய்கின்றன. திருக்குறளில் இடம்பெற்றுள்ள குற்றத்தையும், தண்டணையும் ஆராய்வதாக இவ்வாய்வுக் கட்டுரை அமைகின்றது.

**கொடியார்களும் அவர்களுக்கு வழங்கும் தண்டனையும்**

குறளில் வரும் கொடியார் என்ற சொல்லுக்குப் பரிமேலழகர் "கொடியவர் என்றது தீக்கொளுவுவார், நஞ்சிஇடுவார், கருவிற்கொல்வார், கள்வர், ஆறலைப்பார், சூறை கொள்வார், பிறனில் விழைவார் என்றிவர் முதலாயினர்"[1] என்று பொருள் விளக்கம் தருகின்றார்.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

இக்குற்றங்களை செய்தவர்க்கு கொலைத் தண்டனை அதாவது மரண தண்டனை உண்டு என்பதை குறள் உறுதி செய்கின்றது. இக்குற்றங்கள் மன்னிக்கப்படாத குற்றங்களாகக் கருதப்பட்டுள்ளது. அதனால் இக்குற்றங்களுக்கு மரண தண்டனையே தீர்வாக அமைந்துள்ளதை,

**"கொலையின் கொடியாரை வேந்துஒறுத்தல் பைங்கூழ்**
**களைகட் டதனொடு நேர்" (குறள்.550)**

என்ற குறட்பா விளக்குகின்றது. அதாவது கொடிய செயல்களைச் செய்பவர்களை அரசன் மரண தண்டனை கொடுத்து தண்டிப்பது நல்லவர்களைக் காப்பதற்கே. அது ஒரு உழவன் களையை நீக்கிப் பயிர்களைக் காத்தலுக்கு ஒப்பாகும்.

**பிறன்மனை நயத்தல்**

பிறரது மனைவியை மனத்தாலும் அடைய விரும்புதல் பெருங்குற்றமாகும். புராணக்காலங்களிலிருந்தே இது குற்றமாகக் கருதப்பட்டுள்ளது. சான்றாக. இந்திரன் கௌதம முனிவரின் உருவம் கொண்டு, அவரது மனைவியான அகலியையுடன் இன்பம் துய்க்கின்றான். இதனைக் கண்ட கௌதம முனிவர் இந்திரன் தேவர் உலகத்திற்கு தலைவனாக இருந்தாலும் கூட அவனது உடம்பெல்லாம் பெண்குறி ஆகுக என சாபம் விடுக்கின்றார். அதனால் தேவருலகமாக இருந்தாலும் சரி பூலோகமாக இருந்தாலும் சரி ஏழேழ் உலகிலும் பிறன்மனைவியை விரும்புதல் குற்றமாகும். அதற்கு கடுமையான தண்டனை வழங்கப்பட்டுள்ளதையும் அறிகிறோம். வள்ளுவரும் பிறருடைய மனைவியை விரும்புபவரிடம் பகை, பாவம், அச்சம், பழி என்ற நான்கு குற்றங்களும் நீங்காமல் நிற்கும் என்பதை,

**"பகைபாவம் அச்சம் பழியென நான்கும்**
**இகவாவாம் இல்இறப்பான் கண்" (குறள்.146)**

என்ற குறட்பா வலியுறுத்துகின்றது. பிறன்மனைவியை விரும்புவர்க்கு மரண தண்டனையைக் கூறுகிறார். சிலப்பதிகாரத்தில், துறவி என்று கூறிக்கொண்டு ஒழுக்கக்கேடான செயல்களைச் செய்பவர்கள், கணவனுக்கு துரோகம் செய்யும் மனைவியர், மன்னனுக்கு துரோகம் செய்யும் அமைச்சர்கள், பிறருடைய மனைவியை அடைய விரும்புபவர்கள் என இவர்கள் அனைவரையும் சதுக்கபூதம் என்னும் பூதம் அறைந்துண்ணும் எனக் கூறுவதை,

**"தவம் மறைந்து ஒழுகும் தன்மையிலாளர்,**
**அவம் மறைந்து ஒழுகும் அலவற்பெண்டிர்,**
**அறைபோகு அமைச்சர் பிறன்மனை நயப்போர்,**
**பொய்க்கரியாளர் புறங்கூற்றாளர் என்**
**கைக் கொள் பாசத்துக் கைப்படுவோர்' என**
**காதம் நான்கும் கடுங் குரல் எடுப்பி,**
**பூதம் புடைத்து உணும் பூத – சதுக்கமும்" (சிலம்பு. இந்திர காதை: 128-134)**

என்ற அடிகள் புலப்படுத்துகின்றன. கம்ப இராமாணயத்தில் இராவணனும், அவனது குலமாகிய அரக்கர் குலமும் அழிவதற்குக் காரணம் பிறருடைய மனைவியை அடைய விரும்பியதே ஆகும். சங்க காலத்தில் பொற்கைப்பாண்டியன் காவலின் பொருட்டு கணவன் இல்லாத வீட்டில் கதவைத் தட்டியதால், அது தனக்கு இழுக்கு நேர்ந்துவிட்டதோ என எண்ணி பிறரது வீட்டின் கதவைத் தட்டிய தன் கையை துண்டித்து தனக்கு தானே தண்டனை வழங்கினான். இன்று இந்தியத் தண்டனைச் சட்டம், 497-ஆம் பிரிவு, பிறருடைய மனைவியைப் புணர்தல் என்னும் குற்றத்திற்கு ஐந்து ஆண்டுகள் வரை சிறைக்காவல் அல்லது அபராதம் அல்லது இரண்டு தண்டனையாக விதிக்கப்படும் என்று கூறுகிறது. மேலும் மனைவியை குற்ற உடந்தையாகக் கருதித் தண்டனைக்கு உள்ளாக்க இயலாது என்கிறது. ஆனால் இன்று ஒன்றிரண்டு வருடங்களில் பிறர்மனைவியை விரும்புதல் குற்றமாக கருதப்படவில்லை. அந்த ஆணும் பெண்ணும் விருப்பம் கொண்டால் இணைந்து வாழலாம் எனச் சட்டம் கூறுகின்றது.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

ஏனென்றால் இப்பொழுது இருக்கும் மனிதர்கள் மனைவியையும், கணவனையும், குழந்தைகளையும் கொன்றுவிட்டு தனக்கு விருப்பமானவர்களுடன் வாழ நினைப்பதால், குற்றங்கள் சமுதாயத்தில் பெருகிக் காணப்படுகின்றன. இதனைத் தவிர்ப்பதற்கே அரசாங்கம் இந்தச் சட்டத்தைக் கொண்டு வந்தது. இவ்வாறு சங்க காலத்திலிருந்து இன்று ஒன்றிரண்டு வருடங்களுக்கு முன் வரை பிறரது மனைவியை விரும்புதல் குற்றமாகவே கருதப்பட்டுள்ளது. அதற்கு தண்டனையும் வழங்கப்பட்டுள்ளது என்பதைத் தக்க சான்றுகளுடன் அறியமுடிகின்றது.

**களவாடுதல்**

பிறர் பொருளை வஞ்சித்துக் களவாடுதல் குற்றமாகும். மணிமேகலையும் உடலில் தோன்றும் குற்றங்களை கூறுமிடத்து, **“கொலையே களவே காமத் தீவிழை உலையா உடம்பில் தோன்றுவ மூன்றும்” (மணிமேகலை. ஆபுத்திரன் நாடு அடைந்த காதை – 125-126)** என வரும் அடிகள் கொலை, களவு, காமம் ஆகிய மூன்றும் உடம்பில் தோன்றும் குற்றங்களாக வரிசைப்படுத்துகின்றது. வள்ளுவர்,

**“கள்வார்க்குத் தள்ளும் உயிர்நிலை கள்ளார்க்குத்**
**தள்ளாது புத்தேள் உலகு.” (குறள்.290)**

என்ற குறட்பாவில் பிறர் பொருளைத் திருடும் கள்வர்க்கு அரசனின் தண்டனையால் உயிர் நீங்கும் என்பதைத் தெளிவாகக் காட்டுகிறது. சிலப்பதிகாரத்தில் கோவலன் சிலம்பைத் திருடினான் எனக் கருதியே பாண்டியமன்னன் அவனுக்கு கொலை தண்டனை விதித்தான். கோவலன் கொலையுண்டதை அறிந்த கண்ணகி பாண்டிய மன்னன், **“கள்வனைக் கோறல் கடுங்கோல் அன்று” (சிலம்பு.வழக்குரைக் காதை – 64)** என்று கூறுகிறாா். இவ்வடிகள் களவு செய்பவர்களுக்குக் கொலைத் தண்டனை விதித்தல் தவறு இல்லை என்று கூறுகிறது. அன்றிலிருந்து இன்று வரை பிறர் பொருளைத் திருடும் செயலான களவு குற்றமாகவே கருதப்படுகிறது.

**பரத்தையர் ஒழுக்கம்**

பரத்தையர் என்பவர்கள் பணம், பொருளுக்காக பிற ஆடவர்களுடன் இன்பம் துய்ப்பவர்கள். இவர்கள் அன்பு என்பது பற்றித் தெரியாதவர்கள். பரத்தமை ஒழுக்கத்தை இன்று விபச்சாரம் என்பர். சங்க இலக்கியத்தைப் படைத்த சங்க இலக்கியச் சான்றோர்களால் பரத்தமை ஒழுக்கம் கடிந்து உரைக்கப்படவில்லை. ஆனால் சங்க மருவிய காலத்தில் எழுந்த நூலான *திருக்குறள்* பரத்தமை ஒழுக்கத்தை மிகவும் சாடுகின்றது. பொருளையே விரும்பும் விலை மகளிரைத் தழுவுதல், பிணம் எடுப்பவர் பொருளுக்காக இருட்டறையில் முன்னறியாதவரின் பிணத்தைத் தழுவுவதற்குச் சமம் எனவும் வரைவின் மகளிரின் மென்மையான தோளைத் தழுவுவது அறிவில்லாதவர்களாகிய கீழ்மக்கள் அழுந்தும் நரகத்திற்குச் செல்வர் என்பதை,

**“வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்**
**பூரியர்கள் ஆழும் அளறு” (குறள் - 919)**

என்ற குறட்பா விளக்குகின்றது. அதனைப்போன்று பரத்தமை ஒழுக்கம், கள்ளுண்ணல், சூது ஆகிய மூன்று பழக்கத்தை உடையவர்களிடம் திருமகள் விலகிக்கொள்வாள். அவர்கள் மிகுந்த துன்பத்தை அடைவார்கள் என்பதை,

**“இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்**
**திருநீக்கப் பட்டார் தொடர்பு” (குறள் - 920)**

என்ற குறட்பா நிறுவுகின்றது. தொல்காப்பியர் நால்வகை நிலத்தாருக்கும் பரத்தமைப் பிரிவு உண்டு என்கிறார். ஆனால் கால எல்லை குறிப்பிடப்படவில்லை. இன்று சமுதாயத்தில் பரத்தமை ஒழுக்கம் நல்லோர்களால் ஒதுக்கப்பட்டும் அல்லோர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டும்

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

இருக்கின்றதென்பதனை அறியலாம். திருக்குறளுக்கு உரை எழுதிய பரிமேலழகர் பரத்தமை ஒழுக்கம் மேற்கொள்பவர்களுக்கு மரணதண்டனை உண்டு என்பதை வள்ளுவர் கூறுவதாகக் கூறுகின்றார்.

**கள்ளுண்ணல்**

'மது நாட்டுக்கும் வீட்டுக்கும் கேடு' என்ற வாசகத்திற்கு ஏற்ப இன்றைய சமுதாயத்தைப் பெரிதும் சீர்குலைத்துக் கொண்டிருப்பது மதுப்பழக்கமாகும். கள்ளுண்ணல் என்பது சங்ககாலத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒன்றாக இருந்தது. ஆனால் சங்கமருவிய காலத்தில் தோன்றிய திருக்குறள் கள்ளுண்ணலைப் பெருங்குற்றமாகக் கருதுகின்றது. இதனை,

**"நாண்என்னும் நல்லாள் புறங்கொடுக்கும் கள்ளென்னும்**
**பேணாப் பெருங்குற்றத் தார்க்கு" (குறள் - 924)**
**"ஈன்றாள் முகத்தேயும் இன்னாதால் என்மற்றுச்**
**சான்றோர் முகத்துக் களி" (குறள் - 923)**

என்கின்ற குறட்பாக்கள் எடுத்தியம்புகின்றன. நாணம் என்ற குணத்தை கொண்டிருப்பவர்கள் கள்ளை உண்ணுதல் என்னும் பெருங்குற்றத்தைச் செய்யமாட்டார்கள். கள் உண்பவனைப் பத்து மாதம் சுமந்து பெற்ற தாயும் வெறுப்பாள். தன் தாயே குழந்தையை வெறுக்கும் பட்சத்தில் சான்றோர்களால் அவன் பெரிதும் ஒதுக்கப்பட்டவனாகவே கருதப்படுவான். இக்கருத்தினைத் தென்றலின் சுவடுகள் என்ற நூல், மது அருந்திய கணவன் நமது நாட்டின் பண்பாட்டுச் சின்னமான தாலியைக், குடிக்க காசு இன்றி மனைவியின் கழுத்திலிருந்து அறுத்தான் என்பதை,

**"குடிபோதையில்**
**அறுத்தான்**
**கட்டியதாலி" (தென்றலின் சுவடுகள்,ப-15)**

என்ற கவிதை வரிகளின் வாயிலாகப் புலப்படுத்துகின்றது. மதுவால் இன்று நாட்டின் ஒழுக்கம் சீர்கெட்டு தீயசெயல்கள் அதிகரித்து வருகின்றன.

**புலால் உண்ணல்**

ஆதிகாலந்தொட்டே வேட்டையாடிய விலங்குகளின் இறைச்சியை உணவாக உட்கொள்ளும் பழக்கம் மனிதர்களிடம் இருந்த வருகின்றது. இவ்வாறு உயிர்களைக் கொன்று அவற்றிலிருந்து பெறப்படும் இறைச்சி அசைவ உணவு அல்லது புலால் உணவு எனப்படுகிறது. புலால் உணவானது வேட்டையாடுவதன் மூலமும் வீட்டில் வளர்க்கப்படும் உயிரினங்களிலிருந்தும் கிடைக்கின்றது. கடலிலும் காட்டிலும் வேட்டை மேற்கொள்ளப்படுகின்றது. மேலும் இவை சுடுதல், பொரித்தல் எனப் பல வகைகளில் பக்குவப்படுத்துப்பட்டு உணவாக உட்கொள்ளப்படுகிறது.

சங்ககால மக்கள் புலால் உணவினை விரும்பி உண்டனர். ஆனால் சங்கமருவிய காலத்தில் புலால் உண்பதைக் குற்றமாகக் கருதினர். இதனை வள்ளுவர்,

**"உண்ணாமை வேண்டும் புலால் பிறிதொன்றன்**
**புண்அது உணர்வார்ப் பெறின்" (குறள் - 257)**
**"உண்ணாமை உள்ளது உயிர்நிலை ஊன்உண்ண**
**அண்ணாத்தல் செய்யாறு அளறு" (குறள் - 255)**

என்கின்ற குறட்பாக்களின் மூலம் எடுத்தோதுகின்றார். ஊன் என்பது மற்றொரு உயிரின் புண் எனவும், அதை உண்பதைத் தவிர்க்க வேண்டும் எனவும் கூறுவதுடன், புலால் உண்ணாதிருத்தலே அறநிலை உடைய வாழ்வாகும். அந்நிலை கெடுமாறு புலால் உண்பவனின் தலை துண்டிக்கப்படுதல் போன்ற துன்பத்தை அடைவர் என்று வள்ளுவர்

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

குறிப்பிடுகின்றார். வைணவ சமயத்தினர் புலால் உண்பதனை குற்றமாகக் கருதி அதனை அறவே வெறுக்கின்றனர்.

**முடிவுரை**

பரிமேலழகர் தீக்கொளுவுவார், பிறருக்கு நஞ்சினை கொடுப்பவர்கள், கருவினைச் சிதைத்தப்பவர்கள், கள்வர், ஆறலைப்பார், சூறை கொள்வார், பிறருடைய மனைவியை விரும்புவர்கள் போன்ற மன்னிக்க முடியாத குற்றங்களைச் செய்பவர்களுக்கு மரண தண்டனையே தீர்வு என்று கூறியிருப்பதனை ஆய்வின் மூலம் கண்டுரைக்கப்பட்டுள்ளது. கள்ளுண்ணல் பழக்கம் உள்ளவனை பெற்ற தாயும் வெறுத்து ஒதுக்குகின்றாள் என்ற குறிப்பினை உரிய சான்றாதாரங்களின் வாயிலாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது. புலால் உண்ணல் என்பது பிற விலங்குகளின் புண்களை உண்பதற்குச் சமம் என்று வள்ளுவர் குறிப்பிட்டிருக்கும் உவமை, புலால் உணவை உண்பவர்களுக்கு ஒரு சாட்டையடி போன்று உள்ளமையை அறிய முடிகின்றது. சமுதாய ஒருமைப்பாட்டைச் சீர்குலைக்கக்கூடிய மேற்கூறிய செயல்பாடுகள் யாவற்றையும் வள்ளுவர் மிகப்பெரும் குற்றமாகவும், அக்கொடிய செயல்களை மேற்கொண்டால் உரிய தண்டனையிலிருந்து தப்ப முடியாது என்றும் கூறியிருப்பதனை மேற்கூறிய சான்றுகள் அனைத்தும் தெளிவாக நிரூபணம் செய்கின்றன.

**சான்றெண் விளக்கம்**

1. இலக்கியங்களில் சட்ட நெறிகள், முத்துவேலு.மு, ப.80-81.

**பார்வை நூல்கள்**

1. திருக்குறள், அ. மாணிக்கம், தென்றல் நிலையம்.
2. சிலப்பதிகாரம், ஞா.மாணிக்கவாசகன், மணிவாசகர் பதிப்பகம்.
3. மணிமேகலை.
4. தென்றலின் சுவடுகள் (கவிதைத் தொகுப்பு).
5. இலக்கியங்களில் சட்ட நெறிகள், மு.முத்துவேலு.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140

Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

# திருக்குறளில் இல்லறமும் துறவறமும்

## Domestic Life and Renunciation in *Thirukkural*

**முனைவர் இரா.ஜீவாராணி,** உதவிப்பேராசிரியர்,

அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரி (தன்னாட்சி), சிவகாசி.

## Abstract

*The paper provides the theme of 'domestic life' and 'renunciation' as seen in the holy treatise "Thirukkural'. Family life and renunciation are two poles but valluvam praises of the both to be in single form in family life. The paper evinces the details regarding the leader of the family, the home maker, good children, healthy practices of harmonious life, cherishing relationship, parental-children relationship, family discipline and about renunciated men. The virtues of them are deciphered in to bring a lucid understanding on the elegance of "Thirukkural" and its impact on life in Tamil society. Hence, the paper gathers the related facts that support the proposed concept from "Thirukkural".*

**Keywords:** Domestic Life, Renunciation, *Thirukkural*, Tamil culture

**முன்னுரை**

நம் வாழ்க்கையானது இல்லறத்தில் தொடங்கி, துறவறத்தில் முடிகிறது. இந்த இல்லறம் துறவறம் என்ற இரண்டிலுமே அறப்பண்பு என்பதே இழையோடிக் கொண்டிருக்கிறது.

**"அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றின்**
**போஒய்ப் பெறுவது எவன்" (திருக்.46)**

என்ற குறளில், இல்வாழக்கையைச் செம்மையாக நடத்திச் சென்றாலே போதும். அதுவே நம்மை மோட்சம், சொர்க்கம், இன்பம், வீடுபேறு, மகிழ்ச்சி, நல்வாழ்வு என்று அனைத்தும் கிடைத்துவிடும். ஆகவே நாம் துறவறத்தை நாடிச் செல்ல வேண்டிய அவசியமில்லை என்று வள்ளுவர் கூறியுள்ளார்.

**இல்லறம் - விளக்கம்**

இல்லறம் என்பதற்கு, பேராசிரியர் மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்கள் மனோன்மணியம் என்னும் நாடகத்தில், **"தனக்கென வாழும் தனி மிருகமாக விளங்கும் மனிதனின் மனக்கோன் நிமிர்த்து பிறரது இன்பதுன்பங்களைத் தனதாக ஏற்கும் மனநிலை பெற்றுத் தான எனும் நினைப்பும் தனக்கென இச்சையும் இன்றி வாழப் பயிற்சி தரும் பள்ளிக்கூடமே இல்லறம்"** என்று விளக்கம் கூறியுள்ளார்.

இல்லம் என்பது கணவனும் மனைவியும் சேர்ந்து வாழும் இடம். அது மட்டுமின்றி கணவன் மனைவி இருவரின் உறவுக்கான களம். இல்லத்தில் இருந்து தமக்கும் பிறருக்கும் செய்யும் அறங்களே இல்லத்திற்கான அறம். அதுவே இல்லறம் ஆகும்.

**"அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை அ∴தும்**
**பிறன் பழிப்பது இல்லாயின் நன்று" (திருக்.493)**

என்ற குறளின் வாயிலாக, பிறன் பழிக்காத வாழ்க்கையை வாழ்தலே இல்வாழ்க்கையின் அறம் ஆகும் என்பதனை அறிந்து கொள்ள முடிகிறது.

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**இல்லற உறவுகள்**

இல்லற வாழ்வில் தாய், தந்தை, மகன், மகள் என்னும் உறவுகளே முதன்மையாகக் கருதப்படுகின்றன. இவர்களின் உறவுநிலையை,

- தாய், தந்தை, குழந்தைகள் உறவு
- தந்தை மகன் உறவு
- தாய் மகன் உறவு

என்ற படிநிலைகளில் காணலாம்.

**தாய், தந்தை, குழந்தைகள் உறவு**

தாயும் தந்தையும் தன் குழந்தைகள் உண்ட உணவினை அமுதமாகவும் அக்குழந்தைகள் தன்னைத் தீண்டியவுடன் உடலுக்கு இன்பம் அளிப்பதாகவும், அக்குழந்தைகள் பேசிய மொழிகள் செவிக்கு இன்பமாகவும் இருந்தது என்பதனை,

**"அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்**
**சிறுகை அளாவிய கூழ்" (திருக்.64)**
**"மக்கள் மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றவர்**
**சோற்கேட்டல் இன்பம் செவிக்கு" (திருக்.65)**

என்ற குறள்களின் வாயிலாக அறிந்து கொள்ள முடிகிறது.

**தந்தை மகன் உறவு**

தந்தை மகன் உறவு நிலையைப் பற்றி வள்ளுவர்,

**"தந்தை மகற்காற்று நன்றி அவையத்து**
**முந்தி இருப்பச் செயல்" (திருக்.67)**
**"மகன் தந்தைக் காற்றும் உதவி இவன் தந்தை**
**என்நோற்றான் கொல்லெனும் சொல்" (திருக்.70)**

என்ற குறட்பாக்களின் வாயிலாகத் தந்தை மகனுக்கு ஆற்றும் நன்றியும், மகன் தந்தைக்கு ஆற்றும் உதவியும் பற்றிக் கூறியிருப்பதன் வாயிலாக அறிந்து கொள்ள முடிகிறது.

**தாய் மகன் உறவு**

தாயின் பசியைப் போக்குவதை விட சான்றோர் பழிக்கு ஆளாகாமல் இருப்பதை சிறப்பு என்றும், தன் மகனைச் சான்றோன் என்று பிறர் சொல்லக் கேட்டவுடன் அத்தாய் ஈன்ற பொழுதினை விட மிகவும் மகிழ்ச்சி அடைகின்ற நிலையைப் பற்றியும் வள்ளுவர்,

**"ஈன்றாள் பசி காண்பான் ஆயினும் செய்யற்க**
**சான்றோர் பழிக்கும் வினை" (திருக்.187)**
**"ஈன்றாள் முகத்தேயும் இன்னாதால் என்மற்றுச்**
**சான்றோர் முகத்துக் களி" (திருக்.923)**

என்ற குறட்பாக்களின் வாயிலாக உணர்த்துகின்றார். இதன் மூலம், தாய் மகன் உறவு நிலை பற்றி அறிந்து கொள்ள முடிகிறது.

**இல்லற ஒழுக்கம்**

இல்லற ஒழுக்கமே இல்லாளின் ஒழுக்கமாகும். ஏனெனில் இல்லற வாழ்வில் முதலிடம் வகிப்பவள் இல்லாளாகிய மனைவியே. இவள் தான் இல்லற வாழ்வில் முதலிடம் வகிக்கின்றாள். இவள் தன்னையும் காத்துக் கொண்டு, தன் கணவனையும் பேண வேண்டும். அதுமட்டுமின்றித் தன் குடிக்கும் புகழ் சேர்த்துத் தன் குடும்ப வருமானத்திற்கு ஏற்றபடி செலவினைச் செய்து வாழ வேண்டும். ஆகவே தான் பெண் இன்றி எதுவும் நடக்காது என்று கூறுவர். இதனை,

**"தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற**

E-ISSN: 2581-7140
Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

**சொற்காத்து சோர்விலாள் பெண்" (திருக்.57)**
**"மனைத்தக்க மாண்புடையள் ஆகித் தற்கொண்டான்**
**வளத்தக்கான் வாழ்க்கை துணை" (திருக்.51)**

ஏன்ற குறள்களின் வாயிலாக அறிந்து கொள்ள முடிகிறது.

**துறவறம்**

இல்லற பற்றுக்களையும் உலக வாழ்வின் மேல் உள்ள ஆசைகளையும் விடுத்து, ஐம்புலன்களையும் அடக்கித் தவம் மேற்கொள்வதே துறவு வாழ்வாகும். இத்தனைய துறவு வாழ்க்கை வாழ்பவர்கள் ஒரு வேளை மட்டும உணவு உட்கொண்டு, காய் கனி கிழங்குகளை மட்டுமே உண்டு உயிர் வாழ்வர். இவ்வாறு நோன்பு நோற்று வாழும் துறவிகளே பெரியவர்கள் என்று கூறுவர். ஆனால் பிறர் சொல்லுகின்ற மனம் விரும்பும்படியான சொற்களைப் பொறுத்துக் கொள்பவர்களே அத்துறவிகளே மேலானவர்கள் ஆவர். மேலும் வள்ளுவர்,

**"துறந்தாரின் தூய்மை உடையர் இறந்தார்வாய்**
**இன்னாச் சொல் நோற்கிற்பவர்" (திருக்.159)**
**"உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லும்**
**இன்னாச்சொல் நோற்பாரின் பின்" (திருக்.160)**

ஏன்ற குறள்களின் வாயிலாக, துறவிகள் என்பவர் தூய மனம் உடையவர் என்பதையும், பிறர் தன் மனம் வருந்தும்படியாகக் கூறுவதனையும் பொறுத்துக் கொண்டு வாழ்பவர்களே மேலானவர்கள் என்பதனை அறிந்து கொள்ள முடிகிறது.

**இல்லறத்தானே தலைமையானவன்**

துறவு வாழ்க்கை வாழ்பவனை விட இல்வாழ்க்கையில் ஈடுபட்டு நன்மக்களைப் பெற்று, மனையறம் காத்து, சுற்றம் தழுவி, சிறந்தன பலவற்றை மேற்கொண்டு வாழும் இல்லறத்தானே தலைமையானவனாகக் கருதப்படுகிறான். எந்நெறியாக இருந்தாலும் தன் நிலை மாறாமல் இயல்பாக இல்வாழ்க்கை மேற்கொள்பவனே தலைமையானவன் ஆவான் என்பதனை,

**"இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்**
**முயல்வாரள் எல்லாம் தலை" (திருக்.47)**

என்ற குறளின் வாயிலாக அறிந்து கொள்ள முடிகிறது.

மேலும், தவம், துறவு என்று நோன்பு நோற்பவர்களை விட, இனிய இல்லறமே சிறந்த நோன்மைத் தன்மை எடையதாகும் என்பதனை,

**"ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை**
**நோற்பாரின் நோன்மையுடைத்து" (திருக்.48)**

என்ற குறளின் வாயிலாக அறிந்து கொள்ள முடிகிறது.

**இல்லறத்தானே தெய்வம்**

இல்லற வாழ்வில் ஈடுபடுபவர்கள் மட்டுமே அறச்செயல்கள் பலவற்றில் ஈடுபடமுடியும். அதாவது குறிப்பாக விருந்து பேண முடியும். அங்ஙனம் நல்லறமாக இல்லறம் நடத்துபவனையே தெய்வம் என்று வள்ளுவர் சிறப்பித்துக் கூறியுள்ளார். இதனை,

**"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்**
**தேய்வத்துள் வைக்கப்படும்" (திருக்.50)**

என்ற குறளின் வாயிலாக அறிந்து கொள்ள முடிகிறது.

**தொகுப்புரை**

- இல்லற ஒழுக்கமே இல்லாளின் ஒழுக்கமாகும். ஏனெனில் இல்லற வாழ்வில் முதலிடம் வகிப்பவள் இல்லாளாகிய மனைவியே. இவள் தான் இல்லற வாழ்வில் முதலிடம் வகிக்கின்றாள்.

E-ISSN: 2581-7140

Special Issue I, August-2019 Available at: www.ijtlls.com

- தாய், தந்தை, குழந்தைகள் உறவு, தந்தை மகன் உறவு, தாய் மகன் உறவு ஆகிய உறவுகள் பற்றி அறிந்து கொள்ள முடிகிறது.
- துறவிகள் என்பவர் தூய மனம் உடையவர் என்பதையும், பிறர் தன் மனம் வருந்தும்படியாகக் கூறுவதனையும் பொறுத்துக் கொண்டு வாழ்பவர்களே மேலானவர்கள்
- துறவு வாழ்க்கை வாழ்பவனை விட இல்வாழ்க்கையில் ஈடுபட்டு நன்மக்களைப் பெற்று, மனையறம் காத்து, சுற்றம் தழுவி, சிறந்தன பலவற்றை மேற்கொண்டு வாழும் இல்லறத்தானே தலைமையானவனாகக் கருதப்படுகிறான்.
- இல்லற வாழ்வில் ஈடுபடுபவர்கள் மட்டுமே அறச்செயல்கள் பலவற்றில் ஈடுபடமுடியும். அதாவது குறிப்பாக விருந்து பேண முடியும். அங்ஙனம் நல்லறமாக இல்லறம் நடத்துபவனையே தெய்வமாகக் கருதுவர்.

**பயன்பட்ட நூல்கள்**

1. மு.வ. திருக்குறள், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1985.
2. திருக்குறள் - க.ப. அறவாணன், தாயமாள் அறவாணன் அறக்கட்டளை, சென்னை.